

பத்தாயிரம் உடன்பிறப்புகள் சூழ, அமைச்சர் சகாக்களோடு, அமர்ந்திருந்த தமிழக முதல்வர், இப்படியொரு திடீர் அற்புதம் நடக்கும் என்று கனவு கூட கண்டிருக்க மாட்டார். ஒரு சின்னஞ்சிறு தேவதை வானிலிருந்து திடீர் பிரசன்னமாகி, கையோடு கொண்டு வந்த கடிதம் ஒன்றை அவரிடம் கொடுக்க, அதை முதல்வர் ஆர்வமாய்ப் பிரித்துப் படிக்க, சொர்க்கத்திலிருந்து அறிஞர் அண்ணா தன் தம்பிக்கு (கலைஞருக்கு) எழுதிய வாழ்த்து மடல் அது! 'என்னய்யா ரீல் விடுறீர்'... என்று கேட்கும் வாசகர்கள் செப்டெம்பர் பதினேழாம் தேதி சென்னை வள்ளுவர் கோட்டம் வந்திருந்தால் புரிந்திருக்கும். வராத வாசகர்கள் மேற்கொண்டு படிக்கலாம்.

• சுகன்யா

# கலைஞருக்குக் கடிதம் கொடுத்த தேவதை!

தி.மு.கழக முப்பெரும் விழாவையொட்டி, இளைஞர் அணி சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிகழ்ச்சி, வேர்கள்... விழுதுகள். திருச்சி கலைக் காவிரி தயாரித்து வழங்கிய இந்தப் பல்சுவை கலை நிகழ்ச்சி, இரண்டு மணி நேரம் எல்லோரையும் வசியம் செய்துவிட்டது. முதல்வர், முதல்வர் குடும்பத்தினர், மேயர் மு.க.ஸ்டாலின் இளைஞரணித் தொண்டர்கள், பொதுமக்கள் என்று வள்ளுவர் கோட்டம் நிரம்பி வழிந்தது. இளைஞரணித் தலைவர் என்ற முறையில் ஸ்டாலின் மட்டும் இரண்டு நிமிடம் பேசி விட்டு இறங்க, செவண்டி எம்.எம். மேடையில் நிகழ்ச்சி தொடங்கியது.

பகுத்தறிவுப் பகலவன் பெரியாரின் சமூகப் பணி, அவரைத் தொடர்ந்து

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

அண்ணாவின் ஆற்றல் மிக்க ஆட்சி என்று தொடர்ந்த நிகழ்ச்சி, அண்ணா வழியில் கலைஞர் ஆட்சியின் சாதனைகள் சமத்துவபுரம் தொடங்கி உழவர் சந்தை வரை எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னது.

நிகழ்ச்சியின் இறுதியில் வீடியோஸ்கோப் திரையில் அண்ணா தோன்றினார். அவர் வானுலகில் இருக்கிறார் என்பதைத் தெரிவிக்க பின்னணியில் மேகங்கள் நகர்ந்து கொண்டிருந்தன. அண்ணா மனத்தில் படித்தபடி கடிதம் எழுதுகிறார்.

**"தேர்தல் வெற்றிக்காக என்னிடம் கணையாழி பெற்ற நீ, சமுதாயப் பணிகளைச் சிறப்புறச் செய்து வருகிறாய். நோய்வாய்ப்பட்டு இருந்த என்னை, அதிகம் வேலை செய்யாதீர்கள் என்று தடுத்தாய். ஆனால் எழுபத்தெட்டு வயதிலும் கடுமையாக உழைக்கிறாய். எனவே நீ நீண்ட ஆயுளுடன், பணி செய்ய வாழ்த்துகிறேன்... இப்படிக்கு அண்ணா"** என்று எழுதி, அதைச் சுருட்டி நீட்டுகிறார். அதை ஒரு பிஞ்சுக் கரம் பெற்றுக் கொள்கிறது. அடுத்தகணம் வீடியோஸ்கோப் திரை நிறுத்தப்பட, உடன் மேடையில் வெளிச்சம். வானுலகில் மடலைப் பெற்ற அந்தச் சின்னத் தேவதை மேடையிலிருந்து கீழே இறங்கி, முதல்வர் இருக்கும் இடம் தேடி வருகிறாள். வியப்பில் அரங்கமே கை தட்டலில் அதிர்கிறது. தேவதை கலைஞரிடம் கடிதத்தைக் கொடுக்க... அதில் அண்ணாவின் மடல். சின்னத் தேவதையைச் செல்லமாய் அணைத்துக் கொள்கிறார் முதல்வர். பகுத்தறிவிற்கு மீறிய கற்பனைதான் என்றாலும் நிஜ தேவதையே வந்த மாதிரி உடன்பிறப்புகளின் முகத்தில் மகிழ்ச்சி.

**ம**டல் கொடுத்த ஏழு வயது சுகன்யா திருச்சி புனித ஜோசப் கான்வென்ட் மாணவி. 'இப்படியொரு வாய்ப்பு கிடைக்கும்னு எதிர்பார்க்கலே. கலைக்காவிரிக்குத்தான் நன்றி சொல்லணும்' என்கிறாள் பெரிய மனுஷியாக...! ஸாரி, ஒரு சின்ன தேவதையாக!

— **ஜெயந்தன்**

படம்: **திருச்சி மாடர்ன்**

# ஏ.கே. பெருமாள்!



• சுபாஷிணி

கொலுவுக்குப் பொம்மைகளைப் படியில் வைப்பார்கள். சுபாஷிணி பார்த்தசாரதி வீட்டில் ஒரு தனி அறை முழுக்கப் பொம்மைகள்!

"எல்லாம் பழைய துணிகளை வைச்சுப் பண்ணினது. தீபாவளிக்குக் கம்பி மத்தாப்பு கொளுத்தினா, அதோட உள் கம்பியை அப்படியே வச்சிருப்போம். அதுக்குத் துணி, பஞ்சு எல்லாம் சுத்தி பொம்மையாப் பண்ணிடுவோம்!'' என்கிறார் சுபாஷிணி.

அப்பா சுந்தர்ராஜன், அம்மா நிர்மலாவும் உதவிக்கு வந்து, மணி, பூ எல்லாம் வைத்து, அழகாக பெயின்ட் பண்ணிக் கொடுப்பார்களாம்.



• சுந்தர்ராஜன்

''ரங்கநாதர் பொம்மை, பிள்ளையார் சதுர்த்திக்கு மண் வருகிறபோது வாங்கி என் பாட்டி பத்மா வரதாச்சாரி பண்ணினார். வீட்டு வாசல்ல, தோட்டத்துக்குள்ளேயே ஒரு பெரிய மரம் பழசாகி விழுந்த போது, அதோட 'ஸ்டெம்' நல்ல உயரமா இருந்தது. அதுக்கு ஒரு முகமும் இருந்தது. கொஞ்சம் செதுக்கி, கைகள் எல்லாம் வச்சு, புடவை உடுத்தி, பெண் மாதிரி தோட்டத்திலேயே வாசல் பக்கம் வச்சிருந்தோம். அது நிஜமாவே ஒரு பெண்ணுன்னு நினைச்சு எத்தனையோ பேர், 'கதவைத் திறம்மா'ன்னு சொல்லி ஏமாந்திருக்காங்க... அந்த பொம்மையை மாத்தி, வெங்கடாசலபதியா முகம் மட்டும் வாங்கிச் சேர்த்து, பிரபை எல்லாம் பண்ணி, ஸ்ரீநிவாசப் பெருமாளாப் பண்ணிட்டோம். ரெண்டு வருஷம் முன்னால அவர் கையில வாள், ஏ.கே-47 துப்பாக்கி எல்லாம் கூடக் கொடுத்து, ரொம்ப மாடர்ன் பெருமாளா வச்சிருந்தோம்!'' என்றார் சுபாஷிணி.

சிறியதும் பெரியதுமாக ஏராளமான பொம்மைகள். கறிகாய் வியாபார தம்பதி, கிருஷ்ணர் கோபிகைகளுடன் (வாயில் வெண்ணெய் வழிய!) கீதோபதேசம், சிமெண்ட் குளம் கூட வீட்டிலேயே பண்ணி, உள்ளே துணியால் செய்த யானை பொம்மை (மிகப் பொருத்தமாக, தந்தங்களுக்கு இரண்டு பால்பாயின்ட் பேனா!) பாதாம் பருப்புத் தோலில் முதலை செய்து, கஜேந்திர மோட்சம்....

பிரம்மோற்சவத்தில் ஒவ்வொரு நாள் சுவாமியை ஊர்வலமாகக் கொண்டு வருவார்கள் அல்லவா? அப்படியே அப்பட்டமாக யானை வாகன ஊர்வலக் காட்சியைப் பொம்மையில் உருவாக்கியிருக்கிறார் பத்மா வரதாச்சாரி. பட்டாச்சாரியாரின் உடை அலங்காரம், சுவாமிக்கு விசிறி, குடை எல்லாமே துணியால் தைத்து பிரமிக்க வைத்திருக்கிறார்!

பாரம்பரியத்தோடு ஒட்டி வந்த கலையை ஒதுக்கி வைத்து விடாமல், அப்படியே பாதுகாத்து வருவதோடு, இன்னும் புதிது புதிதாகப் பொம்மைகளைச் செய்து சேர்த்து வருகிறார்கள்...'' ஒவ்வொரு வருடமும் ஒவ்வொரு தீம் கொலு-இந்த வருடம் பெருமாளின் பல்வேறு தோற்ற அழகுகள்தான் தீம்'' என்கிறார்கள்.

— சித்தார்த்

படங்கள்: ஸ்ரீஹரி

# அடையாள அட்டைக்கு

**வாக்காளர் அடையாள அட்டை கொடுக்கும் பணி இரண்டாம் கட்டமாகத் துவங்கியுள்ளது. இந்த விவகாரத்தில் உள்ள குழப்பங்கள், குளறுபடிகள் பற்றி தலைமை தேர்தல் அதிகாரி நரேஷ்குப்தாவிடம் கேட்டோம்!**

**கேள்வி : வாக்காளர்களுக்கு அடையாள அட்டை வழங்குவதில் மற்ற மாநிலங்களை ஒப்பிடும் போது தமிழகம் மிகவும் பின்தங்கி இருப்பதாகத் தலைமை தேர்தல் அதிகாரி கூறியுள்ளாரே!**

பதில் : அடையாள அட்டை கொடுக்கும் பணியில் முதல் கட்டத்தின் போது 28 சதவிகித வாக்காளர்களுக்கு மட்டுமே கொடுக்க முடிந்தது. அதற்குப் பின்னர் உடனடியாக இரண்டாவது கட்டத்தைத் துவக்க முடியவில்லை. பாராளுமன்றத் தேர்தல்கள், இடைத் தேர்தல்கள், வாக்காளர் பட்டியல் திருத்தும் பணி இப்படி தொடர்ந்து வந்ததால் இரண்டாவது கட்டம் தாமதமானது. தவிர, தேர்தல் கமிஷன் சப்ளை செய்த நமூனாக்களைத் தமிழில் மொழிமாற்றம் செய்ய வேண்டியிருந்தது. முதல் கட்டத்தின் போது வாக்காளர் அடையாள அட்டையில் தொடர் எண் (சீரியல் நெம்பர்) கொடுப்பதற்கு ஒவ்வொரு மையத்திற்கும் மூவாயிரம் எண்கள் என்று ஒதுக்கியிருந்தோம். அதில் குழப்பம் இருந்ததால் வேறு ஒரு புதிய முறை கொண்டு வர வேண்டியிருந்தது. மென்பொருள் வடிவமைப்பதிலும் தாமதம். இது போன்ற காரணங்களால் இரண்டாவது கட்டப் பணி தாமதமானது. அதே சமயத்தில் மற்ற மாநிலங்கள் வேகத்தைக் காட்டின. இப்போது நாமும் ஈடுகொடுத்து ஐம்பத்து நான்கு சதவிகிதத்தை அடைந்துவிட்டோம்.

**கே: முதல் கட்டத்தில் புகைப்படம் எடுத்த ஆயிரக்கணக்கானவர்களுக்கு அடையாள அட்டை ஏன் வழங்கப்படவில்லை?**

ப : சுமார் 35 லட்சம் வாக்காளர்களுக்குப் புகைப்படம் எடுத்தும் அட்டை கொடுக்கப்படவில்லை. காரணம், தவறான விவரங்கள் அட்டையில் இடம் பெற்றதுதான். முதல் கட்டத்தில் போட்டோவை தனியே எடுத்து, பின்னர் விவரங்களையும் போட்டோக்களையும் இணைக்க வேண்டியிருந்தது. வெளியூரில் எடுக்கப்பட்ட போட்டோக்களும் விவரங்களும் சென்னைக்கு கொண்டு வர வேண்டியிருந்தது. இரண்டையும் இணைத்து கார்டு தயாரிக்கும்போது பல



• உடனடியாக அடையாள அட்டை

குழப்பங்களும் தவறுகளும் ஏற்பட்டன. ஆனால் இப்போது ஆன்லைனில் புகைப்படம் மற்றும் விவரங்கள் ஒரே சமயத்தில் அட்டையில் ஏற்றப்படுவதால் தவறுகள் பெருமளவு குறைக்கப்படும்.

**கே: பல மையங்களில் பார்க்கும்போது வாக்காளர்கள் உற்சாகத்தோடு கலந்து கொள்வது போல் தெரியவில்லையே?**

ப: விவசாய வேலைகளில் பிஸியாக இருப்பதால் கிராமப்புறங்களில் மக்கள் ஆர்வம் காட்டவில்லை

என்று நினைக்கிறேன். அடுத்ததாக நம் நாட்டில் வாக்காளர்களை வோட்டுச் சாவடிக்கு அழைத்து வருவதே அரசியல்வாதிகள் தான். அவர்கள் ஏனோ இந்த விஷயத்தில் ஆர்வம் காட்டாமல் இருப்பது ஆச்சர்யமாக இருக்கிறது.



• நரேஷ்குப்தா



டுப் போட முடியும் என்று கூட நினைக்கலாம். இந்த இரண்டாவது கட்டப் பணிக்கு நன்கு விளம்பரம் செய்துள்ளோம். அது தவிர வாக்காளர்களுக்குப் புகைப்படம் எடுக்கும் பணி நடப்பது குறித்து நோட்டீஸ் அடித்தும் கொடுத்துள்ளோம்.

**கே : சென்ற முறை புகைப்படம் எடுக்கப்பட்டு அட்டை கொடுக்கப்படாதவர்கள் இந்த முறை அடையாள அட்டை மையத்துக்குச் சென்றால் ஆன் லைனில் கொடுக்காமல் இரண்டு, மூன்று ஃபாரம்களை நிறைவு செய்து தரும்படி கேட்கிறார்களே!**

ப: ஒவ்வொரு வாக்காளரைப் பொறுத்த வரையிலும், வாக்காளர் பட்டியலில் ஏற்கெனவே என்ன விவரங்கள் இருக்கிறதோ அவற்றை அப்படியே கம்ப்யூட்டரில் ப்ரோக்ராம் செய்துள்ளோம். யார் யாருக்கு அடையாள அட்டை கொடுக்கப்படவில்லை என்ற விவரமும் பட்டியலில் இருக்கும். அதனால் கொடுக்கப்படாதவர்களுக்குப் பிரச்னை இல்லை. உடனே கொடுத்து விடலாம். ஆனால் ஒரு வாக்காளருக்கு அடையாள அட்டை எண் கொடுக்கப்பட்ட விவரம் வாக்காளர் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருந்து டெலிவரி செய்யப்படாமல் இருந்தால் அது போன்ற வாக்காளர்களுக்கு ஆன் லைனில் மற்றொரு முறை கொடுக்க முடியாது. அவர்கள், சம்பந்தப்பட்ட தாசில்தார் அலுவலகத்தை அணுகி தயார் செய்யப்பட்ட அட்டையைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதேபோல் அட்டையில் உள்ள விவரங்களில் திருத்தம் வேண்டுவோர் ஃபாரம் நிறைவு செய்து அட்டையை ஒப்படைக்க வேண்டும். ஒரு மாதம் கழித்து திருத்தப்பட்ட அட்டையை தாசில்தாரிடம் பெற்றுக் கொள்ளலாம். இந்தத் திருத்தங்களை ஆன் லைனில் செய்ய முற்பட்டால், அது பல தில்லுமுல்லுகளுக்கு வழிவகுக்கும். புகைப்பட மையத்தில் எந்தப் புதிய தகவலையும் சேர்க்கவோ அல்லது எடுக்கவோ முடியாத அளவுக்குப் ப்ரோக்ராம் செய்து 'லாக்' செய்திருக்கிறோம்.

# இல்லாட்டம் ஏன்?

ஆனால் அதே சமயம், தமிழ் நாட்டின் சராசரி வாக்குப் பதிவு 58 – 60 சதவிகிதம் வரைதான் இருந்திருக்கிறது. அந்த அளவுக்காவது வாக்காளர் அடையாள அட்டை விநியோகிப்பதை முதலில் முடிக்க வேண்டும். மேலும் தமிழ்நாட்டில் ரேஷன் கார்டு முறை மிக நன்றாக அமுல்நடத்தப்பட்டு வருகிறது. வாக்காளர்கள், ரேஷன் கார்டை எடுத்துக் கொண்டு போனால் வோட்

**கே : முதல் கட்டத்தின் போது தயார் செய்யப்பட்ட**



**''என்னது... நீங்க, உங்க மகள் வீட்டுக்குப் போனா வெந்நீர்தான் குடிப்பீங்களா? ஏன் அப்படி?''**

**''உன் வீட்டுல இனிமே பச்சத் தண்ணி குடிக்க மாட்டேன்னு என் சம்பந்திகிட்ட ஒரு சண்டையில சபதம் செய்துட்டேன்!''**

**— விட்டுக்கட்டி மு. பெரியசாமி**

***ஆயிரக்கணக்கான அடையாள அட்டைகள், இரண்டு மாதங்கள் முன்பு வரை கூட விநியோகிக்கப்படாமலேயே இருந்திருக்கின்றன. உதாரணமாக தாம்பரம் தாசில்தார் அலுவலகத்தில் நாங்களே பார்த்தோம். ஆயிரம் விளக்குத் தொகுதியைச் சேர்ந்த அட்டைகள் கூட அங்கு இருக்கின்றன!***

ப : (அதிர்ச்சியுடன்) அப்படியா... விநியோகிக்கப்படாத அட்டைகளை மையத்துக்குக் கொண்டு வந்து இப்போது விநியோகிக்கச் சொல்லியிருக்கிறோம்.

***கே : சில உள்ளூர் அரசியல்வாதிகள் இந்த விநியோகப் பணியில் ஈடுபட்டதால்தான் அந்தப் பணி சரியாக நடத்தப்படவில்லை என்கிறார்களே!***

ப: எந்தக்காரணம் கொண்டும் அரசியல்வாதிகளிடம் இந்தப் பணி கொடுக்கப் படக்கூடாது. ஏதாவது குறிப்பாக புகார் இருந்தால் சொல்லுங்கள் விசாரித்து நடவடிக்கை எடுக்கிறேன். (நாம் பேட்டி கண்டதற்கு அடுத்த நாள் துணைச் செயலாளர் ஒருவரை தாம்பரம் தாசில்தார் அலுவலகத்துக்கு அனுப்பி விநியோகிக்கப்படாமல் அட்டைகள் இருக்கின்றனவா என்று சோதனை செய்தார் நரேஷ்குப்தா. முதல் கட்டப் பணியில் தயாரிக்கப்பட்ட அட்டைகளின் கடைசித் தவணை எல்காட்டிலிருந்து கடந்த ஜூன் மாதம் வந்ததாகவும் அவற்றைத் தற்போது மையத்திற்கு எடுத்துச் சென்று விநியோகிக்கும் பணி நடந்து வருவதாகவும், தாசில்தார் அலுவலக அதிகாரிகள் தெரிவித்துள்ளனர். இந்தத் தகவலை நம்மிடம் பின்னர் தெரிவித்தார் நரேஷ் குப்தா.)

***கே : அடையாள அட்டை இல்லாவிட்டாலும், பாஸ்போர்ட், டிரைவிங் லைசென்ஸ் போன்ற அடையாளங்களை வைத்திருப்பவர்கள் அவற்றை வைத்து வோட்டுப் போடலாம் என்று தலைமை தேர்தல் கமிஷனர் சொல்லியுள்ளாரே?***

ப : சுப்ரீம் கோர்ட் மிகத் தெளிவாக, "வாக்காளர் அடையாள அட்டை வைத்திருந்தால்தான் வோட்டுப் போட அனுமதிக்க வேண்டும்' என்று சொல்லியிருக்கிறது. கடைசி கட்டத்தில் வேண்டுமானால் சூழ்நிலைக்கு ஏற்ப கோர்ட் அனுமதியுடன் சில விதிவிலக்குகள் வரலாம்.

***கே : வரும் சட்டமன்றத் தேர்தலில் மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களை எல்லா தொகுதிகளிலும் பயன்படுத்தப் போவதாகச் சொல்லியிருக்கிறீர்கள். முக்கியமான எதிர்க்கட்சியான அ.தி.மு.க. இந்த முறையை எதிர்க்கிறதே!***

ப : அரசியல் கட்சிகளுக்குப் பதில் சொல்ல விரும்பவில்லை. ஆனால் மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களைப் பயன்படுத்தினால் விரைவாக வோட்டுப் பதிவு முடியும்; முடிவும் தாமதமில்லாமல் தெரிந்துவிடும்.

***கே: மின்னணு இயந்திரம் பயன்படுத்தினால் கள்ள வோட்டு ஒழிந்துவிடுமா?***

ப: அப்படிச் சொல்ல முடியாது. வன்முறை மற்றும் அதிகாரிகளின் கூட்டுறவு இருந்தால் மின்னணு இயந்திரம் இருக்கும் வாக்குச்சாவடியைக் கூட ''கைப்பற்றி''ச் செயல்படும் சாத்தியம் உண்டு.

***கே : பதினெட்டு வயது நிறைவடையும் புதிய வாக்காளர்கள் தங்கள் அடையாளங்களைத் தெரிவித்து ஆன் லைனில் உடனே அட்டையைப் பெறும் வகையில் மாவட்டத்துக்கு ஒரு நிரந்தர அடையாள அட்டை மையம் நிறுவலாமே!***

ப: இது பரிசீலனையில் இருக்கும் யோசனைதான். தேர்தல் கமிஷனை கலந்தாலோசித்து நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும்.

சந்திப்பு : **ப்ரியன்**
படங்கள் : **ராஜன்**

# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

**உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்**

## டெபாசிட் திரட்டும் முகாம்

## மும்பை

**பம்பாய் ஆர்ய வைஷ்ய சங்கம் ஹால்,**
**கன்யகா பரமேஸ்வரி கோயில் வளாகம்**
**403, வாசவி நிலையம், டெலாங் சாலை,**
**மாதுங்கா, மும்பை - 400 019.**
**தொலைபேசி : 4021709**

**நாள் : 11 முதல் 13 அக்டோபர், 2000 வரை**

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

# 12.12%

12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%
24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%
36, 48, 60 மாதங்களுக்கு மாதந்திற்கு 12.00%, காலாண்டிற்கு 12.12%

# 16.34%

60 மாதங்களுக்கு
(மாதாந்திர கூட்டுவட்டி
ஆண்டிற்கு 12.00%)

## தூத்துக்குடி

**நாள் : 3, 4 அக்டோபர், 2000**

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

## ராஜபாளையம்

**நாள் : 5 அக்டோபர், 2000**

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**




*மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும்**
**அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**
(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)
பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894.

28-9-00 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

# காந்தி ஜெயந்திக்கும்

ஆயிரக்கணக்கில் இளைஞர்கள் வந்து போகும் அந்த கிராமமும்கூட இளமையானது. சுதந்திரம் பெற்ற 1947- ஆம் ஆண்டுதான் அந்தக் கிராமமும் பிறந்தது. உயர் கல்வியின் வாசனையை நுகர முடியாத, கிராமப்புற மாணவர்களுக்கு, அவர்களின் வீட்டு வாசலுக்கே அதை எடுத்துச் செல்லும் கிராமியப் பல்கலைக் கழகம்தான் அந்த ஊரின் மணிமகுடம். அது சுவாசிக்கச் சொல்லித் தந்த தேசத் தந்தையின் பெயரால் உருவாக்கப்பட்ட காந்தி கிராமம்!

திண்டுக்கல்லில் இருந்து மதுரை செல்லும் சாலையில் பதினோறு கிலோமீட்டர் பயணம். பேருந்தை விட்டு இறங்கியதுமே, பொன்விழா வளைவு வரவேற்கிறது.

வளைவுக்குள் நீண்டு புறப்படும் சாலையில், காலைக் கல்லூரி முடிந்து, கொத்துக் கொத்தாய் மாணவ மாணவிகள் வந்து கொண்டிருக்க, உள்ளே நடக்கிறோம். மலையடிவாரத்தை ஒட்டிய பசுமையான காட்டுக்குள், கட்டடங்கள் ஆங்காங்கே கைநீட்டி அழைக்கின்றன. இடையே ஒரு கடை. கிராமியப் பல்கலைக் கழக கைவினைப் பொருட்கள் அணி வகுத்திருக்கும் கடை. சத்துமாவு தொடங்கி, சித்திரம் வரை, அனைத்தும் மாணவர்களின் படைப்பு. கொஞ்ச நேரம் மலைத்தபடி வேடிக்கைப் பார்த்துவிட்டு நடக்கிறோம். ரயில் பாதை ஒன்று குறுக்கிடுகிறது. தண்டவாளத்தை ஒட்டி ஒரு நினைவுக் கல்வெட்டு. அதில் காந்தியின் படமும் செய்தியும் பொறிக்கப்பட்டருக்கிறது. **'1946-ஆம் ஆண்டு காந்தி ரயிலில் மதுரை வந்தபோது, சின்னாளம்பட்டி கிராம மக்கள் ரயிலை மறித்து, காந்தியின் தரிசனத்தையும், ஆசியையும் பெற்ற இடம்'**

காந்தி கிராமத்தைப் பொருத்தமான இடத்தில்தான் உருவாக்கியிருக்கிறார்கள் என்று எண்ணியபடி நடக்கிறோம்.

மாணவ, மாணவிகள் வரிசை



• விதைக்கும் கருவி



• நிலக்கடலை உதிர்க்கும் சட்டம்

வரிசையாய் அணி வகுத்து நிற்கிறார்கள். அவர்களுக்கு முன்பு நின்றிருந்த அரச மரத்தின் முன்னால் மனுநீதிச் சோழன் பாணியில் ஒரு பெரிய வெண்கல மணியை தாங்கி நிற்கிறது தூண். ஒரு மாணவர் மணியை அடித்து விட்டு திரும்பவும் வரிசையில் வந்து நிற்கிறார். எல்லோரும் ஒன்றுபட்டு, ஒரே பாவத்தில், பிசிறில்லாத பிரார்த்தனை கீதம் இசைக்கிறார்கள். மீண்டும் மணி. சலசலப்பின்றி அமைதியாய்க் கலைந்து அவரவர் துறை நோக்கி நடக்கிறார்கள். ஒரு மாணவர் நம்முடன் பேசுகிறார்.

"இந்த இடத்தை பெல் கிரவுண்ட் என்று சொல்லுவோம். நேரு இந்த மணியை அடித்துத்தான் காந்தி கிராமத்தைத் தொடங்கி வைத்திருக்கிறார்'' என்ற தகவலைத் தந்துவிட்டு அவர், வகுப்பு நோக்கி விரைய, நாம் மீண்டும் நடக்கிறோம்.

'காந்தி கிராம கிராமியப் பல்கலைக் கழகம்' என்ற விளம்பரப் பலகையைத் தாங்கியபடி பிரதான நிர்வாகக் கட்டடம் கண்களில் முப்பத்தொன்பது துறைகளிலும் புகுந்து புறப்பட்டு வந்தோம்.

மொழிப்பிரிவில் தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, மலையாளம், பிரெஞ்சு மொழிகளைக் கற்கலாம். கணிதம், இயற்பியல், பொருளாதாரம், அரசியல் அறிவியல், மின்னணுவியல், கூட்டுறவு, காந்திய சிந்தனை, கிராமப்புற புனர்நிர்மாணம், சமூகவியல், கிராமப் புற தொழில்கள், காதி, கைத்தறி தொழில் நுட்பம், ஊரக வங்கியியல், இரசாயனம், இல்லற அறிவியல், உயிரியல், ஊரக பொறியியல், விவசாயம், விதை உற்பத்தி, பால் பண்ணை, தோட்டக் கலை, கிராமப்புற திட்டமிடல் மற்றும் ஆராய்ச்சி, நூலக அறிவியல், மரபுசாரா எரிசக்தி, கம்ப்யூட்டர் அறிவியல் என்று மூச்சு வாங்கும் எண்ணிக்கையில் இளங்கலை மற்றும் முதுகலைப் படிப்புகள், ஒவ்வொரு துறையிலும் முனைவர் பட்டம் பெறத் தனிப் பிரிவு என வியக்க வைக்கிறது காந்தி கிராம கிராமியப் பல்கலைக் கழகம். குறிப்பாக கடந்த நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்ட எம்.சி.ஏ படிப்பில் சேர மெரிட் மாணவர்கள் இடையே கடும்

# நூற்றாண்டை அணியும் கிராமம்!

படுகிறது. துணைவேந்தரைச் சந்திக்கலாம் என்றால் அவரது இடம் நான்கு மாதமாக நிரப்பப்படவில்லை என்றார்கள். பதிவாளர் கிராமப்புற முகாம்களைப் பார்வையிடச் சென்றுவிட்டார் என்றார்கள். அதனால் என்ன... காந்தி கிராமம் முழுவதையும் நாங்களே சுற்றிக் காட்டுகிறோம் என்று பல்கலைக் கழக அலுவலர்கள் போட்டி போட்டுக்கொண்டு முன் வர, காந்திகிராமத்தில் நமது ஜீப் பயணம் தொடங்கியது. மொத்தமுள்ள



• நெல் உலர்த்தும் மேடை



• கதிர் அடிக்கும் மேடை

போட்டி. இந்தப் படிப்பில் பயிலும் எல்லா மாணவர்களையும், 'வளாக நேர்காணல்' மூலம் சாப்டுவேர் நிறுவனங்கள் நேரடியாக வேலைக்கு அமர்த்திக் கொள்கிறார்களாம்.

இங்கு பயிலும் மாணவர்கள், ஒவ்வொரு செமஸ்டரின் போதும், நான்கு நாட்கள், ஒரு கிராமத்தில் தங்கியிருந்து, அந்த கிராமத்தைப் பற்றி ஆய்வு செய்வதோடு, அந்தக் கிராமக் குழந்தைகளுக்கு அடிப்படை கல்வியும் போதிக்க வேண்டும் என்பது கிராமியப் பல்கலைக் கழக கல்வியின் பிரத்தியேகக் கல்வி அம்சம். இதற்கென்று தனித் துறையே செயல்படுகிறது. இந்தத் துறை

மணக்குளம் மணிவாசம்



• டாக்டர் ராமச்சந்திரன்

முப்பேத்தேழு கிராமங்களைத் தத்தெடுத்துக் கொண்டு, அங்கு மாணவர்களை அனுப்பி ஆய்வு செய்வதோடு, அந்தக் கிராமங்களின் முன்னேற்றத்திற்கும் உதவுகிறது.

ஐந்து லட்சம் புத்தகங்களோடு, கணிப் பொறிப் பட்டியல் வசதியையும் உள்ளடக்கிய பிரமாண்ட நூலகம் பிரமிக்க வைக்கிறது. நூலகத்தை அடுத்து இருந்த கிராமப்புற பொறியியல் மையம், நூற்றுக்கும் அதிகமான புதிய சாதனங்களைக் கண்டுபிடித்து, அதைக் கிராம மக்களுக்கு வழங்கியிருக்கிறது. கடலை, எள்ளு, உளுந்து ஆகியவற்றை விதைக்கும் இயந்திரம், செடியிலிருந்து நிலக்கடலை உருவும் கருவி, நெற்கதிர் அடிக்கும் மேடை, எள் உலர்த்தும் மேடை போன்றவை லேட்டஸ்ட் கண்டுபிடிப்புகள்.

"இந்தக் கருவிகள் ஒவ்வொன்றையும் ரூபாய் இருநூற்று ஐம்பதில் இருந்து எழுநூற்று ஐம்பதிற்குள் தயாரித்து விடலாம். மேலும் இதை யார் வேண்டுமானாலும் தயாரித்து விற்கலாம். அல்லது செய்து கொள்ளலாம். இத்தகைய கண்டுபிடிப்புகள் கிராம மக்களைப் போய்ச் சேர வேண்டும் என்பதால், காப்பிரைட் என்று யாரையும் பயமுறுத்துவது இல்லை" என்கிறார், இந்த மையத்தின் இயக்குனர் உதயகுமார். பல்கலைக் கழக அறிவியல் கருவிகள் மையம் ஆய்வுக்கூட ஆராய்ச்சிக்குத் தேவையான சாதனங்களை, குறைந்த விலையில் செய்து கொடுப்பதோடு, அது தொடர்பான பயிற்சிகளையும் வழங்குகிறது. பழுதான டியூப் லைட்டுகளைக் கொண்டு, ஆய்வுக் கூடத்தில் பயன்படும் கண்ணாடிக் குடுவைகள் முதலான கருவிகளை ஐந்து முதல் இருபத்தைந்து ரூபாய் விலையில் செய்து கொடுக்கிறார்கள். ஆனால் சந்தையில் இத்தகைய கண்ணாடிச் சாதனங்களின் விலை கேட்போரை அதிர்ச்சியடையச் செய்யும்" என்றார் இந்த மையத்தின் முதுநிலை அலுவலர் முனுசாமி.

கிராமப்புற தொழில் அதிபர்களை உருவாக்க தனி மையம், கிராமியக் கலைகளை வளர்க்கவும், பயிற்சி அளிக்கவும் தனி மையம் என்று ஒரு முழுமையான கிராமியப் பல்கலைக் கழகமாக விளங்கி வரும், காந்தி கிராமத்தில் ஜப்பான், பிரான்ஸ், ஆப்ரிக்கா போன்ற நாடுகளில் இருந்தும் மாணவர்கள் வந்து தங்கிப் படிக்கிறார்கள். படிப்பு முடிந்ததும், மாணவர்களுக்கும், பல்கலைக் கழகத்திற்கும் தொடர்பு அறுந்து போய் விடாமல் இருக்க, வேலை வாய்ப்பு பிரிவு செயல்படுகிறது.



•சௌந்தரம் அம்மையார்

புதுதில்லி காந்தி மியூஸியத்திற்கு அடுத்து காந்தியைப் பற்றியும், அவர் கனவு கண்ட கிராம சமுதாயம் குறித்தும், எளிமையான தமிழில் விளக்கும் ஒரு முழுமையான மியூசியம் இங்கு இருக்கிறது. மியூசியத்தின் பொறுப்பாளர் டாக்டர் மீ. மல்லம்மாள் நம்முடன் பேசினார். "காந்தியின் தீவிர சீடர்களான டாக்டர் டிஎஸ். சௌந்தரம் அம்மையாரும், அவரது கணவர் ராமச்சந்திரனும் சேர்ந்து உருவாக்கிய கிராமம் இது. தொடக்கத்தில் கஸ்தூரிபாய் ஆயுர்வேத மருத்துவமனை மருந்தகம், கதர் உற்பத்தி என்று ஆரம்பித்து 1956ல் கிராமியப் பல்கலைக் கழகத்தைத் தொடங்கினார்கள். பல்கலைக் கழகத்தை மத்திய அரசு எடுத்துக் கொண்டதும் காந்தி கிராம அறக்கட்டளை தனியே செயல்பட்டு வருகிறது" என்றவரிடம் விடைபெற்று வெளியே நடக்கத் தொடங்கியபோது ஆச்சர்யம். வெள்ளை நிற யூனிபார்ம் அணிந்து நூறு மாணவ மாணவிகள் மார்ச் செய்து வந்து கொண்டிருந்தனர். அவர்கள் அனைவரும் 'காந்திசேனை'யின் உறுப்பினர்கள். அகிம்சை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட காந்தி சேனை, இந்தியாவிலேயே காந்தி கிராமப் பல்கலைக் கழகத்தில் மட்டும்தான் இருக்கிறது.

கிராமம் உயர நாடு உயரும் என்ற காந்திஜியின் கொள்கைக்குத் தமிழகத்தில் செயல் வடிவம் தரும் பணியில், பெரும்பங்கு ஆற்றியிருக்கும் கிராமியப் பல்கலைக் கழகத்தைவிட்டு வெளியே வந்து, கிராமவாசிகள் சிலரிடம் பேசக் கொடுத்தோம். சுதந்தரம் கிடைத்த ஐம்பது ஆண்டு காலத்தில், இந்தக் காந்தி கிராமம் பஞ்சாயத்தில், பிராந்திக் கடையோ, இறைச்சிக் கடையோ இன்றளவும் அனுமதிக்கப்படவில்லை என்றவர்கள், 'காந்தி ஜெயந்தி அன்று தான் வெடி வெடித்துப் புத்தாடை அணிகிறோம்' என்கிறார்கள்.

— ஜெ.

படங்கள்: ராஜன்



ஸ்ரீநிதி, படித்து வாங்கினது டாக்டர் பட்டம் என்றால், மேடையில் நடனமாடி வாங்கிக் குவித்தப் பட்டங்கள் கலைமாமணி தொடங்கி, நடனமாமணி, யுவ கலா பாரதி என்று நிறைய உண்டு. இந்தப் பட்டியலில் லேட்டஸ்ட்டாய் சேர்ந்திருப்பது இவ்வாண்டு இசை விழா சீசனில், கிருஷ்ணகான சபா வழங்கவிருக்கும் பட்டம்.

மூன்று வயதில் காலில் சலங்கை கட்டிக் கொண்டு பரதம் படிக்க வந்தவர் ஸ்ரீநிதி. படிப்பில் படுசுட்டி. எல்லா வகுப்பிலும் முதல் ரேங்க். அப்பா, அம்மா இரண்டு பேருமே டாக்டர்கள் என்பதால் இவருக்கு சிறு வயது முதலே டாக்டராக வேண்டும் என்று ஆசை. அதே சமயம், அப்பா, அம்மா இரண்டு பேரும் நோயாளிகளைக் கவனிப்பதிலேயே தங்களின் பெரும்பான்மையான நேரத்தைச் செலவிடுவதைக் கண்டு அனுபவித்ததன் விளைவாக, அப்போதே ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டார். நாம் படித்து, டாக்டரானால், இது போல கினிகிக்கே கதி என்று இருந்து விடக் கூடாது என்பதுதான் அது.

ஸ்ரீநிதியின் பரதநாட்டிய வாழ்க்கையிலும் கிடுகிடு ஏற்றம்தான். 'அட! யார் இந்தக் குழந்தை' என்று மற்றவர்கள் கவனிக்கத் தொடங்கிய போது வயது ஐந்து; அரங்கேற்றத்தின் போது வயது ஏழு; பத்தாவது வயதுக்குள் இந்தியாவில் மட்டுமின்றி, கடல் கடந்து போய் பரதநாட்டியமாடவும் பல அழைப்புகள். இன்று இவர் வழங்கியுள்ள நாட்டிய நிகழ்ச்சிகளின் எண்ணிக்கை முந்நூறு பிளஸ்!

"பாரம்பரியமான முறையில் பரதம் ஆடுவதையே நான் விரும்புகிறேன். அதில்

# நாட்டியத்தில் மரபு; மருத்துவத்தில் புதுமை!

இன்னும் முயற்சி செய்து பார்க்கப்படாத விஷயங்கள் ஏராளமாக உள்ளன. எனவே மாடர்ன் என்ற பெயரில், மரபு மீறிய விஷயங்களை முயற்சித்துப் பார்ப்பதில் எனக்கு இஷ்டமில்லை. நான், 'புதுமைப் பெண்' என்ற தலைப்பில் பாரதி படைப்புகளின் அடிப்படையில் வழங்கிய நாட்டிய நிகழ்ச்சி கூட மரபு மீறாத ஒரு முயற்சிதான். அதற்கு நல்ல வரவேற்பு" என்கிறார் ஸ்ரீநிதி.

இவரின் கணவர் கார்த்திக் சிதம்பரம், முந்நாள் மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்தின் மகன்.

*'பரதநாட்டியத்தைப் பொறுத்தவரை உங்களுடைய திருமணத்துக்கு முன், திருமணத்துக்குப் பின் என்ன வித்தியாசத்தை உணர்கிறீர்கள்?''*

"மருத்துவக் கல்லூரியில் எம்.டி. படித்தபோது, நடனம் பிராக்டீஸ் செய்ய இஷ்டம் போல நேரம் கிடைக்காது. அப்போது மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறேன். திருமணத்துக்குப் பின், அது போன்ற டென்ஷன் இல்லை. நடனத்துக்கென திட்டமிட்டு, நேரம் ஒதுக்க முடிகிறது" என்று கூறும் ஸ்ரீநிதி, கருவுற்றிருப்பதால் இப்போது சில மாதங்களுக்கு பரதநாட்டியத்துக்கு 'இடைவேளை' அளித்திருக்கிறார்.

"இன்று மத்தியதர வர்க்கத்தினரைப் பொறுத்தவரை காஸ்ட்லியான விஷயமாகி விட்டது பரத நாட்டியப் பயிற்சி. எனவே, அவர்களுக்குக் கட்டுப்படியாகும் வகையில் பரதநாட்டியம் சொல்லித் தரத் திட்டம் இருக்கிறது. பெரிய அளவில் நாட்டியப் பள்ளி ஆரம்பிக்கும் எண்ணம் கிடையாது. லிமிட்டுடன், நிறுத்திக் கொள்ளுவேன். வெறும் நாட்டியத்துடன் இல்லாமல், பாட்டு உட்பட இன்னும் சில விஷயங்களையும் சேர்த்துச் சொல்லித் தர ஆசை" என்று சொல்லும் ஸ்ரீநிதிக்கு இன்னும் ஒரு முகம் உண்டு. ஆமாம்! அவர் 'ஹெல்த் ஃபர்ஸ்ட்' என்று ஒரு அமைப்பை நடத்தி வருகிறார். நடனத்தைத் தவிர, இதன் பணி பற்றியும் ஆர்வமாகப் பேசுகிறார் ஸ்ரீநிதி. சமுதாயத்தில் உடல்நலம் பற்றிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவது உட்பட ஏராளமான திட்டங்களை இது செயல்படுத்துகிறது.

"பெண்களுக்கு, குழந்தைகளுக்கு என்று பொதுவான நலத் திட்டங்களை அரசு நிறைவேற்றி வருகிறது. ஆனால் குறிப்பாக வயது வந்த (அடலசன்ட்) பெண்களுக்கு என்று பிரத்யேக கவனம் செலுத்த நாம் அக்கறை காட்டுவதில்லை. அடலசன்ட் பருவம், எந்த ஒரு பெண்ணின் வாழ்க்கையிலும் குழப்பங்கள் நிறைந்த ஒரு பருவம். தம் உடல் ரீதியாகவும், மனோ ரீதியிலும், சமுதாயத்தின் பார்வைகளாலும் இந்தப் பருவத்தில் பெண்களுக்கு ஏற்படும் தொல்லைகள், சந்தேகங்கள், பிரச்னைகள் அநேகம். ஆனால், அவர்களின் சந்தேகங்களுக்கு விளக்கம் சொல்ல, பிரச்னைகளுக்குத் தீர்வு சொல்ல, பெற்றோர்கள் முன் வருவதில்லை; ஆசிரியர்களும் தங்கள் வேலை





• கார்த்திக் சிதம்பரம்

யில்லை அது என்று நினைத்து ஒதுங்கி விடுகிறார்கள். அரை குறை அறிவு கொண்ட சிநேகிதிகளிடமிருந்து பெறும் அறிவு, அவர்களுக்குச் சில சமயங்களில் ஆபத்தாகிவிடுகிறது.

''இதை மனத்தில் வைத்துக் கொண்டு சென்னை மாநகராட்சியின் பதினைந்து பெண்கள் பள்ளிக்கூடங்களில் எங்கள் அமைப்பின் சார்பில் அரசின் நிதி உதவியுடன் மருத்துவ முகாம், உடல் நலம், உடல் அமைப்பு பற்றிய விஞ்ஞான பூர்வமான உண்மைகள், பருவப் பெண்களின் பிரச்னைகள் என்று பல்வேறு விஷயங்கள் குறித்தும் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி வருகிறோம். எங்களின் அனுபவமும், திறமையும் மிகுந்த ஆலோசனை நிபுணர்கள் பள்ளி மாணவிகளைச் சந்தித்து, அவர்கள் பிரச்னைகளைக் கேட்டறிந்து, அவற்றுக்குத் தீர்வுகளை எடுத்துச் சொல்லி, ஆலோசனை வழங்குகிறார்கள். இவ்வாண்டு மட்டும், இத்திட்டத்தின் மூலம் மூவாயிரம் மாணவிகள் பயன் அடைந்துள்ளனர்.''

''டாக்டர் என்றால் கிளினிக் வைத்து பணம் சம்பாதிப்பார்கள். நீங்கள் பொதுச் சேவை அமைப்பு நடத்திக் கொண்டிருக்கிறீர்களே?''

''சிறு வயதில் டாக்டராக ஆசைப்பட்ட போதே, கிளினிக், பிராக்டீஸ் மீது எனக்கு ஆர்வம் இல்லை. பொதுவாக சமுதாயம் பயன்பெறும் வகையில் ஏதாவது செய்ய வேண்டும் என்றே விரும்பினேன். அதனால் தான் மருத்துவ மேற்படிப்பில், கம்யூனிடி மெடிசன் என்கிற பிரிவைத் தேர்ந்தெடுத்தேன். எங்கள் பணியின் ஒரு அங்கமாக, மலேரியா போல ஒரே சமயத்தில் பலருக்குப் பரவும் வகையான நோய்கள் மக்களை எப்படி, ஏன் தாக்குகின்றன என்று ஆய்வு மேற்கொள்கிறோம்'' என்றவரிடம், ''உங்கள் கணவர் உங்களுடைய நாட்டியம் மற்றும் மருத்துவப் பணிகளுக்கு எவ்வளவு தூரம் உதவுகிறார்!'' என்றோம்.

''அவருக்குப் பிசினஸ் இருக்கிறது. அதில் அவர் பிசி. எனவே, நான் விரும்பிய பணியில் என்னால் ஈடுபட முடிகிறது. என்னை அவ்வப்போது உற்சாகப்படுத்துவார். எனக்கும் அவர் பிசினஸ் பற்றி ஒன்றும் தெரியாது'' ஒருவரது துறை இன்னொருவருக்கு பரிச்சயமில்லாதது என்றாலும், நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறோம்! அது தானே வாழ்க்கையில் மகிழ்ச்சிக்கு அடிப்படை?''

மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு டாக்டர் ஸ்ரீநிதி பிரிஸ்க்ரிப்ஷன் தந்தால் அவர் கணவர் கார்த்திக் சிதம்பரம் அதில் கையெழுத்துப் போடுகிறார்!

''எனக்கு டான்ஸ் பற்றியும் சரி, மருத்துவம் பற்றியும் சரி ஒன்றும் தெரியாது. எனக்கு என் பிசினஸ்தான். ஸ்ரீநிதிக்குப் பிடித்ததை அவள் செய்து வருகிறாள். அவளுடைய திறமைக்கு அங்கீகாரம் கிடைப்பது எனக்கு சந்தோஷமளிக்கிறது. என் பிசினஸ் பற்றி என்னிடம் கேட்டால், என்னால் நிறைய பேச முடியும்'' என்கிறார் சிதம்பரம்.

சந்திப்பு : **பாரதிமௌலி**

## சுழலும் அதிசயக் கல்!

குளித்தலையிலிருந்து கரூர் செல்லும் வழியில் உள்ளது லாலாப்பேட்டை கிராமம். இங்கு ஒரு பழைமையான ஆஞ்சநேயர் கோயில். அங்கு ஒரு கல் இருக்கின்றது. ஒரு காரியத்தை மனத்தில் நினைத்துக் கொண்டு பக்தியுடன் அதன் மீதேறி பாதமிரண்டையும் பதித்து, கைகள் இரண்டையும் தரையில் ஊன்றிக் கொள்ள வேண்டும். காரியம் ஜெயம் எனில் அந்தக் கல் அபாரமாய் சுழன்று வட்டமடிக்கும். இல்லையேல் கல் சுழலாது. காஞ்சிப் பெரியவர் ஒரு முறை அங்கு விஜயம் செய்திருந்தபோது அந்தக் கல் மீது ஏறி அமர அத்தனை அற்புதமாய் சுழன்று வட்டமடித்து அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்திருக்கிறது அந்தக் கல்!

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# ஒவ்வொரு முதலீட்டாளரின் புத்திசாலித்தனமான தேர்வு




| கவர்ச்சிமிகு வரி-இல்லா வருமானம் | முதிர்வின்போது மூலதன பாதுகாப்பு |
|---|---|

மார்ச் 2000-ல் சொத்துகளின் விற்பனைக்கு 54 EA-ன் கீழ் கடைசி வாய்ப்பு*

- மூன்று விருப்பத்தேர்வுகளின் ஒரு 5 ஆண்டு க்ளோஸ் எண்டு ப்ளான்
- முதல் ஆண்டுக்கான வரி–இல்லாத வருமானம் :
  i) வருடாந்திர–க்யுமுலேடிவ் விருப்பத்தேர்வு – 10.20% ஆண்டொன்றுக்கு
  ii) மாதாந்திர விருப்பத்தேர்வு – 9.75% ஆண்டொன்றுக்கு அடுத்துவரும் காலத்திற்கும்/வருடங்களுக்குமான இன்கம் டிஸ்ட்ரிபூஷன் விகிதம் ஒவ்வொரு மார்ச் மாதத்தில் முன்னதாகவே அறிவிக்கப்படும்
- முதலீடு குறிக்கோள் & சொத்து பங்கீடு : 80%–க்கு குறைவின்றி கடன் (பணச் சந்தைப் பத்திரங்கள் உட்பட) மற்றும் 20%–க்கு மேலின்றி ஈக்விட்டிகளிலும் ஈக்விட்டி சம்பந்தமான பத்திரங்களிலும்
- குறைந்தபட்ச முதலீடு : ரூ. 10,000/– முக மதிப்பில் யூனிட்டுகளின் விற்பனை
- மூலதனத்தின் பாதுகாப்பு : முதிர்வின்போது யூனிட்கள் முகமதிப்பிலோ அல்லது NAV–யிலோ எது அதிகமோ அதில் மறுமுதலீடு செய்யப்படும். இதற்கான பாதுகாப்பை DRF தருகிறது. இந்த உத்தரவாதம் முதிர்வுக்கு முன் செய்யும் மறுகொள்முதலுக்கு பொருந்தாது.
- பணமாக மாற்றுதல் : 3 ஆண்டுகளுக்குப் பிறகு மறுகொள்முதல் வசதி, NAV அடிப்படை விலையில், NSE–ன் ஹோல்சேல் டெப்ட் செக்மென்டிலும் லிஸ்ட் செய்தல்.
- மார்ச் 2000–ல் விற்கும்/பெயர் மாற்றம் செய்யும் நீண்ட கால சொத்துகளை குறித்து 54EA விலக்கை பயன்படுத்திக் கொள்ள முடியும்.
- ECS மூலம் வருமானம் வரவு வைக்கப்படும் எங்கெல்லாம் இவ்வசதி கிட்டிக்க முடியுமோ அங்கெல்லாம்.

---

முதிர்வுறும் MIP 95 (II) யூனிட்தாரர்கள் தங்கள் முதிர்வு தொகையை 1-9-2000 தேதியிலிருந்து ஆதாயம் பெறும் வகையில் MIP 2000 (தேர்டு) திட்டத்தில் முதலீடு செய்யலாம். அதற்கு MIP 95 (II)–ன் பணமாக மாற்றப்படாதமுதிர்வுத் தொகை ரூ. 10,000/- மற்றும் அதற்கும் அதிகமான காசோலையுடன் கூடிய MIP 2000 (தேர்டு) விண்ணப்பத்தை 15-9-2000 அன்று அல்லது அதற்கு முன்பு சமர்ப்பிக்க வேண்டும்.

---

மேலும் விவரங்களுக்கும், விண்ணப்பபாரம்/ஆஃபர் பத்திரத்திற்கும் தயவு செய்து உங்களுக்கு அருகாமையிலுள்ள யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை அணுகவும்.




## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

இந்தியாவின் மிகப்பெரிய மியூச்சுவல் ஃபண்ட்

18, சர் விட்டல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரைன் லைன்ஸ், மும்பை 400 020.
தொ : 2081818, 2092998. எங்களிடம் வருக : www.unittrustofindia.com

CWPL-UTI-TAM-112/2000

அமைப்பு விதித் தொகுதி: யூடிஐ சட்டம் 1963–ன் விதிகளின் கீழ் யூடிஐ இயங்குகிறது. இடர்ப்பு நிலைமைகள் : மியூச்சுவல் ஃபண்ட் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத்தாழ்விற்கு உட்பட்டவை. திட்டத்தின் என்ஏவி திட்டத்தின் போர்ட் ஃபோலியோவை பாதிக்கும் காரணங்களால் ஏறவோ இறங்கவோ செய்யலாம். கடந்தகால செயல்பாடுகள் எதிர்கால பலன்களை சுட்டிக்காட்டுவதாகாது. ஃபண்டின் குறிக்கோள் சாதிக்கப்படும் என்பதற்கு உறுதியளிக்க முடியாது. காலவரைக்கு முன்பான மறு கொள்முதலுக்காக மூலதன பாதுகாப்பு உத்தரவாதம் அளிக்க முடியாது மற்றும் இத்தகைய நிலைகளில் மறுகொள்முதல் விலை என்ஏவியைப் பொறுத்தது. மன்த்லி இன்கம் ப்ளான் 2000 (தேர்டு) என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரம். எதிர்கால வருமானம் அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

---

**கிளை அலுவலகம் :** சென்னை : 6210866, 6280986 • கோவை : 214979 • மதுரை : 788186 • திருச்சி : 760060
**தெற்கு மண்டல அலுவலகம் :** சென்னை : 6210847 • **ஃப்ரான்சைஸ் அலுவலகம்:** சேலம் 416414 **CR கலெக்ஷன் சென்டர்ஸ் :** கூனூர் : 81087 • கடலூர் : 21712 • தர்மபுரி : 61012 • திண்டுக்கல் : 482244 • ஈரோடு 262494 • காஞ்சிபுரம் : 20076 • காரைக்குடி : 22277 • மயிலாடுதுறை : 26789 • நாகர்கோயில் : 40274 • புதுவை : 889080 • ராஜபாளையம் : 21860 • தஞ்சாவூர் : 81874 • திருநெல்வேலி : 889667 • தூத்துக்குடி : 326621 • **யூடிஐ பாங்க் :** அண்ணா நகர்: 6283046 • ராதாகிருஷ்ணன் சாலை : 8281086 • தி.நகர் : 8289184–86

**விற்பனை ஆகஸ்ட் 30, 2000 முதல் அக்டோபர் 13, 2000 வரை திறந்திருக்கும்**

## முக்கூட்டு மருந்து சாப்பிட்டு கர்ப்பம் தரித்த தம்பதி

### உண்மை நிகழ்ச்சி!

அருகே போட்டோவில் உள்ள தம்பதிகளாகிய சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியராகிய நாங்கள் திருமணமாகி, நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று பலனின்றி, தோல்வியுற்ற பின்னர், சென்னை வடபழனியிலுள்ள 'நவீன வைத்தியாலயா' டாக்டர் அர்ஜுனாவிடம் சென்றோம். அவர் எனக்கு உயிரணு உற்பத்தி அதிகரிக்கச் செய்யவும், என் மனைவியின் கருப்பை சம்பந்தமான குறைபாடுகளை சரிசெய்யவும் முக்கூட்டு மருத்துவ சிகிச்சை யளித்தார். தற்போது எங்களுக்கு மலட்டுத்தன்மை நீங்கி, புத்திரபாக்கியம் அடைந்துள்ளோம். என் மனைவி மூன்று மாத கர்ப்பவதியாக உள்ளார்.

மேலும் இந்த டாக்டர், ஆண்களில் உயிரணுக்கள் குறைவாக உள்ளவர்களுக்கு உயிரணு உற்பத்தி செய்து, அபிவிருத்தி செய்தும், பெண்களுக்கு மாதவிடாய் பிரச்னை ஒழுங்குபடுத்தியும், கருப்பை ஓவரிகளை சரிசெய்தும், கருக்குழாய் அடைப்புகளை நீக்கியும், கருப்பையிலும் சினைப்பைகளில் உள்ள கட்டிகளை கரைத்தும் குழந்தை பிறக்கச் செய்கிறார்கள். குழந்தை இல்லாத தம்பதிகள் டாக்டர் அர்ஜுனாவைச் சந்தித்தால் புத்திரபாக்கியம் அடையலாம்.

• சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா - அலமேலு தம்பதியர் உலகப் புகழ்பெற்ற மருத்துவ திலகம் டாக்டர் அர்ஜுனாவுடன்

நவீன வைத்தியாலயா ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் நெ.9 நெற்குன்றம் பாதை, (டி.எஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் : 4833464 எஸ்டிடி. 044 செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் :

வீடு : நெ. 30, பிராமணர் தெரு, வந்தவாசி,

திருவண்ணாமலை மாவட்டம் – 604 408 போன் : 25208 எஸ்டிடி. 04183

Visit us at : www.naveenainfertilityhospital.com e-mail.doctorarjuna @naveena infertility hospital.com

---

# Charulatha's

# சாருலதாஸ்

(ஏ.ஸி) சாரி ஷாப்

Ph. : 8212427, 8205409 A/C SHOW ROOM

பெங்கால் காட்டனின் தனியுலகம்

கல்கத்தா பேன்ஸி சேலைகள்

**ஜாம்ஜாம் என்று பூம்பூம்**

**சக்கலகாவில் ஆரம்பித்து சித்தியின் அரவணைப்பில் இருந்து சாவித்திரியின் வாழ்க்கையில் நுழைந்து பவித்திர பந்தமாக அனுராக சங்கமமாகும் வண்ணமிகு சாருலதா சேலைகள்!**

தீபாவளி வரை 10% தள்ளுபடி - தினசரி ஒரு பரிசு - தீபாவளியன்று மெகா பரிசு

**Timing : 10 a.m. to 9 p.m. (Sundays open till deepavali)**

சாருலதா
Ratna Fan House
RAJA BADAR ST.
Naidu Hall
PANAGAL PARK
PONDY BAZAR

36, Rajabadhar Street, (Ratna Fan House Basement) (Lane Back-Side Naidu Hall) Pondy Bazaar, T. Nagar, Chennai - 17

இம்மாதம் முதல்
★ சேமிப்பு சீட்டு
★ குலுக்கல் சீட்டு
திட்டங்கள் ஆரம்பம்




2000 அக்டோபர் 1
விக்ரம புரட்டாசி 15
மலர் : 59
இதழ் : 9


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அமைச்சரவையில் சிதம்பரம்?

கணிசமான தொழில் ஒப்பந்தங்கள் செய்து கொண்டு திரும்பியிருக்கிறார் பிரதமர். அவரது அமெரிக்க விஜயத்துக்கு வெற்றிவிழா எடுக்கப்படுகிறது. அந்த அமர்க்களத்தில் ஒரு முக்கியமான செய்தி கவனிக்கப்படாமலே கடந்து போய்விட்டிருக்கிறது.

அமெரிக்க நிறுவனமான ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனியின் சேர்மன் ஜான் வெல்ச், இந்தியா வந்து போனார். பிரதமர் அமெரிக்காவில் ஒப்பந்தங்கள் கையெழுத்திட்ட அதே நாளில், இங்கு புதுடெல்லியில் உரையாற்றினார், சர்வதேச நிறுவனமான ஜெனரல் எலக்ட்ரிகல் கம்பெனியின் தலைவர் வெல்ச்:

"தேசத்தைக் கம்ப்யூட்டர் மயமாக்கி, ஸாஃப்ட்வேர் சொர்க்கமாக்கி எந்தப் பலனும் இல்லை. அடிப்படை வசதிகள் அபிவிருத்தியில் இந்தியா மிகவும் பின் தங்கியிருக்கிறது. மின் உற்பத்தி போதிய அளவில் அதிகரிக்கவில்லை. இந்நிலை தொடர்ந்தால் இருபத்தோறாம் நூற்றாண்டின் டிஜிடல் புரட்சியில் இந்தியாவுக்கு இடமே இல்லாமல் போய்விடும்."




- வெல்ச் விடுத்த இந்த எச்சரிக்கை, செய்தித்தாளில் அச்செழுத்தாக நின்று போய்விட்டது.

மிக முன்னேறிய அமெரிக்காவிலேயேகூட கம்ப்யூட்டர்மயமான பிறகு மின்தட்டுப் பாடு உண்டாகிறது என்றும் சுட்டிக்காட்டியிருக்கிறார் வெல்ச். அவ்வாறிருக்க, ஏற்கெனவே மின்தட்டுப்பாட்டில் திணறும் இந்தியாவின் கதி என்ன ஆகும்?

இந்நிலையில் பிரதமர் அமெரிக்காவில் செய்துள்ள தொழில் ஒப்பந்தங்களுள் மின் உற்பத்தித் திட்டங்களும் அடங்கியிருக்கின்றன என்பது சற்றே ஆறுதலான விஷயம்.

ஆனால், இந்தியப் பொருளாதாரத்தைக் கவனிக்கும்போது இந்த ஒப்பந்தங் களினால் நற்பயன் விளையுமா? காலத்தில் விளையுமா? என்பது மிகப் பெரிய கேள்விக் குறி.

ரூபாயின் மதிப்பு (டாலருடன் ஒப்பு நோக்க) வரலாறு காணாத வீழ்ச்சி அடைந்திருக்கிறது. இந்திய பங்குச் சந்தையும் மிக மந்தமான நிலையிலேயே தொடர்கிறது.

போதா குறைக்கு சர்வதேச அளவில் பெட்ரோலிய எண்ணெய் விலையை உயர்த்த முடிவு செய்து விட்டன, எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகள். ரூபாய் மதிப்பு மிகக் குறைந்துவிட்டதால், எண்ணெய் விலை உயர்வால் நமது பொரு ளாதாரம் சவுக்கடி வாங்கப் போகிறது. விலைவாசி உயர்வும் பண வீக்கமும் அச்சுறுத்துகின்றன.

ரூபாயின் மதிப்பு குறையக் குறைய இந்திய இறக்குமதியாளர்களுக்கு




மட்டுமின்றி ஏற்றுமதியாளர்களுக்கும் திண்டாட்டம் அதிகரிக்கும். ஒவ்வொரு டாலரையும் பெறுவதற்கு உற்பத்தியை அதிகரிக்க வேண்டி வரும். தொழில் சூழலோ அதற்குச் சாதகமாக இல்லை.

அடுத்தடுத்து ஆட்சிக்கு வந்த அரசுகள் அடிப்படை வசதிகள் பெருக்கத்தில் போதுமான அளவு கவனம் செலுத்தாமல் விட்டதன் பலனை இப்போது அறுவடை செய்து கொண்டிருக்கிறோம்.

குறிப்பாக மின் உற்பத்தி வினியோகத்தில் நாம் முன்னேறாததும், அடைந்து வரும் நஷ்டமும் ஒரு துயர நெடுங்கதை.

இந்தச் சூழலில்தான், காலஞ்சென்ற மின்துறை அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் இடத்துக்கு, முன்னாள் நிதியமைச்சர் ப. சிதம்பரத்தை அழைக்க மத்திய அரசு திட்டமிட்டுள்ளதாகச் செய்திகள் அடிபடுகின்றன.

பா.ஜ.கவின் இந்த எண்ணம் செயல்வடிவம் பெறுமானால், காகித ஒப்பந்தங்களைக் காட்டிலும், காலக்கெடுக்குள் அடங்காத சீர்திருத்தங்களைக் காட்டிலும் நற்பயன் அளிக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

அரசியல் நோக்கைக் கடந்து ஒருவரை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வது பல புதிய முன்னேற்றக் கதவுகள் திறக்க வழிவகுக்கும்.

அவ்வாறு தேர்வு செய்யப்படும் நபர், தகுதியும் திறமையும் உள்ளவர் என்னும் போது, தொழில்துறை முழுவதுமே உற்சாகமும் புத்துணர்வும் பெற்று நிமிர்ந்து கொள்ளும் வாய்ப்பு பிரகாசமாகிறது. ○

# இது நிஜக்கதை!

இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, டெல்லியிலிருந்து சென்னைக்குப் புறப்பட்ட ஒரு விமானம், இடையில் விபத்துக்குள்ளானது. அதில், சென்னையைச் சேர்ந்த ஜெயா, தம் கணவரைப் பறி கொடுத்தார். இந்த விஷயத்தைக் கேள்விப்பட்ட அர்த்தநாரி, ஜெயாவின் குடும்பத்தினரை அணுகி, தாம் ஜெயாவைத் திருமணம் செய்து கொள்ளத் தயார் என்றார். அர்த்தநாரி - ஜெயா திருமணம் எளிமையான முறையில் நடந்து முடிந்தது. அர்த்தநாரி, ஜெயாவைத் திருமணம் செய்து கொள்ள முன் வந்ததற்கு முக்கியமான காரணம், ஜெயாவின் கணவரின் உயிரைப் பறித்த அதே விமான விபத்தில்தான், அர்த்தநாரியும் தம் மனைவியை இழந்திருந்தார்.

• ரிதம் படத்தில்...



• வஸந்த்

- இருபத்தைந்து வருடங்களுக்கு முன் நடந்துவிட்ட இந்தச் சம்பவம்தான், இப்போது நான் எடுத்திருக்கும் 'ரிதம்' படத்துக்குக் கரு' என்கிறார் டைரக்டர் வஸந்த்.

விமான விபத்துக் காரணமாக நிகழ்ந்த மரணங்களும், திருமணமும் என் மனத்தில் ஆழமாய்ப் பதிந்துவிட்டன. 82ம் வருடத்தில், நான் இயக்குனர் கே. பாலசந்தரிடம் அசிஸ்டென்ட்டாகச் சேர்ந்தேன். 87ல் நான் வசித்த ஆஞ்சனேயா அபார்ட்மெண்டில் எனக்கு அடுத்த ஃப்ளாட்டிலேயே குடி வந்தார்கள் அர்த்தநாரி - ஜெயா தம்பதி. அப்போதுகூட, அவர்கள் வாழ்க்கையில் நடந்ததை நான் சினிமாவுக்கான கருவாய்ப் பார்க்கவில்லை.

கேளடி கண்மணி, நீ பாதி நான் பாதி இரண்டும் வெளியான பின், அடுத்த படத்தின் கதை என்ன என்று யோசித்தேன். எனக்குத் தெரிந்தவர்களின், வாழ்க்கையில்

நடந்த சம்பவங்களைப் பட்டியல் போட்டுப் பார்த்தேன். அதில் அர்த்தநாரியின் கதையும் இடம் பெற்றது. ஆனாலும், அதை படம் எடுக்க வேண்டும் என்ற உந்துதல் எனக்குள் இடம் பெறவில்லை. அப்புறம் ஆசை, நேருக்கு நேர், பூவெல்லாம் கேட்டுப் பார், அப்பு என்று ஒரு ரவுண்டு முடித்து விட்டு, மறுபடி கேளடி கண்மணி போல ஒரு எமோஷனல் சப்ஜெக்ட் பண்ண முடிவு எடுத்தபோது உடனடியாக என் நினைவுக்கு வந்தது அர்த்தநாரி தம்பதி கதைதான். அதற்கு இன்னொரு முக்கிய காரணமும் உண்டு. நெருங்கிய ஒருவரது மரணம் நம் வாழ்வின் முடிவு இல்லை என்பது நான் பத்து வயதில் கற்றுக் கொண்ட பாடம். என் நெருங்கிய உறவுக்காரர் ஒருவர் இறந்து விட்டார். நான் அவருக்கு ரொம்ப செல்லம் என்பதால், எனக்குத் துக்கம் தாளவில்லை. அது என்னை ரொம்ப பாதித்தது.

● மேடையில் என்ன தோன்றுகிறதோ அதைக் கொள்கையாக அடித்துப் பேசி, அடுத்தவனுக்கும் புரியாமல் தனக்கும் புரியாமல் செய்கிறார்களே அதுதான் அரசியல் ஸ்டண்ட்!''

– தமிழ்வாணன்

தகவல்: கு. அருணாசலம்

''ஆனால், அவரை அடக்கம் செய்து விட்டு வந்தபின், வீட்டில் அனைவரும் டிபன் சாப்பிட்டதைப் பார்த்தபோது எனக்கு ஷாக். என் அம்மாவிடம் "இத்தனை மனக் கஷ்டத்தில் எப்படி இவர்களால் சாப்பிட முடிகிறது?'' என்று கேட்டேன். என் அம்மா, "மரணம் என்பதுடன் எல்லாம் முடிந்து விடுவதில்லை. மற்றவர்கள் வாழ்க்கைத் தொடரத்தானே வேண்டும். அதை உணர்த்த அனைவரும் சாப்பிட வேண்டும் என்பது நம் மரபு'' என விளக்கினார். என் அம்மா அன்று சொல்லிக் கொடுத்தப் பாடத்துக்கு விளக்கமளிப்பது போலத்தானே விமான விபத்தினால் ஏற்பட்ட மரணமும், திருமணமும்!

''விமான விபத்து என்பது, சராசரி சினிமா ரசிகனுக்கு ரொம்பவும் அன்னியப்பட்ட விஷயம் என்பதால், ரயில் விபத்து என்று மாற்றினேன்.''

"ஒரே ரயில் விபத்தில் கணவனைப் பறி கொடுக்கும் மீனாவும், மனைவியைப் பறி கொடுக்கும் அர்ஜுனும் திருமணம் செய்து கொள்ள முடிவு எடுப்பது சரி! அங்கே திடீரென்று மீனாவின் (பழைய) மாமியார் வரும் திடீர் திருப்ப எண்ணம் எப்படி வந்தது?''

''படத்தில், பாதி வரை மீனாவும், அர்ஜுனுமே ஒருவரையொருவர் விரும்ப வில்லை. எனவே, அவர்கள் திருமணத்துக்கு சினிமாத்தனம் கொண்ட வில்லன் யாரையும் நான் புகுத்த விரும்பவில்லை. மிக யதார்த்தமாக திருமணத்துக்கு இடையில் தடை வர வேண்டும் என்று யோசித்ததன் விளைவுதான் மாமியார் லட்சுமி கேரக்டர். அவர் மீனா - ரமேஷ் அரவிந்த் காதல் திருமணத்தை அங்கீகரிக்க மறுத்து, வீடு தேடி வந்த ரமேஷ் அரவிந்தையும் பார்க்க விரும்பாமல், விரட்டியதால்தான் அவன் அன்று அந்த ரயிலில் ஊர் திரும்ப நேரிடுகிறது; ஆக, தன் மகன் மரணத்துக்குத் தான் தான் காரணம் என்று தவிக்கிற லட்சுமி, பிராயச்சித்தம் தேடி மீனாவிடம் வருகிறார். அவரது நல்ல மனமாற்றமே, மீனா-அர்ஜுன் திருமணத்துக்குத் தடையாகி விடுகிறது. அது அவருக்குத் தெரிய வருகிறபோது மீனாவிடம், அன்று தெரிந்தே உங்களைப் பிரித்து வைத்தேன். ஆனால் இன்று (உண்மை) தெரியாமலேயே பிரித்து வைக்கப் பார்த்தேனே என்று துடிப்பதாகக் காட்சி அமைத்தேன்.

''படத்தின் எட்டிங்கின்போது அடுத்தடுத்தக் காட்சிகளை நான் மார்க் பண்ணித் தர, எடிட்டர் ஸ்ரீகர் பிரசாத், அர்ஜுனுடன் தனக்கு நடக்கப் போகும் திருமணம் குறித்த சந்தோஷத்துடன் மாடிப்படி ஓடி வரும் காட்சிக்கு அடுத்த காட்சியை மார்க் பண்ணிக் கொடுத்ததும், அதைப் பார்த்து விட்டு 'ஐயையோ!' என்றார். காரணம், மீனாவின் வீட்டில், இறந்த கணவரின் அம்மா லட்சுமி உட்கார்ந்திருப்பார். இதே எதிர்பாராத ரியாக்ஷன்தான் இன்று தியேட்டரில் படம் பார்க்கிறவர்களுக்கும்!

"காதல் என்றவுடன் ஜாதி, மதம், அந்தஸ்து என்று காரணம் காட்டி எதிர்க்கிறவர்களுக்கு இவை எல்லாவற்றையும்விட, உங்கள் மகன், மகளுடைய மனம், உயிர் பெரிது என்றுதான் நான் இந்தப் படத்தின் மூலம் சொல்ல விரும்புகிறேன்' என்கிறார் வஸந்த்.

விமான விபத்தில் நிஜத்தில் கணவரைப் பறி கொடுத்த அந்த ஜெயா, பத்திரிகையாளர் சாவியின் மகள்!

சந்திப்பு: **பாரதி மௌலி**

# அலைபாயும் அழகிய பரிசுகள் அறிமுகப்படுத்துவோர்க்காக!

நவராத்திரி விழாவில் ஸ்ரீராம் சிட்ஸ் வழங்குகிறது நல்லதொரு வாய்ப்பு. சந்தோஷத்தில் பெரிய சந்தோஷம் அடுத்தவர்களை சந்தோஷப்படுத்திப் பார்ப்பதுதான். எனவே உங்கள் நண்பர்களிடமும் ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்கள் பற்றியும் அத்திட்டம் உங்கள் வாழ்வில் வளம் சேர்த்த மகிழ்ச்சியான சம்பவங்கள் பற்றியும் எடுத்துச் சொல்லுங்கள். அவர்களையும் உங்களைப் போல் ஸ்ரீராம் சிட்ஸின் மதிப்புமிக்க சந்தாதாரர் ஆக்குங்கள். சீட்டில் சேர்பவர்களுக்கு காப்பர் பாட்டம் சில்வர் பேன் முதல் ஸ்டீல் டின்னர் செட் வரை பயனுள்ள பல பரிசுகள் காத்திருக்கின்றன.


பிளாஸ்டிக் கன்டெய்னர்


ராயல் சாஸ் பேன் மூடியுடன்


செல்லோ டிலைட் 3 கன்டெய்னர்


எஸ். எஸ். பிளேட்


ஸ்வாகத் 4 டிபன் கேரியர்


மில்டன் கூல் ரைடர்


வெள்ளி குங்குமச்சிமிழ்


அரேபியன் சட்டி மூடியுடன்

| சீட்டு மதிப்பு | அறிமுகப்படுத்துவோர் பரிசு |
|---|---|
| ரூ.10,000 | பிளாஸ்டிக் கன்டெய்னர் |
| ரூ.15,000 | ஏர்-டைட் கன்டெய்னர் |
| ரூ.25,000 | எஸ். எஸ். பிளேட் |
| ரூ.30,000 | எஸ். எஸ். பிளேட் |
| ரூ.50,000 | செல்லோ டிலைட் 3 கன்டெய்னர் |
| ரூ.75,000 | மில்டன் கூல் ரைடர் |
| ரூ.1,00,000 | ராயல் சாஸ் பேன் மூடியுடன் |
| ரூ.1,50,000 | அரேபியன் சட்டி மூடியுடன் |
| ரூ.2,00,000 | எஸ். எஸ். ஆயில் கேன் |
| ரூ.3,00,000 | ஸ்வாகத் 4 டிபன் கேரியர் |
| ரூ.5,00,000 | வெள்ளி குங்குமச் சிமிழ் |

அறிமுகப்படுத்துவோர் பரிசுகள் தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.




அறிமுகப்படுத்தும் உங்களுக்கும், நீங்கள் சேர்க்கும் நபர் சேரும் சீட்டு மதிப்பிற்கேற்ப பிளாஸ்டிக் கன்டெய்னர் முதல் வெள்ளி குங்குமச்சிமிழ் வரை பல வண்ணமயமான பரிசுகள் உள்ளன. இன்றே உங்கள் உறவினரையோ, நண்பரையோ சக அலுவலரையோ சீட்டில் சேர்த்து பரிசுகளை அள்ளிச் செல்லுங்கள்.




செப்டம்பர் 27 - அக்டோபர் 7



**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்**
சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு,
சென்னை - 600 002. போன்: 8461833 - 40.
www.shriramchits.com

WORDCRAFTS

**ஏ. கோபண்ணா தொகுத்த "மக்கள் தலைவர் மூப்பனார்" என்ற புத்தகத்தின் வெளியீட்டு விழா சமீபத்தில் காமராஜர் அரங்கத்தில் நடந்தது. அதிலிருந்து:**

● மேடையில் மூன்று வரிசைகளில் பேச்சாளர்கள் அமர்ந்திருந்ததைப் பார்த்த போது "சரி... இன்று விடிய, விடிய கச்சேரி தான்" என்று சற்று பயந்தே போனோம். ஆனால் ஆறரைக்குத் துவங்கி ஒன்பதரைக்கு முடித்து விட்டார்கள். தாங்கள் பேசாமல், தங்கள் தலைவரின் புகழை மற்றவர்கள் குரலில் கேட்டுத் திருப்தியடைவதோடு நிறுத்திக் கொண்டார்கள் த.மா.கா பிரமுகர்கள்.



● விழாவில்...

# மூப்பனாரிஸம்!

● பேச்சாளர்களில் அரங்கை கலக்கியவர் வழக்கம் போல சோ தான். "1967ல் காமராஜை தோற்கடித்த சாபம், மூப்பனாரை முதல்வராக ஆக்கினால்தான் தமிழ்நாட்டு மக்களை விட்டுப் போகும்... இது எப்படி நடக்கும்னு யோசிக்கறீங்களா... யார் "உள்ளே" போவாங்க... யார் வெளியே வருவாங்க என்றெல்லாம் இப்போதே சொல்ல முடியாது. மூப்பனார் வரும் தேர்தலில் யார்கூட கூட்டணி; எத்தனை சீட்டுகள் வாங்க வேண்டும் என்றெல்லாம் முடிவு செய்து வைத்திருப்பார். இருந்தாலும் எல்லோரிடமும் ஆலோசனை கேட்டுக் கொண்டே இருப்பார்" என்றவுடன் ஒரே கல கலா..! சோவின் பேச்சு மேடையில் இருந்த கி. வீரமணி மற்றும் அ.தி.மு.க இலக்கிய பிரிவு செயலாளர் புலமைப் பித்தன் ஆகியோரை நெளிய வைத்தது.

● 'என் தந்தையின் மறைவுக்குப் பிறகு எனக்குத் தந்தையாக, வழி காட்டியாக இருப்பவர் மூப்பனார்தான். உடல் நலம் சரியில்லாததால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருந்தேன். எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் விசாரிப்பதற்கு முன்னரே, ஆஸ்பத்திரிக்கு வந்து என்னைப் பற்றி டாக்டர்களிடம் விசாரித்தவர் மூப்பனார்தான். ஆனால் எனக்கு உடல் நலம் சரியில்லை என்றவுடன் எங்கள் கட்சிப் பிரமுகர்கள் நான் வகித்து வந்த கட்சிப் பொறுப்பிலிருந்து என்னை கழற்றி விட முயற்சித்தார்கள். இதெல்லாம் எங்கள் கட்சியில் சகஜம்தான்'' என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் சொன்னபோது அவையில் குபீர் சிரிப்பு.

● தமிழக அரசியலில் "மூப்பனாரிஸம்" என்ற புதிய அரசியல் சித்தாந்தம் செயல்பட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னார் 'விடுதலை சிறுத்தை' திருமாவளவன்.

● பாரதிராஜா பேசும் போது, ''என்னை மூன்று தலைவர்கள் தான் அன்புடன் 'பாரதி' என்று அழைப்பார்கள். ஒருவர் எம்.ஜி.ஆர்; அடுத்து கலைஞர்; பின்னர் மூப்பனார். நான் மதிக்கும் இந்த மூன்று தலைவர்களைப் பற்றி எந்த மேடையிலும் பேசுவேன்" என்றார். 1967 வரை அரசியலில் இருந்தாராம் பாரதிராஜா. "அப்புறம் வெறுத்து அரசியலை விட்டுவிட்டேன்" என்றார்.

● அன்று பாண்டியில் நடந்த பரபரப்பான அரசியல் திருப்பமாக கண்ணன் த.மா.காவைப் பிளந்துகொண்டு போக, தனது அரசு ஆட்டம் கண்டு கொண்டிருந்த நிலையிலும் மூன்று மணி நேரம் விழாவில் இருந்துவிட்டுதான் சென்றார் பாண்டி முதல்வர் சண்முகம்.

— ப்ரியன்

படம்: யோகா



• அடைப்புகள் நீக்கப்படுகிறது



• பைப் பதிக்கப்படுகிறது

# களத்தில் குதித்த இளைஞர்கள்!

குடிநீர் சப்ளை செய்த ஏரிகள் வற்றிப் போய், நிலத்தடி நீரும் பாதாளத்துக்குச் சென்றுவிட்ட நிலையில் மெட்ரோ வாட்டர் நிர்வாகம் "மழை நீரைச் சேமியுங்கள்" என்று கரடியாய்க் கத்திக் கொண்டிருக்கிறது. தண்ணீரைச் சேமித்து வைக்க நீர்நிலைகள் இல்லாத நிலையில், இயற்கை கருணை காட்டாத வருடங்களில் நிலத்தடி நீர் மட்டம் 200, 300 அடி என்று கீழே போய்விடுகிறது. குடிநீருக்குக் குடங்களுடன் ஒரு பக்கம் அலைவது இருக்க, மற்ற உபயோகங்களுக்கான நீருக்கும் கடும் தட்டுப்பாடு ஏற்பட்டு விடுகிறது.

இப்படித்தான் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலைச் சுற்றி இருக்கும் மக்களும் தண்ணீர் தட்டுப்பாட்டால் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். கோயில் குளத்தில் நீர் நிறைந்திருந்தால் சுற்றுவட்டாரத்தில் உள்ள கிணறுகளிலும் நீர் மட்டம் குறைந்திருக்காது. ஆனால் தெப்பம் விடுவதற்காக சிறிதளவு தண்ணீரைச் சேமித்து வைக்கும் நோக்கத்தில் குளத்தின் உள் பகுதியில் கான்க்ரீட் போட்டு விட்டார்கள். குளத்துக்கு நீர் வரும் பாதைகளும் அடைபட்டு போய் விட, குளத்தின் ஊற்றுக்கண்களும் மூடப்பட்டுவிட, சுற்றியிருக்கும் கிணறுகள் வறண்டு விட்டன. "150, 200 அடிக்கு ஆழகுழாய் போட்டுப் பயனில்லை. இதுவரை காலம் கடத்தி விட்டோம்; இனியும் சும்மாயிருந்தால் வீடுகளைக் காலி செய்துவிட்டுப் போகும் நிலைதான் ஏற்படும்; வருங்காலத்திலாவது, மழை நீரைக் கோயில் குளத்தில் சேமித்து வைக்கும் வழியைப் பார்க்க வேண்டும்" என்று களத்தில் குதித்து விட்டார்கள் ஸ்ரீநிவாஸ் இளைஞர் நற்பணி மன்றத்தைச் சேர்ந்த இளைஞர்கள்.

"கோயில் பிராகாரங்களில் சேரும் மழை நீர் குளத்தில் வந்து சேர அந்தக் காலத்திலேயே நீர்வரத்துப் பாதையை தெற்கு மாட வீதியில் அமைத்திருக்கிறார்கள். ஆனால் காலப் போக்கில் அந்தப் பாதை தூர்ந்து விட்டிருந்தது. 1991ஆம் வருடம் அ.தி.மு.க அமைச்சரவையில் இருந்த முகமது ஆசிப் டி.பி. கோயில் தெருவின் ஒரு பகுதியில் மழைக்காலத்தில் வெள்ளமாய்த் தேங்கும் தண்ணீரைக் குளத்துக்குத் திருப்பி விடும் வகையில் பூமிக்கு அடியில் பைப்புகள் போட்டுத் தெற்குமாட வீதியில் ஏற்கனவே உள்ள நீர்ப் பாதையோடு இணைத்துவிட்டார். தூர்ந்து போயிருந்த கால்வாயைச் சுத்தப்படுத்தினார். அதற்கடுத்து இரண்டு மூன்று வருடங்கள் டி.பி. கோயில் தெருவில் தண்ணீர் தேங்காமல் மழைநீர் குளத்துக்குத் திருப்பி விடப்பட்டது. கடந்த சில வருடங்களாக அந்தப் பாதையில் நீர் வரத்து இல்லை. காரணம், சில இடங்களில் பைப்புகள் உடைந்து விட்டன. மழைக் காலம் வர இருக்கும் நிலையில் உடைந்து போன பைப்புகளை மாற்றி, குளத்துக்கு நீர் செல்ல வேண்டியதன் அவசரத்தையும் அவசியத்தையும் புரிந்துகொண்டு உடனே செயலில் இறங்கி விட்டோம்" என்கிறார் மன்றத்தின் தலைவரான கணபதியும் செயலாளரான ரமணியும்.

சுமார் 150 அடி நீளம், ஐந்தடி ஆழத்துக்கு புதுப் பைப்புகள் போட வேண்டியிருந்தது. கட்டட காண்ட்ராக்டர் ஒருவர் பைப்புகளை இலவசமாகக் கொடுத்திருக்கிறார். லோக்கல் த.மா.கா கவுன்சிலரான நாகராஜன் மாநகராட்சி உதவியுடன் தமது முழு ஒத்துழைப்பையும் கொடுத்திருக்கிறார். புதுப் பைப்புகள் போடப்பட்டு, நீர் பாதை அடைப்புகள் இப்போது நீக்கப்பட்டுவிட்டன.

பெரிய சாதனையைச் செய்துவிட்ட திருப்தியில் இப்போது இயற்கையின் கருணையை எதிர்பார்த்து காத்திருக்கிறார்கள் இந்த இளைஞர்கள்.

— ரமா

படங்கள்: கே.வி.



நிற்கும் நண்பர் ஏகாம்பரம்... நாடக முடிவில் எதிர்பாராத திருப்பம் இருக்கிறது. அது இயல்பாகவும் அழுத்தமாகவும் இருப்பது கூடுதல் வலுவைச் சேர்க்கிறது.

வெறும் வசனத்தை



மேடை நாடகங்களுக்கு இது 'ரினாய்சான்ஸ்' நேரம் போல. 'கலாநிலைய'த்தின் சொந்தமில்லாத பந்தங்கள் அதைத்தான் உறுதி செய்தது.

அண்ணனின் குடும்பம்தான் தன் உலகம். அண்ணி ராஜி தன்

# சொந்தமில்லாத பந்தங்கள்

தாய்க்குச் சமம் என்று நினைத்து அவர்களை அரவணைத்து வாழும் தம்பி ராகவன். தன் பிள்ளைகள் சந்த்ரு, சுரேஷ் இவர்கள் மகிழ்ச்சியே தன் வாழ்க்கை லட்சியம் என்று விட்டுக் கொடுக்கும் ராஜி. ஆரம்ப நாட்களில் தங்கை ராஜியும், அவள் குழந்தைகளும் தனக்குப் பாரமாகிவிடுவார்களே என்று ஒதுங்கி, பிறகு ராகவனின் நிழலில் சந்த்ருவும் சுரேஷும் நல்ல வேலையில் அமர்ந்ததும் உறவு வைத்துக் கொள்ளத் திட்டமிட்டு, வெற்றியும் காணும் பத்மநாபன். அவர் பெண் லதாவைத் திருமணம் செய்து கொண்ட பின், அவர் பேச்சைக் கேட்டு, சித்தப்பாவையே வெறுத்து, அவர் செய்யும் ஒவ்வொரு செய்கையிலும் குற்றம் கண்டுபிடிக்கும் சந்த்ரு. அவற்றைக் கண்டு மனவேதனைப்படும் சுரேஷ். ராகவனுக்குத் தூண் போல் துணை

வைத்து மட்டுமே நாடகத்தை உருவாக்காமல், வலுவான கதையை வாசல்படியாக்கி, வசனங்களைத் தோரணம் போல், அறைக்கு அறை தொங்கவிட்டிருக்கிறார் சுந்தர். கே.எஸ். நாகராஜனின் 'கலா நிலையம்' தயாரிப்பு என்றாலே பாத்திரங்கள் அண்டர்ப்ளேதான் செய்வார்கள். மிகை சத்தமாக இருக்காது. உணர்ச்சிமயமான கட்டங்கள் நிறைய என்றாலும், இயற்கையாகப் புன்னகை பூக்க வைக்கும் தருணங்களும் இல்லாமல் இல்லை.

ஸெட் புத்தம் புதிசு. பளிரென்று துடைத்து வைத்த மாதிரி இருக்கிறது.

கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் சார்பில், ஆர்.ஆர். சபா அரங்கில் நாடகம் நடந்தபோது எழுநூற்றுச் சொச்சம் பார்வையாளர்கள் எழுந்து போகாமல் கட்டிப்போட்ட மாதிரி நாடகத்தை ரசித்த போதே, நாடகத்தின் வெற்றி உறுதியாகிவிட்டது. கதை-வசனம் எழுதி, இயக்கி, ராகவனாக நடித்தும் இருக்கும் கே.எஸ்.என். சுந்தர், சுமந்த பொறுப்புக்கள் எதிலும் சோடை போகவில்லை.

— சித்தார்த்

சுஜா பாக்கின் தரம், நிரந்தரம்,
சுப தினத்தின் வரம், பரவசம்

*Suppliers of high quality naturally Flavoured home made betelnut*

**S** uperior
**U** nique
**J** oyful
**A** romo

*(Available at Food world, Nilgiri's and other departmental stores)*

Contact:

**SUJA ENTERPRISES (SUPARI)**
No. 37, Agastiar street,
Ratnammal colony,
Saligramam, Chennai 600 093

SUJA SUPARI

Phone: 4803019/4724787
E.mail: vivek 2@ vsnl.com

---

ஸ்ரீ

# ஸ்ரீமத் பாகவதம்

## முன்விலைத் திட்டம்

ஸ்ரீவால்மிகி இராமாயணத்தைக் கம்பர் எவ்வாறு தமிழில் கம்பராமாயணமாக எழுதியுள்ளாரோ அதே போல ஸ்ரீவியாசரின் ஸ்ரீமத் பாகவதத்தை செவ்வைச் சூடுவார் தமிழில் ஓலைச் சுவடியில் எழுதியுள்ளார். இப்பாடல்களையும் எதிர் பக்கம் அழகிய தெளிவுரையையும் நூலாக வெளியிட உள்ளோம். ரூ. 1000/– மதிப்புள்ள நூலின் முன்விலை ரூ. 330/– ஆகும். மேலும் விபரங்களுக்கு **'ஸ்ரீமத் பாகவதம் ஓர் கண்ணோட்டம்'** என்ற இலவச வெளியீட்டை உடனே கேட்டுப் பெறவும்.

**ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்**

144, ஆழ்வார்பேட்டை தெரு,
ஆழ்வார்பேட்டை,
(V.M. கல்யாண மண்டபம் அருகில்)
சென்னை – 600 018.
போன் : 044–4335524.




---



# INSTITUTE FOR PSYCHOTHERAPY & MANAGEMENT SCIENCES

67, Hemm Villa, 2nd Flr., Jawahar Nagar,
Near Railway Station, Goregaon (W),
Mumbai - 400 062. ☎ : 878 6513 / 878 7767

## அஞ்சல் வழி கல்வி சேர்க்கை அறிவிப்பு

- **எம்.எஸ்.** (ஆங்கிலம் / தமிழ்)
  (உளநல சிகிச்சை & ஆற்றுப்படுத்துதல்)
  M.S. (Psychotheraphy & Counselling) ..... *2 வருடம்*
- **பி.ஜி.டி.பி.சி** (ஆங்கிலம் / தமிழ்)
  (P. G. Diploma in Psychological Counselling) ..... *1 வருடம்*
- **பி.ஜி.டி.சி.சி** (ஆங்கிலம் / தமிழ்)
  (P. G. Diploma In Career Counselling) ..... *1 வருடம்*
- **எம்.பி.ஏ.** (ஆங்கிலம் மட்டும்)
  M.B.A. (Master of Business Administration) ..... *2 வருடம்*

**1 - 4 தகுதி : பட்டப்படிப்பு**

- **M.I.B.R.** (Diploma In Bach Flower Remedies) ..... *1 வருடம்*

**தகுதி : S.S.L.C.**

விளக்கவுரை மற்றும் விண்ணப்பப்படிவம் **ரூ.50** நேரில் அல்லது M.O./D.D. மூலம் செலுத்தி பெறலாம்.

**சிறப்பு அம்சங்கள்:**

- இந்தியாவிலேயே எம்.எஸ். அளவில் உளநல சிகிச்சை பயிற்சி அளிக்கும் மிகச்சிறந்த கல்வி நிலையம்
- பட்ட மேற்படிப்பு பயில்வோரும் அனுமதிக்கப்படும்
- கல்விச் சான்றிதழ்களின் ஜெராக்ஸ் பிரதிகளை மாத்திரம் சேர்க்கைக்கு இணைத்தால் போதுமானது
- பயிற்சிகள் அனைத்தும் சிறந்த நிலை பன்னாட்டு பல்கலைக்கழகத்தினரால் அங்கீகரிக்கப்பட்டது
- எமது பழைய மாணவர்கள் வெற்றிகரமாக அமெரிக்கா மற்றும் ஏனைய மேற்கத்திய நாடுகளில் உளநல சிகிச்சை பிரிவில் தங்களது திறமைகளை வெளிப்படுத்தி வருகின்றனர்.
- திறமை வாய்ந்த நிபுணர்களால் தயாரிக்கப்பட்ட பாடத் தொகுப்புகள் வழங்கப்படுகிறது.

*For spot Admission Contact:*

**Mrs. N. SESHADRI**
C/o. Bio-Rhythm Technologies,
No.61, Murugan Complex, 49, Brindavan Street,
West Mambalam, CHENNAI - 600 033. ☎ : *044-4844113*

**Mr. S. KUPPUSAMY**
1, Ganesh Buildings, 922, Cross Cut Road,
COIMBATORE - 641 012. ☎ : *0422-496310*



**வெ**றுந்தரையில் ஒரு துண்டை விரித்துப் படுத்திருந்தார் சண்முகம். உறங்கிவிட்டார் என்று சொல்ல முடியாது. இலேசான தூக்கம். பிறகு இலேசான விழிப்பு. பிறகு தூக்கம். பிறகு விழிப்பு என்பது மாதிரியான நிலையில் இருந்தார். நிம்மதியாகத் தூங்கி எத்தனையோ வருஷம் ஆகிவிட்டது.

ஏதோ ஒரு வண்டி சப்தம் கேட்க கண் விழித்தார். ஒருவன் தூரத்தில் - வண்டியை

நிறுத்திவிட்டு - காலி மனைகளை அப்படியே பார்த்துக் கொண்டிருந்தான். கூடவே ஒரு பெண். அவன் மனைவியாக இருக்கக்கூடும். சண்முகம் எழுந்தார். துண்டை உதறினார். முதுகிலும், வேட்டியின் பின் பக்கமும் இருந்த மண்ணைத் தட்டிவிட்டு எழுந்தார். கொட்டகைக்குள் சென்று தண்ணீரை எடுத்து வந்து முகம் கழுவினார். துண்டால் அழுந்த முகத்தைத் துடைத்து கொண்டார். மிச்சம் இருந்த தண்ணியை விழுங்கினார். உள்ளேபோய் டம்ளரை வைத்துவிட்டு சட்டைப் பையில் இருந்த சின்ன பொட்டலத்தை விரித்து உள்ளே இருந்த விபூதியை எடுத்து - குத்துமதிப்பாய் நெற்றியின் மையத்தில் பூசிக் கொண்டு வெளியே வந்தார்.

வண்டியில் வந்த தம்பதி- கொட்டகையை நெருங்கி இருந்தனர். வாங்க சார். இடம் பார்க்கணுமா? என்று கேட்டார். அவன் பேசாமல் இருந்தான். தலையைக்கூட அசைக்கவில்லை. பேசுவதற்குக் கூட காசு கேட்பான் போலும். அந்தப் பெண் வாயைத் திறந்தாள் - "ஆமா சார்... இடம் பார்க்க வந்திருக்கோம்.

# மனை பாக்கியம்

## யோகி

நமக்குத் தெரிஞ்ச ஒருத்தர் சொல்லி அனுப்பினார். அவரும் ஒரு பிளாட் வாங்கியிருக்கார். நமக்கு ஒரு பிளாட் வேணும்." என்றாள்.

"மொத்தம் முப்பத்தி அஞ்சு பிளாட் போட்டோம். பத்துதான் இருக்கு..." என்று கொட்டகைக்குள் நுழைந்து லே அவுட் பேப்பரை எடுத்து வந்து விரித்துக் காட்டினார். அவள்தான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் வெறுமனே நின்றிருந்தான். வீட்டில் மீனாட்சி ஆட்சி போலும். அவர்கள் தம்பதிதானா என்று ஊர்ஜிதம் பண்ணிக் கொள்ள - அந்தப் பெண்ணின் கழுத்தைப் பார்த்தார் - தாலி செயின் தெரிகிறதா என்று. அவள் சுடிதார் அணிந்திருந்த படியால் - ஒன்றும் தெரியவில்லை. காலைப் பார்த்தார். மெட்டி இருந்தது. கல்யாணமான பெண்தான் அவன் சம்சாரம்தான் அந்தப் பெண். அவனுக்கு நிகராகச் சம்பாதிக்கிறாள் போலும்.

''உட்கார்ந்து பாருங்கம்மா..'' என்று ப்ளாஸ்டிக் சேரைத் துடைத்து உட்காரச் சொன்னார். அந்தப் பெண் உட்கார்ந்தாள். அவன் நின்று கொண்டுதான் இருந்தான்.

"பதினோராம் நம்பர் ப்ளாட்டு சரியா வரும்போல் இருக்கே" என்றாள்.

"பதினோராம் நம்பர் பிளாட்டு கொடுத்தாச்சும்மா... பத்திரமே பதிஞ்சாச்சு. அதுல ரைட் போடாத பிளாட்டு மட்டும்தான் இருக்கு. பதினாறு 'ஏ'ல இருந்து ஒரு நாலு பிளாட்டு விற்கல. ஒன்பதாம் நம்பர் பிளாட்டு இருக்கு. முப்பதுல இருந்து முப்பத்தி மூணுவரை இருக்கு." என்று விற்ற விற்காத பிளாட்டுகளை மனப்பாடமாய்ச் சொன்னார்.

"அதென்ன பதினாறுக்குப் பிறகு பதினாறு ஏ. பன்னிரண்டுக்குப் பிறகு பன்னிரண்டு ஏ..? பதினாருக்கும் பிறகு பதினேழைக் காணோம். பதிமூணையும் காணோம்?" என்று விசாரித்தார்.

"அது வந்தும்மா. பதினேழு, பதிமூண்ணுன்னா யாரும் வாங்கமாட்டாங்க. போகாது. பீடை பிடிச்ச எண்கள். அதனால் அந்த எண்களை உபயோகிக்கறது இல்ல" என்றார்.

"இதுலயுமா செண்டிமெண்ட்ஸ்" என்று சிரித்தாள்.

"ஆமாங்க. அதே மாதிரி பதிமூணு, பதினாலு, பதினஞ்சு அடி அகலத்துக்கு இருந்தா எந்த வீடும் விற்காதும்மா. அது நீங்களும் நாளைக்கு சொத்து பத்து வாங்கினா - இங்கன்னு இல்ல - எங்க போய்

வாங்கினாலும் பார்த்து வாங்குங்க. இன்னிக்கு வாங்கி நாளைக்குக் கொடுக்கப் போற சமாசாரம் இல்ல. பரம்பரையாய் இருக்கணும்னு தானே ப்ரயாசைப்பட்டு வாங்குறது.'' என்றார்.

அவள் கணவன் எதற்கும் வாயைத் திறக்கவில்லை. சண்முகத்துக்கு இலேசான சந்தேகம் - அந்த மனுஷன் ஊமையாக இருப்பானோ?

''நீங்க இப்பதான் முதன் முதலா இடம் வாங்குறீங்களா?''

''ஆமா சார்'' என்றாள். இங்க வாங்கி போடுங்கம்மா. உடனே வீடு கட்டலாம். பக்கத்துல வரைக்கும் கரண்ட் கனெக்ஷன் வந்திருக்கு. நல்ல தண்ணி குழாய் அந்த மேடு வரைக்கும் வந்திருக்கு. இப்ப ஆடி மாசம்ங்கிறதால வாங்குனவங்க இன்னும் வேலை ஆரம்பிக்கல. ஆவணில நாலஞ்சு பேர் - வீடு கட்டற ஐடியால தான் இருக்காங்க. அஞ்சாம் நம்பர் பிளாட்டுகாரரு, இருபத்திமூணாம் நம்பர் பிளாட்டுகாரரு எல்லாம் வீடு கட்ட ரெடியா இருக்காங்க. எல்லாம் படிச்ச ஆளுங்கதான். டாக்டர், வக்கீல், இன்ஜினியர், வாத்தியாருங்கதாம்மா வாங்கியிருக்காங்க.''



''இன்னிக்கு லேட்டா வந்ததுக்கு என்ன காரணம் சொல்லப் போறீங்க?''

''இப்படி திடீர்னு கேட்டா எப்படி சார்? அரைமணி நேரம் டைம் கொடுங்க. யோசிச்சு சொல்றேன்!''

— கொங்கணாபுரம் வே. செந்தில்

''சென்ட் எவ்வளவு சார்?'' - இப்போது தான் அவன் வாய் திறந்தான்.

''சென்ட் எண்பதாயிரம் சார்... சிலர் குறைச்சு கேட்டாங்க. செண்டு மூணு ரூபாய் குறைச்சோம். ஆனா எழுபத்தி அஞ்சுக்குக் குறைச்சு யாருக்கும் கொடுக்கல. நீங்க நேரா வந்துட்டதால புரோக்கர் கமிஷன் உங்களுக்கு மிச்சம்தான்.'' என்றார்.

''இருபத்திரண்டாம் நம்பர் பிளாட்டு நல்லா இருக்கு. கார்னர் பிளாட்டு வேற. அங்க நின்னு பார்த்தா மெயின் ரோடு தெரியுது பாருங்க.'' என்று தன் கணவரிடம் பேப்பரைக் காட்டினாள். ''இருபத்திரண்டு கொடுத்தாச்சா சார்?''

''இருபத்திரண்டு கொடுக்கலம்மா. ஆனா ஒரு ஆடிட்டர் வந்துபார்த்துட்டுப் போனார். நாலு நாளாச்சு. இன்னும் வரல.'' என்றார்.

அவள் எழுந்தாள். இருபத்திரண்டாம் பிளாட்டு அருகே சென்று நேராய் நின்று பார்த்தாள். பிரதான சாலை தெரிந்தது. இடையில் ஏகப்பட்ட வீடுகள் இருந்தாலும் நூல் பிடித்த மாதிரி நேராய் இருந்தது தெரு.

''இதையே பார்ப்போம்'' என்றவள் திரும்ப கொட்டகைக்கு வந்தாள்.

''சுத்தி வாங்கினவங்க எல்லாம் நல்ல ஆளுங்கதானே சார்?'' என்று கேட்டாள்.

''என்னம்மா இப்படிக் கேட்டுட்டீங்க? மூணு லட்சம், நாலு லட்சம் போட்டு வாங்குறவன். தரமில்லாம இருப்பாங்களா? எல்லாம் தரமான ஆளுங்கம்மா.''

''நமக்கு மட்டும் கட்டுவோம். வாடகைக்கு விடுற மாதிரி எல்லாம் வேண்டாம். ஏற்கெனவே வாடகை வீட்டுல, காம்பவுண்ட் வீட்டுலன்னு இருந்து, சத்தம், கச்சடால நிம்மதியே இல்ல. இங்க தனி வீடா கட்டி நிம்மதியா இருக்கணும்.''

''வில்லங்கம் பார்க்கணும்ல?'' என்றான் அவன்.

''அவசியம் பார்க்கணும். பேருக்கு ஒரு தொகையை அட்வான்ஸா கொடுத்துட்டீங்கன்னா அடுத்து யாரும் வந்தாலும் பேசியாச்சுன்னு சொல்லிடலாம். நீங்க நம்பி காரியத்துல இறங்கலாம். நீங்க நாளைக்கு நம்ம ஆபீஸுக்குப் போயி, எங்க

ஓனர்கிட்ட எல்லா விஷயத்தையும் தெளிவா பேசிக்கலாம்.'' என்று சண் முகம் விசிட்டிங் கார்டைக் கொடுத் தார்.

அவள் வாங்கிக் கொண்டாள்.

"அப்ப கிளம்பலாமா?" என்று கேட் டாள்.

''அம்மா... இந்த நோட்டுல ஒரு கையெழுத்து போட்டுடுங்க. பிளாட்டு யாரு யாரு வந்து பார்த்தாங்கன்னு எங்க முதலாளிக்கு நான் காட்டணும்.'' உள்ளே இருந்து ஒரு நோட்டை எடுத்து வந்து கொடுத்தார். அவனும் அவளும் கையெ ழுத்துப் போட்டனர். திரும்பி நடக்க ஆரம்பித்தவள் திடீர் என்று நின்றாள். தன் பையில் இருந்து ஒரு பத்து ரூபாயை எடுத்து "இங்க வாங்க சார்.'' என்றழைத் தாள். ''காப்பி சாப்பிடுங்க'' என்று கொடுத்துவிட்டு நடந்தாள். ''எதுக்கு அவனுக்குத் தெண்டமா கொடுக்கிறே'' என்றான் அவன்.

"நல்ல மனுஷனா தெரியறார். நமக்குத் தெரியாத விஷயங்களைத் தெரிஞ்சுக்க முடியுது." என்றாள்.

சண்முகம் அவள் சொல்வதை கேட் டார். அதுதான் அவரது பலம் - நல்ல மனுஷனாய் அறியப்படுவது தான் அவர் பலம். அவரை எல்லோரும் நம்புகிறார் கள். அவரும் அந்த நம்பிக்கைக்குப் பழுதில்லாமல் இருக்கிறார்.

ஆனால் வீட்டில் மனைவி "பொழைக்க தெரியாத மனுஷன்'' என் கிறாள். அவரின் வீட்டுக் கதை பெரிய சோகக் கதை.

மில்லில் நல்ல சம்பளத்தில்தான் வேலை பார்த்தார். இரண்டு பெண்கள், ஒரு பையன். எவன் கண் பட்டதோ. சூறாவளி வீசியது வாழ்வில். மில்லை மூடிவிட்டார்கள்.

தெரிந்த ஒருவர் மூலமாக இந்த ரியல் எஸ்டேட்காரரிடம் வேலைக்குப் சேர்ந் தார். குடும்பச் சக்கரம் ஓட - சுமாரான சம்பளம். பட்டினியும் கிடையாது. நிறை வான சாப்பாடும் கிடையாது. இன்னும் இரண்டு மூன்று வருஷத்திற்குப் பல்லைக் கடித்துக் கொண்டு இருந்தால் - பிள்ளை தலையெடுத்துவிடுவான். காலேஜில் படிக்கிறான்.



**''பொண்ணு கிளி மாதிரின்னு சொன்னாங்களே! ஆனா, பேசும்போது இப்படி வெட்டு, வெட்டுனு வெட்ட றாளே!"**

**"வெட்டுக்கிளியோ என்னமோ!"**

**— மெலட்டூர் விசுவநாதன்**

அப்படியே துண்டைத் தரையில் விரித்து அமர்ந்தார். இலேசாக இருட்ட ஆரம்பித்தது. எழுந்து கொட்டகை யின் கதவைப் பூட்டிவிட்டுக் கிளம் பினார்.

வீட்டுக்கு வந்தார். மீனாட்சி வாசற்படியில் நின்றிருந்தாள். இவரைப் பார்த்ததும் உள்ளே வந்தவள், இவர் உள்ளே போனதுமே "வாடகை கேட்டு வீட்டுக்காரர் வந்தார். வாங்கிட்டு வந்தீங்களா பணத்தை?'' என்று கேட் டாள். ''நாளைக்கு தர்றேன்னார் ஓனர்."

"ஆமா... வீட்டு புரோக்கர், ரியல் எஸ் டேட்ல வேலை பார்க்கிறோம்ன்னுதான் பேரு. வீட்டு வாடகை ஒழுங்கா கொடுக்க வக்கு இல்லன்னு வீட்டுக்காரன் வையறான். பேரு பெத்த பேரு. தாக நீலு லேது.'' என்று புலம்பிக் கொண்டி ருந்தாள்.

அவர் மௌனமாகத் தெருவை வேடிக்கை பார்த்தார். அவர் கண் முன்னே, பிளாட்டுகள் வாங்க ஆர்வ முடனும் பிரயாசையுடனும் மனிதர்கள் வலம் வந்தனர். ●

ஸ்ரீ:

ஸ்ரீமந் நடனகோபால நாயக்யை நம:

# மதுரை ராணி சாரீஸ் சுங்குடிப் புடவைகள்

## சென்னையில் தனி ஷோரூம்

"ராணி சாரீஸ்"

"RANEE SAREES"

MADURAI

SPECIAL QUALITY

COLOURS ARE GUARANTEED

FOR DHOBI WASH

**COPY RIGHT REGD. A-52846/95**

**COPY RIGHT REGD. A-52846/95**

காப்பி ரைட் ரிஜிஸ்டர் நம்பர் உள்ளதா
என பார்த்து வாங்கவும். மற்றவை நம் தயாரிப்பு அல்ல.

**எங்களிடம் மதுரை சுங்குடிப் புடவைகள்
ஸ்பெஷல் சுந்தர் காட்டன் சாரீஸ், மற்றும்
அனைத்து காட்டன் புடவைகளும், மற்றும்
100% காட்டன் வேஷ்டி, துப்பட்டாக்களும்
சுடிதார் மெட்டீரியல்களும் கிடைக்கும்**

# RANEE SAREES

***EXCLUSIVE SHOPEE***

***Shop. No. 23, "Gold Crest Complex" 1st Floor,
54 - 55, North Usman Road, Panagal Park,
* opp: Saradha Vidhyalaya School
(Near Petrol Bunk) T. Nagar,
Chennai - 600 017.
✆ 8217308, 8217309***

தடய அறிவியல் நிபுணர்

## பி. சந்திரசேகரன்



# காட்டிக் கொடுத்துவிடும் கையெழுத்து

கவர்னர் அறைக்கு வெளியே இருந்த பன்னிரண்டு ஸ்விட்சுகளையும் அணைத்து விட்டு உள்ளே பார்த்தேன். ஒரு டியூப் லைட் மட்டும் எரிந்து கொண்டே இருந்தது. அந்த டியூப் லைட்டின் ஸ்விட்சை மீண்டும், மீண்டும் அணைத்துப் போட்டுப் பார்த்தேன். லைட் அணையவே இல்லை. புரிந்து போயிற்று. அறையை மூடும் பணியாளர் எல்லா ஸ்விட்சுகளையும் அணைத்தாலும் உள்ளே ஒரு டியூப் லைட் தொடர்ந்து எரிந்து கொண்டே இருந்திருக்கிறது. அது அந்தப் பணியாளருக்குத் தெரிய வாய்ப்பில்லை, காரணம் அவர் அறையை மூடி விட்டு ஸ்விட்சுகளை அணைப்பதுதான். அதேபோல் அறையைத் திறக்கும் முன்பே ஸ்விட்சுகளைப் போட்டு விட்டுத்தான் திறப்பார்கள். எனவே ஒரு டியூப் லைட் எப்போதும் எரிந்து கொண்டிருந்தது பணியாளர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை.

மாதக் கணக்கில் (ஆண்டுகளாகக் கூட இருக்கலாம்) அந்த டியூப் லைட் தொடர்ந்து எரிந்து கொண்டிருந்ததால் சோக் (Choke) சூடாகி, மின் கசிவு மூலம் தீ விபத்து ஏற்பட்டிருக்கிறது என்று அறிக்கை கொடுத்தேன். அதே அறிக்கையில் கோட்டையில் உள்ள பழைய பாணி ஸ்விட்சுகளை உடனே மாற்றிவிடும் படியும் சொல்லியிருந்தேன்.

துருவும் மனப்பான்மைதான் தடய அறிவியலார்க்கு முதலில் தேவை. இந்த மனப்பான்மைதான் குற்றவாளிகளைக் காட்டிக் கொடுக்க உதவும்; ஆனால் white collar crimes என்று சொல்லக் கூடிய மோசடி, ஏமாற்று வழக்குகளில் பல சமயங்களில், மனித மனோபாவம், செயல்பாடுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் கொண்டு துருவ வேண்டியிருக்கும். குறிப்பாக கையெழுத்து மோசடி வழக்குகளில் விசாரிக்கும் போது human behaviour எனப்படும் மனித நடத்தை பற்றி தெரிந்து கொண்டு செயல்பட்டால் சிக்கிரம் துப்பு துலங்கி விடும்.

சிங்கப்பூர் கோர்ட் ஒன்றில் நடந்த கையெழுத்து மோசடி வழக்கை என்னால் மறக்க முடியாது.

திராவிட இயக்கத் தலைவர்களில் ஒருவராக இருந்தவர் அரங்கண்ணல். அண்ணாவுக்கு மிகவும் வேண்டியவர். பல சமயங்களில் அண்ணா "அரங்கு. இந்த வாரம் திராவிட நாடு தலையங்கம் நீ எழுதிவிடு" என்று சொல்லுவார். அந்த அளவுக்கு அண்ணா



* அரங்கண்ணல்

**கிரிமினல்கள் ஜாக்கிரதை - 9**

வின் நம்பிக்கையைப் பெற்ற அவருக்கு அன்பு என்று ஒரு மகன். சிங்கப்பூரில் தொழில் செய்து கொண்டிருந்தார்.

அங்கு வள்ளியப்பன் என்ற நாட்டுக் கோட்டை செட்டியாரும் வசித்து வந்தார். அரங்கண்ணலுக்கு வேண்டியவர். செட்டியாரின் மரணத்துக்குப் பிறகு சொத்து அவரது மனைவி வள்ளியின் பெயருக்கு வந்தது. ஆனால் உறவினர்கள் பணத்திற்காக வள்ளியை நச்சரித்து வந்தனர். பயந்துபோன வள்ளி, சுமார் பத்து லட்சம் டாலர் பணத்தை அன்புவிடம் கொடுத்து பத்திரமாக வைத்துக் கொள்ளச் சொன்னார். அந்த சமயத்தில் அன்புவுக்குத் திருமண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஸ்ரீலங்காவைச் சேர்ந்த யோகாம்பிகா நாகராஜா என்பவரை மணந்து கொள்வதாக இருந்தார் அன்பு. தம்மிடம் பாதுகாத்து வைக்க கொடுக்கப் பட்ட பத்து லட்சம் டாலரையும் தம் எதிர் கால மனைவி யோகாம்பிகா நாகராஜாவின் பெயரில் போட்டுவிட முடிவு செய்தார் அன்பு. சிங்கப்பூர் இந்தியன் வங்கியில் யோகாம்பிகா பெயரில் கணக்குத் துவங்குவதற்காக ஸ்பெஸிமென் கையெழுத்து அட்டையை வாங்கி லண்டனுக்கு அனுப்பினார். அந்த அட்டையில் இடதுபுறம் நான்கு கையெழுத்து, வலது புறம் ஒரு கையெழுத்து, போட வேண்டும். குறிப்பிட்ட கால இடைவெளியில் வங்கிக்கு நேரடியாகச் செல்லும் போது ஸ்பெஸிமென் கையெழுத்து அட்டையை வாங்கி வலது புறத்தில் கையெழுத்து இட்டு வர வேண்டும். ஏனென்றால் கையெழுத்து அவ்வப்போது மாறிக் கொண்டே இருக்கும் என்பதால் தங்களது லேட்டஸ்ட் கையெழுத்தை வங்கியில் பதிவு செய்ய வேண்டும்.

பத்து லட்சம் டாலரை யோகாம்பிகா பெயரில் போட்டாகிவிட்டது. பிறகு இந்தியாவில் திருமணம் நடந்தது. தம்பதி சிங்கப்பூரில் வாழ்க்கையைத் துவக்கினார்கள். கல்யாணத்திற்குப் பிறகு யோகாம்பிகா கணக்கில் இருந்த பத்து லட்சம் பணத்தையும் தன் பெயருக்கு மாற்ற முடிவு செய்தார் அன்பு. வங்கிக்குத் தன் கைப்பட ஒரு கடிதம் எழுதி அதில் மனைவியின் கையெழுத்தைப் பெற்றுக் கொடுத்தார். பணம் அன்பு பெயருக்கு மாற்றப்பட்டது. இது நடந்த சில காலத்துக்குப் பிறகு யோகாம்பிகா கணவரை விட்டுப் பிரிந்து லண்டனில் போய் வசிக்கத் துவங்கினார். தம் கணக்கில் இருந்த பத்து லட்சம் டாலரை அன்பு அவர் பெயருக்கு மாற்றிக் கொண்டது யோகாம்பிகாவுக்கு நினைவுக்கு வந்தது. "எனக்குத் தெரியாமலேயே என் கையெழுத்தை மோசடியாகப் போட்டு பணத்தைத் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டு விட்டார் அன்பு" என்று சிங்கப்பூர் போலீஸில் புகார் கொடுத்தார் யோகாம்பிகா.

இதையடுத்து அன்புவின் அக்கவுண்டிலிருந்து பணத்தை எடுக்க முடியாமல் முடக்கி விட்டது போலீஸ்.

வழக்கு கோர்ட்டுக்கு வந்தது. லண்டனிலிருந்து யோகாம்பிகா சார்பாக ஒரு கையெழுத்து நிபுணர்; சிங்கப்பூர் அரசு சார்பாக ஹாங்காங் கையெழுத்து நிபுணர்; வங்கி சார்பாக சிங்கப்பூரைச் சேர்ந்த கையெழுத்து நிபுணர் ஆகியோர் தங்கள் கருத்துகளை கோர்ட்டில் சொன்னார்கள். லண்டன் நிபுணர், ஸ்பெஸிமென் அட்டையில் இடது புறம் உள்ள கையெழுத்து யோகாம்பிகாவின் கையெழுத்துதான் என்றும் ஆனால் வலது புறம் உள்ள கையெழுத்து பின் காலத்தில் மோசடி செய்யும் நோக்கத்தில் அன்புவால் முதலிலேயே forgery செய்து போடப்பட்டது" என்றும் சொன்னார்.

> **மனைவி அமைவதெல்லாம்**
>
> **கிரேக்கப் பேரறிஞர் சாக்ரடீசின் திருமண வாழ்க்கை திருப்திகரமாக அமையவில்லை. திருமணத்தைப் பற்றி அவர் கூறிய கருத்து இது : "திருமணத்தை வெறுக்காதீர்கள். அவசியம் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். நல்ல மனைவி அமைந்தால் உங்கள் வாழ்க்கை மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும். ஒரு வேளை மோசமான மனைவி அமைந்தால், நீங்கள் தத்துவ ஞானியாகிவிடுவீர்கள்!"**
>
> **- 'அறிஞர் வாழ்விலே' நூலிலிருந்து மு. இராமசாமி**

கணக்கிலுள்ள பணத்தைத் தன் பெயருக்கு மாற்றச் சொல்லி கடிதம் எழுதிய போது, ஏற்கெனவே போட்ட மோசடி கையெழுத்தைப் போல போடுவது அன்புவுக்குக் கலபமாகி விட்டது என்றார் அந்த லண்டன் நிபுணர். இடது புறம் உள்ள கையெழுத்து யோகாம்பிகாவினுடையது என்றும் வலது புறம் பற்றி ஒன்றும் சொல்ல இயலாத நிலையில் இருப்பதாகத் தெரிவித்தார் ஹாங்காங் நிபுணர். வங்கியின் சார்பாக ஆஜரான சிங்கப்பூர் நிபுணர் வலதுபுறம், இடதுபுறம் இரண்டுமே யோகாம்பிகா கையெழுத்து தான் என்றும் அதே போல் கணக்கை மாற்றும்படி கேட்ட கடிதத்தில் கையெழுத்திட்டவரும் அவர்தான் என்றும்

சொன்னார். ஆனால் குறுக்கு விசாரணையில் சீன வழக்கறிஞர் சிங்கப்பூர் நிபுணரை கேள்விகளால் திணறடிக்க, கையெழுத்து அசலா... மோசடியா என்று குறிப்பாகச் சொல்ல முடியவில்லை; அப்படியும் இருக்கலாம், இப்படியும் இருக்கலாம்' என்று சொல்லிவிட்டார் அவர். இப்படி மூன்று நிபுணர்களும் கோர்ட்டை குழப்பிக் கொண்டிருந்தார்கள்.



இப்படிக் குழப்பமான நிலையில் தனக்கு எதிராக தீர்ப்பு ஆகிவிடப் போகிறதே என்று தந்தையைத் தொடர்பு கொண்டார் அன்பு. அரங்கண்ணல் என்னைக் கலந்தாலோசித்தார். நான் ஆஜராகி என் கருத்தையும் சொல்வதென்று முடிவாகியது. சிங்கப்பூர் சென்றேன். கோர்ட் ரெக்கார்டுகளை வாங்கிப் பார்த்தேன்.

யோகாம்பிகாவின் பள்ளிச் சான்றிதழ், திருமண பத்திரம், பாஸ்போர்ட் ஆகியவற்றை வாங்கிப் பார்த்தேன். கால இடைவெளிகளில் அவரது கையெழுத்துக்களில் அவ்வப்போது சிறிய, சிறிய மாற்றங்கள் தெரிந்தன. மூன்று கையெழுத்து நிபுணர்களும், யோகாம்பிகாவிடம் வழக்கு சமயத்தில் மட்டும் ஒரு பேப்பரில் இருபது முறை கையெழுத்திடச் சொல்லி, அதை அடிப்படையாக வைத்து, ஸ்பெஸிமென் அட்டையை ஒப்பிட்டுப் பார்த்து கருத்து சொல்லியிருந்தார்கள். இது கொஞ்சங்கூட சரியல்ல என்பது என் கருத்து. ஒருவர் தன் கையெழுத்தை மற்றவர் மோசடி செய்து விட்டார் என்று புகார் கூறும்போது புகார் சொன்னவர் கையெழுத்து எவ்வளவு மாற்றங்களுக்கு உட்பட்டிருக்கிறது என்பதையும் பார்க்க வேண்டுமல்லவா! ஏனென்றால் புகார் பொய்யாக, வேண்டுமென்றே பழிவாங்கும் நோக்கில் போடப்பட்டிருந்தால் அப்பாவி அல்லவா பாதிக்கப்படுவார்.

இந்தக் குறிப்பிட்ட வழக்கு யோகாம்பிகாவுக்கு அன்புவோடு கருத்து வேறுபாடு ஏற்பட்டதற்குப் பின்னால் போடப்பட்டிருந்தது. 'இனி இருவரும் சேர்ந்து வாழ இயலாத நிலையில் விவாகரத்து வழக்குப் பதிவு செய்யப்பட்டிருந்தது. எனவே இயல்பாகவே அன்பு மீது யோகாம்பிகாவுக்கு எரிச்சல் ஏற்பட்டு "உன்னை மாட்டி விடுகிறேன் பார்" என்ற நோக்கத்திலும் போடப்பட்டிருக்கலாம் அல்லவா!

**நா**ன் சாட்சியம் சொல்லும் நாள் வந்தது. "மைலார்ட் லண்டன் நிபுணர், கணக்குத் துவங்கும் முன்னரே மோசடி நோக்கத்தில் அன்பு செயல்பட்டிருப்பதாகச் சொன்னார். ஸ்பெஸிமென் அட்டையில் இடது புறம் மனைவியின் கையெழுத்தை வாங்கிய அன்பு மோசடி செய்யும் நோக்கில் செயல்பட்டிருந்தால் வலது பக்கத்திலும் அதே போன்று அச்சாக அப்போதே கையெழுத்திட்டிருக்கலாம். இடது பக்கம் / வலது பக்கம் உள்ள கையெழுத்துக்களில் சின்ன மாற்றங்கள் யோகாம்பிகா போடும்போது ஏற்பட்டவைதான். அவருடைய பள்ளி சான்றிதழ், திருமண பத்திரம், பாஸ்போர்ட் போன்றவற்றைப் பார்த்தால் அவர் கையெழுத்தில் செய்துள்ள சின்ன மாற்றங்கள் தெரியவரும். அதேபோல் ஸ்பெஸிமென் அட்டையில் வலது புறத்தில் வங்கிக்குப் மறுபடி விஸிட் செய்தபோது அலங்காரமான எழுத்துடன் கையெழுத்திட்டிருக்கிறார். பின்னர் வங்கிக்குப் பணத்தை தன் பெயருக்கு மாற்றச் சொல்லி கைப்பட கடிதம் எழுதிய அன்பு அதில் மனைவியின் கையெழுத்தை மட்டும் வாங்கினார். மோசடி நோக்கத்தில் செய்திருந்தால் கடிதத்தை டைப் செய்து விட்டு வெறும் கையெழுத்திட்டிருக்கலாம். எனவே உறுதியாக நான் சொல்ல வருவது, ஸ்பெஸிமென் அட்டை வலதுபுறம், இடதுபுறம் மற்றும் பணத்தை மாற்றச் சொல்லி அனுப்பிய கடிதத்தில் உள்ள கையெழுத்து, அனைத்தும் யோகாம்பிகாவின் கையெழுத்து தான். இதில் எந்த மோசடியும் செய்யப்பட வில்லை" என்றேன்.

வழக்கு விசாரணையின்போது அந்தப் பணம் திருமணத்தின்போது தனக்கு மாப்பிள்ளை வீட்டாரால் சீதனமாகத் தரப்பட்டது என்றும் சொல்லியிருந்தார் யோகாம்பிகா. நான் என் சாட்சியத்தில் தமிழ்நாட்டுத் திருமண முறைகளை விவரித்து, 'பெண் வீட்டார் மாப்பிள்ளைக்குச் சீதனம் கொடுக்கும் பழக்கம் தான் உள்ளது. யோகாம்பிகா சொல்வது சரியல்ல' என்றும் சொல்லியிருந்தேன். அந்த சமயத்தில் நீதிபதி என்னைப் பார்த்து "உங்களுக்கு இந்தப் பெண்ணை ஏற்கெனவே தெரியுமா?" என்று கேட்டார். 'எதற்காக இதைக் கேட்கிறார்?' என்று குடைந்தேன் மூளையை.

(தொடரும்)

# வெள்ளை அறிக்கை

போட்டிக் கதை-6



**ந**கரத்திலிருந்து இருபது கிலோமீட்டர் தூரத்தில் இருந்த இந்த இடத்திற்கு முன்பெல்லாம் ஓரிரு பஸ்களே வரும். அங்குமிங்கும் சிதறினாற் போல வீடுகள். பகுதி விளை நிலம், பகுதி தரிசு நிலம் என்று ஏறத்தாழ காடாக இருந்த இடம், இன்று ஒரு மினி நகரமாகி விட்டது. அந்த ஊரின் வளர்ச்சியை அதிசயித்தவாறு பயணித்தேன். இரு பக்கங்களிலும் மரங்கள் நிழற்குடை பிடிக்க, அகன்ற நெடுஞ்சாலையில் வழுக்கிக் கொண்டு சென்றது கார். பத்து வருடங்களுக்கு முன் பொட்டலாக இருந்த இந்த புறநகர்ப் பகுதி "ஆல்ஃபா மோட்டர்ஸ்" கம்பெனி திறந்ததில் புதுப் பொலிவு பெற்றிருந்தது.

அரசாங்கத்தின் பொருளாதார தாராளமயக் கொள்கை ஆரம்பித்த கால கட்டத்தில் வெளிநாட்டு முதலீடு இங்குள்ள தொழில் குடும்பத்தின் முதலீடு... பங்குதாரர்களின் முதலீடு என்று கூட்டு முயற்சியில் முளை விட்ட மோட்டார் கார் அசெம்ப்ளி. கல்யாண கோலாகலத்துடன் தொடங்கப்பட்ட கனவுத் தொழிற்சலை.

பூமி பூஜையன்றே நம்பிக்கை நட்சத்திரமாக மின்னிய இந்த பாக்டரி பற்றி ஏகப்பட்ட எதிர்பார்ப்புகள். உற்பத்தி தொடங்கி ஒரு வருடத்திற்குள் விற்பனையின் உச்சம் எட்டியது. ஆயிரம் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு, இரு நூறு அதிகாரிகள் என்று மின்னல் வேக வளர்ச்சி. அவர்களுக்குக் குடியிருப்பு, ஆஸ்பத்திரி, பள்ளிக்கூடம், பொழுதுபோக்குப் பூங்கா, கிளப் என்று வாழ்வு வந்தவுடன் அனைவரையும் வாழ வைத்தார்கள். அந்தச் சிறிய ஊரின் பூகோள அமைப்பு மாறி விட்டது. விளை நிலங்கள் விற்கப்பட்டு அந்த ஊர் நிறம் மாறி பெயரும் மாறிவிட்டது. நிச்சயம் இது "டாடா நகர்" போல சரித்திரப் பெருமை பெறப் போகிறது என்று எல்லோரும் எதிர்பார்த்தனர்.

அந்த எதிர்பார்ப்பு அத்தனையும் எப்படி மண் தட்டிப் போயிற்று. வளர்ந்தவுடன் காய் கிடைக்கும், கனி கிடைக்கும். கிடைத்தது. கிடைத்த பழம் உடன் அழுகியும் விட்டது.

ஆரம்பக் கால இரண்டு வருடங்கள் பட்டு மெத்தையில் படுத்த சுகமான அனுபவம்தான். பிறகு நடந்த குளறுபடிகள்... வெளிநாட்டு கம்பெனியிடம் தேங்கிவிட்ட உதிரி பாகங்களை அதிக விலைக்கு வாங்கியதில் தொடங்கிய நஷ்டப் பயணம்.... பாம்பு வாயில் இறங்கிய மாதிரி சரசர வென்று கீழே இறங்கிவிட்டது நிறுவனம்.

போட்டி கார் கம்பெனிகளின் வியாபாரத் தந்திரங்கள் வேறு. காலுக்குக் கீழ் பூமி



எப்படி நழுவியது என்று புரியாதநிலை. இறங்கு முகம் எப்பவும் வேகம்தானே! கடந்த இரு வருடங்களாக இங்கு வேலை நடப்பதில்லை. ஏறத்தாழ மூடும் நிலை. நிறைய கடன்!

பெருமளவு கடன் வழங்கிய நிதி நிறுவனத்தின் பிரதிநிதி நான். ஏற்கெனவே தந்திருந்த கடன் திரும்பி வருமா என்ற சந்தேக நிலை. நஷ்டத்தை எப்படி பங்கு பிரிப்பது? எதை விற்றால் என்ன தேறும் என்று கணக்குப் பார்ப்பதோடு, இவர்கள் மேலும் கடனுதவி கேட்கிறார்களே, அதற்கான ரிப்போர்ட் தயாரிக்கும் வேலை.

எதிலும் பட்டுக் கொள்ள வேண்டாம். வெறும் கூட்டல், கழித்தல், கணக்கு வழக்கு புத்தகங்கள் பார்க்க வேண்டும். தொழிற்கூடத்தை ஆராய்ந்து அறிக்கை தர வேண்டும்.

ஆனாலும் என் மனம் கணக்கு, வழக்குகளைக் கடந்து ஆராய்ச்சியில் இறங்கித் தவிக்கிறது.

எதிலும் ஆழச் சென்று உணர்ச்சி பூர்வமாக யோசிக்கும் மென்மையான மனம் படைத்தவர்கள் இந்த மாதிரியான வேலைக்கு லாயக்கில்லை என்று தோன்றியது.

இதோ தொழிற்சாலைக்குள் நுழைவதற்கு மூடிய கேட் அருகே வண்டி நிற்கிறது. என் உதவியாளர் இறங்கி நான் யார், என்ன வேலை விவரம் என்று செக்யூரிடியிடம் கூறுகையில், அவன் கருமமே கண்ணாக எல்லாவற்றையும் புத்தகத்தில் எழுதி, கையெழுத்து வாங்கி, இன்டர்காமில் தகவல் சொல்லிவிட்டு.... காரைப் பரிசோதித்த பின், கேட்டைத் திறந்து விரைப்பாக சல்யூட் அடித்தான். என் மனத்திற்குள் ஒரு பூரிப்பு. ஒழுங்காக வேலை செய்பவர்களைக் கண்டால் ஏற்படும் சந்தோஷம். மூடும் நிலையில் உள்ள கம்பெனி... சம்பளம் தருவதில்லை. ஆனாலும் என் கடன் பணி செய்து கிடப்பதே என்று உண்மையுடன் இவர் உழைப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

விஸ்தாரமாக இருந்த சுற்றுப்புறம் எங்கும் புதர் மண்டி புல் காடாக வளர்ந்து... அங்குமிங்கும் உடைந்த தொட்டிகள், வாடிய செடிகள், மழை மட்டுமே வளர்த்த மரங்கள்... ஐயோ என்ற ஆதங்கம் எனக்குள்.

வாயில் முகப்புக்கு வந்து அதிகாரிகள் குழைவுடன் என்னை வரவேற்க...கடமை உணர்வு தலை தூக்கியது.

இரண்டு மணி நேரம் கணக்கு வழக்கு புத்தகங்கள் பரிசீலனை இடையில் டீ, பிஸ்கெட். கொண்டு வந்த ப்யூன்... "நானே போய் அரை மைல் தூரத்திலேர்ந்து வாங்கி வந்தேன். இங்க பக்கத்திலே ஒண்ணும் கிடைக்காது. பிஸ்லேரி வாங்கி வந்தேன். தப்பித் தவறிகூட இங்கு தண்ணி குடிச்சுடாதீங்க.

பானு குமார்

டாங்க எல்லாம் க்ளீன் பண்ணி ரெண்டு வருஷமாகிறது."

முந்தியெல்லாம் இப்படியா இருக்கும்? எதுக்கும் வெளியில போக வேண்டாம். காலை, டிபன், இட்லி, வடை, பொங்கல், இடியாப்பம்னு... தவிர எக்ஸிக்யூடிவ் ப்ரேக் பாஸ்ட் ப்ரெட், ஆம்லெட் என்று அமர்க் களப்படும். மத்தியானம் லஞ்ச்.. சப்பாத்தி, இரண்டு பொரியல், டால், கூட்டு, சாதம், சாம்பார், ரசம், அப்பளம், கெட்டித் தயிர்...அசைவமும் உண்டு... எக்கச்சக்க வெரைட்டி. தினம் ஸ்வீட் டிஷ், கூட ஐஸ்க்ரீம், ப்ரூட் ஸாலட்... நாலு மணிக்கு காரம், வறுத்த முந்திரி, டீ, காப்பி... அதே போல நைட் ஷிப்டுக்கு வருபவர்களுக்கு இர வுச் சாப்பாடு... பால் என்று ராஜோ பசாரம்தான். பணம் ரூபாய்க்குப் பத்து காசு தந்தா போதும்... பாக்கி 90% கம்பெனி செலவு ஏற்கும். இந்த ருசிக்குப் பழகிவிட்ட நாக்குகள்.

எல்லோரும் என் ஆய்வறிக்கைக்காக காத்திருந்தார்கள்.... என்ன முடிவு? ஃபாக்டரி ப்ரொடக்ஷன் தொடங்குமா? வேலை இருக்குமா? இல்லை யூனியன் சண்டை போட்டு நஷ்டத் தொகை வாங்கித் தருமா... இல்லை இழுத்து மூடி நாமம்தான் மிஞ் சுமா... பல ஐயப்பாடுகள் வெறும் குழப் பம்தான். முடிவு தெரியட்டும். அதுவரை

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *



"கிரிக்கெட் சூதாட்டத்திலே நம் முடைய வீரர்கள் லஞ்சம் வாங்கியது உண்மைதான்னு நிரூபிக்கப்பட்டு விட் டால் அவர்கள் என்ன செய்வார்கள் தலைவரே?"

"பேசாமல் நம்மோடு அரசியலில் சேர்ந்திட வேண்டியதுதான்!"

— அ. குமார்

தங்களால் முடிந்ததைக்கூட ஏன் செய்ய வேண்டும் என்ற மெத்தனம். வந்து விட்டது. சம்பளம் பார்த்து நாளாகிவிட்டதே!

வீழ்ச்சிக்கு இந்த மெத்தனமும் ஒரு காரணம். மற்றபடி வெளிநாட்டு முதலாளி களின் தந்திரம், தொலைநோக்குப் பார்வை இல்லாதது... தேவையில்லாத வீண் செலவு, வேலைத் தரத்தில் குறைபாடு.. அத்தனையும் இணைய, மீள முடியாத நஷ்டம் தவிர்க்க முடியாததாகிவிட்டது. மூடும் நிலை வரு வதற்கு இன்னும் நிறைய படிகள். கோர்ட் கேஸ் நடந்து, முடிந்து, ரிஸீவர் வந்து நிலை யான சொத்துக்களை ஸீல் செய்து... கணக் குப் புத்தகங்களைச் சரி பார்த்து, எல்லாம் முடிவு செய்ய நிறைய நாட்களாகும்.

இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து வந்ததில் ஓரளவு என் அறிக்கை தயாராகி விட்டது. இதற்கு மேல் கம்பெனியின் உயர் அதிகாரிகள் எங்கள் நிதி நிறுவனத்தின் மேலிடத்தில் எப்படி யார் காலைப் பிடித்து மேற்கொண்டு கடன் வாங்குகிறார்கள் என்பது அவர்கள் பிரச்னை. எனக்குப் புரிந்தது. இனி எந்த நம்பிக்கையும் இல்லை. சாம்பலில் இருந்தது உயிர்ப் பறவை எழாது!

இன்று கோடவுன் செக்கிங். கிளம்ப நேரமாகிவிட்டது. உதவியாளர் வரவில்லை... போதாதற்கு வண்டியில் ஏதோ தகராறு. பாக்டரிக்கு மூன்று கிலோமீட்டர் இருக் கும்போது வண்டி முக்கிமுனகி நின்றே விட்டது. என்ன செய்வது என்று ட்ரைவர் கையைப் பிசைய அந்த வழியாகச் சென்ற ஆட்டோ ட்ரைவர்... பக்கத்தில் மெக்கானிக் ஷாப் இருப்பதாகக் கூற... ட்ரைவரை அனுப் பினேன். சிறிது நேரத்தில் ஸ்கூட்டரில் ஒரு பொடிப் பையனுடன் எங்கள் ட்ரைவரும் ஒரு முப்பது வயது இளைஞனும் வந்தனர். சிரித்த முகம், ஓவரால் அணிந்து பளிச் சென்று இருந்தான். பானெட்டைத் திறந்து ஐந்து நிமிடத்திற்குள் பிரச்னையைக் கண்டுபிடித்து அரைமணிக்குள் ரிப்பேர் செய்துவிட்டான். மிகவும் துடியாக இருந் தான்.

வண்டி ரெடியானதும்.... "சார், கிட்ட தான் இருக்கு. என் கடை.... வாங்க" என்று காரைதானே ஓட்டிச் சென்றான். கூட வந்த மெக்கானிக் பையன் ஸ்கூட்டரில் தொடர்ந் தான். கடைக்குச் சென்றபின்,

"வண்டியை நல்லா செக் பண்ணிட்

டேன் சார். ஏதும் பிரச்னை வந்தா... வராது... வந்தா இந்தாங்க என் கார்ட். ஃபோன் பண்ணுங்க. உடனே வந்து அட்டெண்ட் பண்றேன்..."

"எவ்வளவு நாளா கடை வெச்சிருக்கே?"

"இரண்டு வருஷமாச்சு சார்... நான் ஐ.டி.ஐ.யில படிச்சேன். அப்புறம் ஆல்ஃபா மோட்டார் கம்பெனில, நாலு வருஷம் வேலை பார்த்தேன். ப்ரொடக்ஷன் நின்னு போய் இனிமே சான்ஸ் இல்லை என்று தோன்றியதும், சொந்தமா இந்தக் கடை ஆரம்பிச்சேன். முதலில் வாடகைக்கு எடுத்து சின்னதாக ஆரம்பிச்சேன். இப்ப இந்த இடத்தை வாங்கிட்டேன். பெரிசாக்கப் போறேன். நல்லா நடக்குது சார்..."

"ஏம்பா... ஆல்ஃபாவில, அவ்வளவு சம்பளம் வாங்கினே அந்த வேலையை எப்படி விட்ட? இன்னும் மூடறதா முடிவாகலியே. .. கேஸ் நடந்து தீர்ப்பு ஆனால் நிறையப் பணம் கிடைக்குமே...?"

"வராததை நம்பி பொழுது போக்குவது எனக்குச் சம்மதமில்லை. இருந்தவரை செய்தேன். சம்பளம் கிடைச்சது. நியாயமா சேர வேண்டிய பிஎஃப் எல்லாம் என்னைத் தேடி வரும். நேரத்தை வீணடிக்காமல் இந்தக் கடை ஆரம்பிச்சதுல இப்ப நான் நாலு பேருக்குச் சம்பளம் தரேன்..."

"ஆனாலும் நஷ்ட ஈடு கிடைக்குமே...?"

"எதுக்கு சார்? நானும் அந்த வேலையாலே லாபப்பட்டேன். சுத்தமாக மோட்டார் மெக்கானிக் வேலை கத்துக்கிட்டேன். இப்ப எனக்கு என் வேலை அத்துபடி. நான் கற்றதுதான் என் லாபம். எனக்குக் கிடைத்த முதலீடுதானே... அவர்களால் என் திறமையை என்னிடமிருந்து பிரிக்க முடியாதே... அதையே எனக்குக் கிடைச்ச நஷ்ட ஈடா நினைக்கிறேன்."

அவன் பேசப் பேச, எனக்கு மிகப் பெருமையாக இருந்தது. இதோ என் தேசத்தின் எதிர்காலம். பழம் பெருமை பேசி பொழுது போக்காமல், வராததை நினைத்து ஏங்காமல்... தன் கையை நம்பி உழைக்கும் இளைய சமுதாயத்தின் பிரதிநிதி.

அந்த சந்தோஷ மூடில் பாக்டரிக்குள் நுழைந்தேன். வழக்கமான செக்யூரிட்டி செக்... அப்புறம் உள்ளே காரில் விரைகையில் அந்தக் காட்டுப் புதர்ப் பிரதேசத்தில் ஒரு அழகான பூச்செடி... சூரியகாந்தி பூத்திருந்தது. ●

# பொன்னியின் செல்வன்

முப்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## "வேளை வந்துவிட்டது!"

சென்ற அத்தியாயத்தில் கூறிய நிகழ்ச்சிகளோடு இந்தக் கதையை முடித்து விடக் கூடுமானால் எவ்வளவோ நன்றாயிருக்கும். நேயர்களில் சிலர் ஒருவேளை அவ்விதம் எதிர்பார்க்கவுங்கூடும். ஆனால் அது இயலாத காரியமாயிருக்கிறது. அதே தினத்தில் ஏறக்குறைய அதே நேரத்தில் கடம்பூர் சம்புவரையரின் மாளிகையில் நடந்த பயங்கர நிகழ்ச்சியைப் பற்றி நாம் இனிச் சொல்ல வேண்டியிருக்கிறது.

நந்தினி அவளுடைய அந்தப்புர அறையில் தனியாக அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தாள். அவளுடைய உள்ளத்தில் குடிகொண்டிருந்த பரபரப்பை அவளுடைய முகத் தோற்றம் காட்டியது. அவளுடைய கண்களில் ஓர் அபூர்வமான மின்னொளி சுடர் விட்டுத் தோன்றி மறைந்தது. அந்த அறைக்குள்ளே வருவதற்கு அமைந்திருந்த பல வழிகளையும் அவள் அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தாள். அந்த வழிகளில் ஏதாவது காலடிச் சத்தம் கேட்கிறதா என்று அவளுடைய செவிகள் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தன. "வேளை நெருங்கிவிட்டது!" என்று அவளுடைய உதடுகள் அடிக்கடி முணு முணுத்துக்கொண்டிருந்தன. சில சமயம் அவ்விதம் முணுமுணுத்த அவளுடைய உதடுகள் துடித்தன. இன்னும் சில சமயம் அவளுடைய கண்ணிமைகளும் புருவங்களும் துடித்தன. ஒவ்வொரு தடவை அவள் உடம்பு முழுதுமே ஆவேசக்காரனுடைய தேகம்

**அமரர் கல்கி**

துடிப்பது போல் பதறித் துடி துடித்தது.

நந்தினி படுப்பதற்காக அமைத்திருந்த பஞ்சணை மெத்தை விரித்த கட்டிலில் நாலு பக்கமும் திரைச்சீலைகள் தொங்கின. அவை கட்டிலை அடியோடு மறைத்துக்கொண்டிருந்தன. நந்தினி ஒரு பக்கத்துத் திரைச்சீலையை மெதுவாகத் தூக்கினாள். படுக்கையில் நீளவாட்டில் வைத்திருந்த கொலை வாளைப் பார்த்தாள். கொல்லன் உலைக் களத்தில் ஜொலிக்கும் தீயினாலேயே செய்த வாளைப் போல் அது மின்னிட்டுத் திகழ்ந்தது. அத் தீயினால் மெத்தையும் கட்டிலும் திரைச்சீலைகளும் எரிந்து போகவில்லை என்பது ஆச்சரியத்துக்கிடமாயிருந்தது. இதை நினைத்துப் பார்த்துத்தான், அது செந்தழலினால் செய்த வாள் அல்லவென்றும், இரும்பினால் செய்த வாள்தான் என்றும் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது.

நந்தினி அந்த வாளைக் கையில் எடுத்தாள். தூக்கிப் பிடித்தாள். தீபத்தின் ஒளியில் அதை இன்னும் நன்றாக மின்னிடும்படி செய்து பார்த்து உவந்தாள். பிறகு, அதைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள். கன்னத்தோடு சேர்த்து வைத்துக்கொண்டு முத்தமிட்டாள். அந்த வாளுடன் உரையாடவும் செய்தாள். "தெய்வ வாளே! நீ உன்னுடைய வேலையைச் செய்ய வேண்டிய வேளை நெருங்கி விட்டது! என்னை நீ கைவிட மாட்டாய் அல்லவா? இல்லை, இல்லை! நீ என்னைக் கைவிட மாட்டாய்! என்னுடைய கைகளேதான் என்னைக் கைவிட்டால் விடும்!" என்று கூறினாள்.

பிறகு, தன் கரங்களைப் பார்த்து, "கரங்களே! நீங்கள் உறுதியாக இருப்பீர்களா? சீச்சி! இப்போதே இப்படி நடுங்குகிறீர்களே? சமயம் வரும்போது என்ன செய்வீர்கள்? ஆம், ஆம்! உங்களை நம்புவதில் பயனில்லை. வேறு இரண்டு கரங்களைத்தான் இன்றைக்கு நான் சம்பாதித்துக் கொள்ளவேண்டும்!" என்றாள்.

திடீரென்று நந்தினியின் உடம்பு முழுதும் ஒரு தடவை சிலிர்த்தது. வெறிக்கனல் பாய்ந்த கண்களினால் மேல் நோக்காகப் பார்த்தாள். "ஆகா! நீ வந்து விட்டாயா? வா! வா! சரியான சமயத்திலேதான் வந்தாய்! என் அன்பே! என் அரசே! வா! வீர பாண்டியன் தலையே! ஏன் கூரை ஓரத்திலேயே இருக்கிறாய்? இறங்கி வா! இங்கே யாரும் இல்லை! உன் அடியாளைத் தவிர வேறு யாரும் இல்லை! ஏன் இப்படி விழித்துப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்? வாயைத் திறந்து ஒரு வார்த்தை சொல்! 'இந்தக் கண்டத்துக்குத் தப்பி உயிர் பிழைத்தால் உன்னைப் பாண்டிய சிங்காதனத்தில் ஏற்றி வைப்பேன்!' என்று சொன்னாயே! அதை நான் மறக்கவில்லை. உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியையும் மறக்கவில்லை. அதை நிறைவேற்றும் வேளை நெருங்கிவிட்டது. அதற்காக நான் எத்தனை காலம் பொறுமையாகக் காத்திருந்தேன்? என்னென்ன வேஷங்கள் போட்டேன்? – எல்லாம் நீ பார்த்துக் கொண்டிரு! கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிரு. நீதான் கண் கொட்டுவதே கிடையாதே! நானும் கண்ணை மூடித் தூங்க முடியாமல் செய்து வருகிறாய்! இன்று இரவு உனக்குப் பழி வாங்கி விட்டேனானால், அப்புறமாவது என்னை விட்டுப் போவாய் அல்லவா? அப்புறமாவது என்னைத் தூங்க விடுவாய் அல்லவா...? மாட்டாயா? பாண்டிய சிங்காதனத்தில் நான் ஏறி அமர்வதைப் பார்த்த பிறகுதான் போவாயா? என்னுடைய வாக்குறுதியை நான் நிறைவேற்றினால், உன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றுவதாகச் சொல்கிறாயா...? இல்லை, இல்லை! எனக்குச் சிங்காதனமும் வேண்டாம், மணி மகுடமும் வேண்டாம். உன் மகன் என்று யாரோ ஒரு சிறுவனைக் கொண்டு வந்தார்கள். அவனைச் சிங்காதனத்தில் ஏற்றி மணி மகுடமும் சூட்டியாயிற்று. உனக்குப் பழிக்குப் பழி வாங்கி விட்டேனானால், அதைக் கொண்டு நீ திருப்தி அடைவாய்! பின்னராவது, என்னை விட்டுச் செல்வாய்! போரில் இறந்தவர்கள் எல்லாரும் எந்த வீர சொர்க்கத்துக்குப் போகிறார்களோ, அந்த வீர சொர்க்கத்துக்கு நீயும் போவாய்!

அங்கே என்னைப் போல் எத்தனையோ பெண்கள் இருப்பார்கள்! அவர்களில் ஒருத்தியை... என்ன? மாட்டேன் என்கிறாயா? கடவுளே! நானும் உன்னோடு வர வேண்டும் என்கிறாயா...? சரி, சரி! அதைப் பற்றிப் பிறகு பேசிக் கொள்வோம்! என் அன்பே! யாரோ வருகிறார்கள் போலிருக்கிறது. நீ மறைந்து விடு...! நானும் இந்தப் பழி வாங்கும் வாளை மறைத்துவைக்கிறேன்..."

அச் சமயம் வாசற்படிக்கு அருகில் உண்மையாகவே காலடிச் சப்தம் கேட்டது. நந்தினி வாளைக் கட்டிலில் வைத்துக்கொண்டிருக்கும் போதே மணிமேகலை உள்ளே வந்தாள்.

சற்றுமுன் வெறி பிடித்துப் புலம்பிய நந்தினி ஒருகண நேரத்தில் முற்றும் மாறுதல் அடைந்தவளாய், "நீதானா, மணிமேகலை? வா! வா" என்றாள். அவள் குரலில் அமைதி நிலவியது.

"அக்கா! இது என்ன? எப்போதும் வாளும் கையுமாகவே இருக்கிறீர்களே?" என்றாள் மணிமேகலை.

"பின், என்ன செய்வது? ஆண் பிள்ளைகள் இவ்வளவு தூர்த்தர்களாயிருந்தால், நாம் வாளைத் துணை கொள்ள வேண்டியதுதானே?"

"தேவி! நான் ஒருத்தி துணை இருக்கிறேனே? என்னிடம் தங்களுக்கு நம்பிக்கை இல்லையா?"

"உன்னிடம் நம்பிக்கை இல்லாமலா என்னுடைய அந்தரங்கத்தையெல்லாம் உன்னிடம் சொன்னேன். மணிமேகலை! இந்த உலகிலேயே நான் நம்பிக்கை வைத்திருப்பவள் நீ ஒருத்திதான். ஆனாலும், உன் கூடப் பிறந்த சகோதரனுக்கு எதிராக உன்னால் ஒன்றும் செய்ய முடியாதல்லவா?"

"அக்கா! எனக்குக் கூடப் பிறந்த சகோதரன் இல்லை என்று முடிவு செய்துகொண்டு விட்டேன்..."

"ஏன் இவ்விதம் சொல்கிறாய்? எப்படியும் அவன் உன் சகோதரன்..."

"சகோதரனாவது? சகோதரியாவது? அந்த உறவெல்லாம் வெறும் பிரமை என்று தெரிந்துகொண்டேன். கந்தமாறன் என்னுடைய விருப்பத்துக்கு எதிராக, - தன்னுடைய சௌகரியத்துக்காக, - என்னை வற்புறுத்திக் கட்டிக் கொடுக்கப் பார்க்கிறான்! உண்மையான சகோதர பாசம் இருந்தால், இப்படிச் செய்வானா...?

"தங்காய்! உன்னுடைய நன்மைக்காகவே அவன் உன்னை இளவரசருக்கு மணம் செய்து கொடுக்க விரும்பலாம் அல்லவா?"

"ஆமாம்; என்னுடைய நன்மை தீமையை இவன் கண்டுவிட்டானாக்கும்! உண்மையில், என்னுடைய நன்மையை அவன் கருதவேயில்லை, அக்கா!"

"ஈழம் முதல் வட பெண்ணை வரையில் பரந்த சோழ ராஜ்யத்தின் சிங்காதனத்தில் நீ பட்ட மகிஷியாக வீற்றிருக்க வேண்டும் என்று உன் தமையன் விரும்புவது உன்னுடைய நன்மைக்கு அல்லவா?"

"இல்லவே இல்லை! நான் தஞ்சாவூர் ராணியானால், இவன் முதன்மந்திரியாகலாம் அல்லது பெரிய பழுவேட்டரையரைப் போல் தனாதிகாரியாகலாம் என்ற ஆசைதான் காரணம்! அக்கா! அக்கா...!" என்று மணிமேகலை மேலே சொல்லத் தயங்கினாள்.

"சொல், மணிமேகலை! உன் மனத்தில் உள்ளது எதுவானாலும் தாராளமாய்ச் சொல்லலாம். என்னிடம் உனக்குள்ள அன்பைக் குறித்து நீ சொன்னதெல்லாம் உண்மைதானே!"

"அக்கா! அதைப் பற்றிச் சந்தேகிக்க வேண்டாம். இந்த உலகத்திலேயே நான் அன்பு வைத்திருப்பது இரண்டு பேரிடந்தான். ஒருவர் தாங்கள்..."

"இன்னொருவர் யார்?"

"உங்கள் மனத்துக்கு அது தெரியும், என்னை ஏன் கேட்கிறீர்கள்...?"

"தங்காய்! உனக்கு அது சந்தோஷமாயிருக்கும் என்று நினைத்தேன். கதைகளும் காவியங்களும் நீ கேட்டதில்லையா? ஒரு பெண்ணின் உள்ளத்தில் காதல் உதயமானால் அதைப் பற்றி அவள் யாரிடமாவது பேச விரும்புவது இயல்பு அல்லவா? அந்தரங்கத் தோழி

என்பது பின் எதற்காக...?"

"அது உண்மை தான், அக்கா! என் அந்தரங்கத்தையும், தங்களிடம் தெரியப்படுத்தியிருக்கிறேன். ஆனால் இப்போது நான் தங்களிடம் அவசரமாக வந்தது வேறு ஒரு செய்தி சொல்வதற்காக. மிக்க கவலை தரும் செய்தி, அக்கா!"



நந்தினி திடுக்கிட்டு, "என்ன? என்ன?" என்று கேட்டாள். எத்தனையோ காலமாகத் திட்டமிட்டுக்கொண்டிருந்தது இன்று நிறைவேற்றலாம் என்று எண்ணியிருந்த காரியத்துக்கு ஏதாவது தடங்கல் ஏற்படுமோ என்ற பீதி அவள் மனத்தில் குடி கொண்டது. அதன் அறிகுறி அவள் முகத்திலும் தோன்றியது.

"அக்கா! தனாதிகாரி பழுவேட்டரையர் இன்னும் தஞ்சாவூருக்குப் போய்ச் சேரவில்லையாம். வழியில்..."

"வழியில் என்ன நேர்ந்தது? ஒரு வேளை மனத்தை மாற்றிக்கொண்டு திரும்பிவிட்டாரா?" என்று நந்தினி கேட்ட கேள்வியில் பீதி குறைந்திருக்கவில்லை.

"அப்படி அவர் திரும்பியிருந்தாலும் நன்றாயிருக்கும், அக்கா! அன்றைக்கு நாம் ஏரித் தீவில் இருந்தபோது புயல் அடித்ததல்லவா? அந்தப் புயல் கொள்ளிடத்திலும் அப்பாலும் ரொம்பக் கடுமையாக அடித்ததாம். பழுவேட்டரையர் கொள்ளிடத்தில் படகில் சென்றபோது புயல் பலமாக இருந்ததாம்..."

"அப்புறம்?" என்று நந்தினி பரபரப்புடனேதான் கேட்டாள் ஆயினும் கவலைத் தொனி சிறிது குறைந்திருந்தது.

"அக்கரை சேரும் சமயத்தில் படகு கவிழ்ந்து விட்டதாம்!"

"ஐயோ!"

"தப்பிக் கரை ஏறியவர்கள் கொள்ளிடக் கரையில் எங்கும் தேடிப் பார்த்தார்கள். தங்கள் கணவர் மட்டும் அகப்படவில்லை!" என்றாள் மணிமேகலை.

இந்தச் செய்தியைக் கேட்டதும் நந்தினி விம்மி அழுவாள் என்று மணிமேகலை எதிர்பார்த்து, அவளுக்கு ஆறுதல் சொல்லத் தயாராயிருந்தாள். ஆனால்



இவ்விதம் கூறிய மணிமேகலை துயரம் தாங்காமல் விம்மத் தொடங்கினாள்.

நந்தினி அவளைக் கட்டி அணைத்துக் கொண்டு, ''என் கண்ணே! என்னிடம் நீ எவ்வளவு அன்பு வைத்திருக்கிறாய் என்று தெரிந்துகொண்டேன். ஆனால், நீ வருத்தப்பட வேண்டாம்!'' என்றாள்.

மணிமேகலை சிறிது வியப்புடனேயே நந்தினியை நிமிர்ந்து பார்த்தாள். 'இவளுடைய நெஞ்சு எவ்வளவு கல் நெஞ்சு?' என்று அவள் மனத்தில் தோன்றிய எண்ணத்தை நந்தினி தெரிந்துகொண்டாள்.

''தங்காய்! துக்கச் செய்தியைக் கூறி எனக்கு ஆறுதல் சொல்லுவதற்காக நீ ஓடி வந்தாய். ஆனால் உனக்கு நான் தேறுதல் கூற வேண்டியிருக்கிறது. நீ வருத்தப்பட வேண்டாம். என் கணவருடைய உயிருக்கு ஆபத்து ஒன்றும் வரவில்லை என்பது நிச்சயம். அப்படி ஏதாவது நேர்ந்திருந்தால் என் நெஞ்சே எனக்கு உணர்த்தியிருக்கும். அதனாலேதான் நான் கவலைப்படவில்லை. ஆனால் நீ கேள்விப்பட்டதை இன்னும் விவரமாய்ச் சொல்! என் மனத்தில் வேறொரு சந்தேகம் உதித்திருக்கிறது...''

''என்ன சந்தேகம், அக்கா!''

''உன் தமையனும் அந்தப் பல்லவ பார்த்திபேந்திரனும் சேர்ந்து என் கணவருக்கு ஏதேனும் கெடுதல் செய்யத் திட்டமிட்டிருக்கிறார்களோ என்று

நந்தினியோ அப்படியொன்றும் செய்யவில்லை. சிறிதும் படபடப்புக் காட்டாமல், அவநம்பிக்கை தொனித்த குரலில், "இந்தச் செய்தி உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றாள்.

''பழுவேட்டரையரோடு போன ஆட்களில் ஒருவன் திரும்பி வந்திருக்கிறான். அவன் என் தமையனிடம் சொல்லிக் கொண்டிருந்தான். நானே என் காதினால் கேட்டேன், அக்கா! தங்களிடம் இந்தச் செய்தியை எப்படித் தெரிவிப்பது என்று என் தமையன் தயங்கி, இளவரசரிடம் யோசனை கேட்டுக் கொண்டிருந்தான். நான் எப்படியாவது தங்களிடம் சொல்லி விடுவது என்று ஓடி வந்தேன்...''

எண்ணுகிறேன். அதற்கு, முன் ஜாக்கிரதையாக இம்மாதிரி ஒரு செய்தியை அவர்களே தயாரித்திருக்கலாமல்லவா?"

"எனக்கு விளங்கவில்லை, அக்கா! அவர்கள் ஏன் பழுவேட்டரையருக்குத் தீங்கு செய்ய வேண்டும்?"

"நீ பச்சைக் குழந்தையாகவே இருக்கிறாய், மணிமேகலை! உன் தமையனும் பார்த்திபேந்திரனும் என் மீது துர் எண்ணம் கொண்டிருக்கிறார்கள் என்று நான் சொல்லவில்லையா? அதற்காகத்தான் இந்த வாளை எப்போதும் அருகிலேயே வைத்துக் கொண்டிருக்கிறேன் என்றும் சொல்லவில்லையா?"

"சொன்னீர்கள்! அதனால் கந்தமாறனை இனிமேல் என் தமையன் என்று சொல்ல வேண்டாம் என்று கேட்டுக்கொண்டேன். அந்தப் பாதகனை என் உடன் பிறந்தவனாக நான் இனிக் கருத மாட்டேன், இருந்தாலும்... அவர்கள் பழுவேட்டரையருக்கு ஏன் தீங்கு செய்ய வேண்டும்?"

"தங்காய்! இது கூடவா நீ தெரிந்து கொள்ள முடியவில்லை? கிழவரைக் கலியாணம் செய்துகொண்டு தவிக்கும் நான், அவர் போய்விட்டால் மனத்திற்குள் சந்தோஷப்படுவேன், பிறகு அவர்களுடைய துர்நோக்கத்துக்கும் இணங்குவேன் என்றுதான். உன் தமையன் இப்படிப்பட்டவன் என்று தெரிந்திருந்தால் அவனை என் வீட்டில் வைத்திருந்து சகோதரனைப் போல் கருதிப் பணிவிடை செய்திருக்க மாட்டேன். யமலோகத்தின் வாசல் வரை சென்றவனைக் காப்பாற்றியிருக்க மாட்டேன்..."

"அக்கா! இனி நான் தங்களை விட்டு ஒரு கணமும் பிரிய மாட்டேன். அந்த இருவரில் ஒருவர் இங்கு வந்தால், என்னுடைய கையாலேயே அவர்களைக் கொன்று விடுவேன்!"

"மணிமேகலை! அந்தக் கவலை உனக்கு வேண்டாம், என்னை நானே காப்பாற்றிக்கொள்வேன். கந்தமாறனும் பார்த்திபேந்திரனும் என் அருகில் நெருங்கினால், என்றும் மறக்காதபடி அவர்களுக்குப் புத்தி கற்பித்து அனுப்புவேன். அவர்களிடம் எனக்குச் சிறிதும் பயமில்லை. முரட்டு இளவரசைப் பற்றி மட்டுந்தான் கொஞ்சம் பயம் இருந்தது. நல்லவேளையாக அந்த அபாயத்தினின்று என்னை நீயே காப்பாற்றி விட்டாய்!"

"நான் தங்களைக் காப்பாற்றினேனா? அது எப்படி?"

"இளவரசரின் உள்ளத்தை நீ கவர்ந்து விட்டாய் என்பதை அறியவில்லையா, மணிமேகலை! வாணர் குலத்து வீரரைக் கையைப் பிடித்து இழுத்து அப்பால் தள்ளிவிட்டு உன்னை அவர் ஏரித் தண்ணீரிலிருந்து எடுத்துக் காப்பாற்றியதன் காரணம் என்ன? அதற்குப் பிறகும் அவரை நான் கவனித்துக்கொண்டுதான் வருகிறேன். உன் மனத்திற்கு அது தெரியவில்லையா, மணிமேகலை?"

"தெரியாமல் என்ன? தெரிந்துதானிருக்கிறது. இளவரசரை நினைத்தாலே எனக்குப் பயமாயிருக்கிறது. அவர் அருகில் வந்தால் என் உடம்பு நடுங்குகிறது. என் தமையன் என்று சொல்லிக் கொள்ளும் கிராதகன் இருக்கிறான் அல்லவா? அவன் வேறு ஓயாமல் என் பிராணனை வாங்கிக்கொண்டிருக்கிறான்..."

"இளவரசரை நீ மணந்து கொள்ள வேண்டும் என்றுதானே?"

"ஆம்; தனியாக என்னை ஒரு கணம் பார்த்தால் போதும்! உடனே எனக்கு அவன் உபதேசம் செய்ய ஆரம்பித்து விடுகிறான். அவனுடைய தொந்தரவுக்காகவே..."

"அவனுடைய தொந்தரவுக்காக இளவரசரை மணந்துகொண்டு விடலாம் என்று முடிவு செய்து விட்டாயா?"

"தாங்கள் கூட இவ்விதம் சொல்லுகிறீர்களே?" என்று மணிமேகலை விம்மி அழத் தொடங்கினாள். அவளுடைய கண்களில் கண்ணீர் அருவி பெருகிற்று.

நந்தினி அவளைச் சமாதானப்படுத்தினாள். "ஏதோ விளையாட்டுக்காகச் சொன்னேன். அதற்காக இப்படி அழ ஆரம்பித்து விட்டாயே?" என்று சொல்லிக் கண்ணீரைத் துடைத்தாள்.

மணிமேகலை சிறிது சமாதானம் அடைந்ததும் "என் கண்ணே! உன் மனத்தை நன்றாகச் சோதித்துப் பார்த்துப் பதில் சொல், உண்மையாகவே, நீ இளவரசர் கரிகாலரை விரும்பவில்லையா? அவரை மணந்துகொண்டு சோழ சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷியாக இருக்க ஆசைப்படவில்லையா?'' என்றாள் நந்தினி.

''ஒரு தடவை கேட்டாலும் நூறு தடவை கேட்டாலும் என் பதில் ஒன்றுதான், அக்கா! அந்த ஆசை எனக்குக் கிடையவே கிடையாது."

"வாணர் குலத்து வந்தியத்தேவரிடம் உன் மனத்தைப் பறி கொடுத்திருக்கிறாய் என்பதும் உண்மைதானே?"

"ஆம், அக்கா! ஆனால் அவருடைய மனது எப்படியிருக்கிறதோ?"

"அவருடைய மனது எப்படியிருந்தால் என்ன? அவர் உயிரோடிருந்தால் அல்லவா அவர் மனத்தைப் பற்றிக் கேட்க வேண்டும்?"

மணிமேகலை திடுக்கிட்டு, ''என்ன சொல்கிறீர்கள், அக்கா!" என்றாள்.

''மணிமேகலை! நீ இன்னும் உண்மையைத் தெரிந்துகொள்ளவில்லை. உன்னுடைய நிலைமையையும் உன் அன்புக்குரியவனுடைய நிலைமையையும் உணரவில்லை. என்னைப் பற்றி நீ கவலைப்படுகிறாய்; என் கணவரைப் பற்றிக் கவலைப் படுகிறாய். எங்களைப் பற்றி உண்மையில் கவலைப்பட வேண்டியதேயில்லை. என் கணவர் எப்பேர்ப்பட்டவர் என்பது உனக்குத் தெரியும். அவர் வாயசைத்தால் இந்த நாடே அசையும். சுந்தர சோழ சக்கரவர்த்தி அவர் இட்ட கோட்டைத் தாண்ட மாட்டார். என் கணவர் வார்த்தைக்கு மாறாக முதன்மந்திரி வார்த்தையையும் கேட்க மாட்டார். அவருடைய சொந்தப் பெண்டு பிள்ளைகளின் பேச்சுக்கும் செவி கொடுக்க மாட்டார். பழுவேட்டரையரை வயதான கிழவர் என்று உன் தமையனைப் போன்ற மூடர்கள் எண்ணிப் பரிகாசமும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர் ஒரு மூச்சு விட்டால், உன் தமையனையும் பார்த்திபேந்திரனையும் போன்ற நூறு வாலிபர்கள் மல்லாந்து விழுவார்கள். ஆகையால் பழுவேட்டரையருக்கு யாரும் தீங்கு செய்துவிட முடியாது. என் கண்ணே! என்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் எனக்குத் தெரியும். இதைக் காட்டிலும் எத்தனையோ இக்கட்டான நிலைமைகளில் என்னை நான் காப்பாற்றிக் கொண்டிருக்கிறேன். உண்மையாகவே இப்போது நான் கவலைப்படுவதெல்லாம் உன்னைப் பற்றித்தான். 'இந்தப் பெண் நம்மிடம் இவ்வளவு அன்பு வைத்திருக்கிறாளே? இவளுக்கு ஒன்றும் நேராமலிருக்க வேண்டுமே?' என்று கவலைப் படுகிறேன். நீ இந்த அறைக்குள் சற்று முன் வந்தபோது கூட உன்னைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்...''

''தாங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லை. அக்கா! எனக்கு அப்படி என்ன அபாயம் வந்துவிடும்?"

"பேதைப் பெண்ணே! வேண்டாத புருஷனுக்கு வாழ்க்கைப் படுவதைக் காட்டிலும் பெண்களுக்கு நேரக் கூடிய அபாயம் வேறு என்ன இருக்க முடியும்?"

"அது ஒரு நாளும் நடவாத காரியம்."

"உன் தமையன் உன்னை இளவரசருக்கு மணம் செய்விப்பது என்று தீர்மானம் செய்துவிட்டான்; உன் தந்தையும் சம்மதித்து விட்டார்."

''அவர்களுடைய தீர்மானமும் சம்மதமும் என்னை என்ன செய்யும்? நான் சம்மதித்தால்தானே?"

''இப்படிக் குழந்தை போல் பேசுகிறாயே? சிற்றரசர் குலத்து பெண்களைக் கலியாணம் செய்து கொடுப்பது, அந்தப் பெண்களின் சம்மதத்தைக் கேட்டுக் கொண்டுதான் உலகத்தில் நடைபெறுகிறதா? அதிலும், மூவுலகையும் ஆளும் சக்கரவர்த்தியின் மூத்த குமாரர், - பட்டத்து இளவரசர், - உன்னை மணந்து கொள்ள விரும்பினால், அதற்கு யார் தடை சொல்ல முடியும்?"

"ஏன்? என்னால் முடியும். இளவரசரிடம் நேரே சொல்லி விடுவேன்.''

"என்ன சொல்லுவாய்?"

"அவரை மணந்துகொள்ள எனக்கு இஷ்டம் இல்லை என்று சொல்வேன்..."

"காரணம் கேட்டால்?"

"உண்மையான காரணத்தைத்தான் சொல்வேன். என் மனம் அவருடைய சிநேகிதர் வல்லவரையரிடம் ஈடுபட்டு விட்டது என்று சொல்வேன்..."

"பேதைப் பெண்ணே! இதை நீ சொல்லவே வேண்டாம். அவர்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கிறது."

"தெரிந்திருந்தால் என்னை ஏன் வற்புறுத்துகிறார்கள்? அப்படி அதிகமாக வற்புறுத்தினால், இதோ நானும் ஒரு கத்தி வைத்திருக்கிறேன், அக்கா!" என்று சொல்லி மணிமேகலை தன் இடுப்பில் செருகியிருந்த சிறிய கத்தி ஒன்றை எடுத்துக்காட்டினாள்.

"என் அருமைத் தங்கையே! உன் அறியாமையைக் கண்டு ஒரு பக்கம் எனக்கு அழுகை வருகிறது; இன்னொரு பக்கம் சிரிப்பும் வருகிறது."

"அப்படி என்ன நான் உளறி விட்டேன்; அக்கா!"

"உன்னை யாரோ வற்புறுத்தப் போவதாக எண்ணியிருக்கிறாய். உன்னுடைய சம்மதத்தைக் கேட்பார்கள் என்றும் நினைத்திருக்கிறாய். அவ்விதம் ஒன்றும் அவர்கள் செய்யப்போவதில்லை. நீ இளவரசரை மணந்துகொள்ளத் தடையாயிருக்கும் காரணத்தை நீக்கி விடப் போகிறார்கள்!"

"என்ன சொல்கிறீர்கள், அக்கா!"

"நீ யாரிடம் உன் மனத்தைப் பறிகொடுத்திருக்கிறாயோ, அவருடைய உயிருக்கு அபாயம் நெருங்கியிருக்கிறது என்று சொல்லுகிறேன்..."

"ஐயையோ...!"

"உன் தமையன் ஏற்கெனவே அவனுடைய பழைய சிநேகிதன் மீது துவேஷம் கொண்டிருக்கிறான். இந்த அரண்மனையில் சில மாதங்களுக்கு முன்னால் சிற்றரசர்கள் கூடிச் செய்த சதியாலோசனையைப் பற்றி இளவரசனிடம் சொல்லிக் கொடுத்து விட்டான் என்று அவனுக்குக் கோபம். தன் முதுகிலே குத்திக் கொல்ல முயற்சி செய்ததாக வேறு குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறான். வேறொரு காரணத்தினால் பார்த்திபேந்திரனுக்கும் உன் காதலன் பேரில் அளவில்லாத கோபம்..."

"இவர்களுடைய கோபம் அவரை என்ன செய்துவிடும், அக்கா! அவர் சுத்த வீரர் அல்லவா!"

"சுத்த வீரராயிருந்தால் என்ன? திடீரென்று சூழ்ந்துகொள்ளும் பல கொலைகாரர்களுக்கு மத்தியில் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லாத ஒரு சுத்த வீரன் என்ன செய்ய முடியும்...?"

"ஐயோ! அவரைக் கொன்று விடுவார்கள் என்றா சொல்லுகிறீர்கள்?"

"கொல்ல மாட்டார்கள்; கண்ட துண்டமாக வெட்டி நரிகளுக்கும் நாய்களுக்கும் போட்டு விடுவார்கள்..."

"ஐயோ! என்ன கர்ண கடூரம்?"

"கேட்பதற்கே உனக்குக் கர்ண கடூரமாயிருக்கிறதே? உண்மையில் நடந்து விட்டால், என்ன பாடு படுவாய்?"

"அக்கா! இப்போதே என் உயிரும் உள்ளமும் துடிக்கின்றன. நிஜமாக, அப்படியும் செய்து விடுவார்களா? அவர் இளவரசருடைய அத்தியந்த சிநேகிதர் ஆயிற்றே?"

"அத்தியந்த சிநேகிதர்கள் கொடிய பகைவர்களாக மாறுவதைப் பற்றி நீ கேட்டதில்லையா, தங்காய்! உன் தமையனும் பார்த்திபேந்திரனும் அப்படியெல்லாம் இளவரசரிடம் தூபம் போட்டு விட்டிருக்கிறார்கள்..."

"சண்டாளர்கள்! இதெல்லாம் தங்களுக்கு..."

"எனக்கு எப்படித் தெரிந்தது என்று தானே கேட்கிறாய்? இன்று பகலில், பார்த்திபேந்திரன் என்னிடம் விடை பெற்றுச் செல்லும் வியாஜத்தை வைத்துக் கொண்டு வந்திருந்தான்..."

"அந்தப் பாதகன் எங்கே போகிறான்?"

"அதிக தூரம் போகவில்லை. திருக்கோவலூர்க் கிழவன் மலையமான் ஒரு பெரிய சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு இந்த ஊரை நோக்கி வந்து கொண்டிருக்கிறான் என்று நீ கேள்விப் பட்டாய் அல்லவா?"

"கேள்விப்பட்டேன். அது என்னத்திற்

காக என்று ஆச்சரியப்பட்டேன்."

"அதுவும் உன் நிமித்தமாகத்தானாம்! இன்று மத்தியானம் இளவரசர் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்தாராம். 'மணிமேகலையை எனக்கு மணம் செய்து கொடுக்காவிட்டால், மலையமான் சைன்யம் வந்தவுடன் இந்தக் கோட்டை – அரண்மனை எல்லாவற்றையும் தகர்த்துத் தரை மட்டமாக்கி விடப் போகிறேன்!' என்றாராம். அப்போதுதான் உன் தமையன் 'அதற்குத் தடையாயிருப்பது நாங்கள் அல்ல; உங்கள் சிநேகிதன் வந்தியத்தேவன்தான்' என்றானாம். 'அந்தத் தடையை நீக்க உங்களால் முடியாதா?' என்று இளவரசர் கேட்டாராம். 'கட்டளைஅளித்தால் முடியும்' என்றானாம் உன் அண்ணன். என் அருமைச் சகோதரி! பார்த்திபேந்திரனிடம் மேலும் பேச்சுக் கொடுத்துச் சில விவரங்களை அறிந்தேன். உன் ஆருயிர்க் காதலனுடைய உயிருக்கு ஆபத்து நெருங்கியிருப்பது நிச்சயம். நீ உடனே முயற்சி எடுக்கா விட்டால், கலியாணம் ஆவதற்கு முன்பே கணவனை இழந்து விடுவாய்!" என்றாள் நந்தினி.



தைக் கேட்ட மணிமேகலையின் உடலும், உள்ளமும் துடிதுடித்ததில் வியப்பு ஒன்றும் இல்லை அல்லவா?

"ஐயோ! அவருக்கு எப்படியாவது உடனே எச்சரிக்கை செய்ய வேண்டுமே!" என்று தட்டுத் தடுமாறிக் கொண்டே கூறினாள்.

"எச்சரிக்கை செய்யலாம். ஆனால், உன் காதலன் சுத்த வீரன் என்று நீதானே சற்று முன் கூறினாய்?அவனுடைய உயிருக்கு அபாயம் என்று கேட்டுப் பயந்து ஓடி விடுவானா? மாட்டான்! இன்னும் அவனுடைய பிடிவாதம் அதிகமாகும்" என்றாள் நந்தினி.

"தாங்கள்தான் யோசனை சொல்ல வேண்டும். என் தலை சுற்றுகிறது. என்ன செய்கிறது என்று தெரியவில்லை" என்றாள் மணிமேகலை.

"நீ இங்கே வரும்போது அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். எனக்கும் ஒன்றும் புரியவில்லை. நல்லவேளையாக நீ ஒரு செய்தி கொண்டு வந்தாய். அதிலிருந்து, வல்லவரையரைக் காப்பாற்ற ஒரு யோசனை தோன்றியது."

"நான் கொண்டு வந்த செய்தியிலிருந்தா? அது என்ன செய்தி?"

"பழுவேட்டரையருடைய படகு கவிழ்ந்ததென்றும் பிறகு அவரைப் பற்றித் தகவல் தெரியவில்லை என்றும் சொன்னாய் அல்லவா?"

"ஆமாம்!"

"வந்தியத்தேவரிடம் நான் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். எனக்காக அவர் போய் என் கணவரைப் பற்றிய உண்மை தெரிந்து வர வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன். நீயும் எனக்காகப் பரிந்து பேசு. இரண்டு பேதைப் பெண்களின் வேண்டுகோளை அந்த வீரர் புறக்கணிக்க மாட்டார். அவரை உடனே இந்த இடத்திலிருந்து வெளியே அனுப்புவதுதான் அவர் உயிரைக் காப்பாற்றும் வழி. வேறு உபாயம் ஒன்றுமில்லை. அவர் போன பிறகு நீ உன் தமையனாரிடமும் தந்தையிடமும் இளவரசரிடமும் தைரியமாக உன் மனத்தை வெளியிட்டுப் பேசலாம். நானும் உனக்காகப் பேசுகிறேன். 'இஷ்டமில்லாத பெண்ணை வற்புறுத்துவது சோழ குலத்தில் பிறந்தவர்களுக்கு அழகு அல்ல' என்று சொல்லுகிறேன்."

"தங்கள் பேச்சையும் அவர்கள் கேட்கா விட்டால், என் கையில் கத்தி இருக்கிறது!"

"சரி, சரி! இப்போது முதலில் உன் காதலரை வெளியேற்றிக் காப்பாற்ற முயல்வோம். அவர் இருக்குமிடம் உனக்குத் தெரியும் அல்லவா? நீ நேரில் அவரைப் பார்க்க முடியாவிட்டால், உன் தோழி சந்திரமதியை அனுப்பு. இல்லாவிடில், இடும்பன்காரியை அனுப்பு. எப்படியாவது அவரை இங்கே அழைத்துக் கொண்டு வா!"

"அவர் போகச் சம்மதித்தாலும் இங்கேயிருந்து எப்படி வெளியில் போவார். அக்கா! என் அண்ணன் தடுத்து நிறுத்தி விட்டால்...?"

"உன் அண்ணனுக்கு ஏன் தெரிய வேண்டும். மணிமேகலை! முதன் முதலில் அவர் இந்த அறைக்குள் வந்து உன்னைத்

திடுக்கிடச் செய்தாரே? அந்தச் சுரங்க வழியிலேயே அனுப்பிவிட்டால் போகிறது! சீக்கிரம் போ, தங்காய்! வந்தியத்தேவர் இனி இந்தக் கோட்டையில் இருக்கும் ஒவ்வொரு நிமிடமும் அவருடைய உயிருக்கு அபாயம் அதிகமாகும். உன் தமையன் ஏவும்



கொலைகாரர்கள் எப்போது அவரைத் தாக்குவார்கள் என்று நமக்கு என்ன தெரியும்?"

"இதோ போகிறேன், அக்கா! எப்படியாவது அவரை அழைத்துக்கொண்டு தான் திரும்பி வருவேன்" என்று சொல்லிவிட்டு மணிமேகலை சென்றாள்.

அவளுடைய காலடிச் சத்தம் மறைந்ததும், பக்கத்திலிருந்த வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவை யாரோ தட்டுவது போன்ற சத்தம் கேட்டது.

நந்தினி இரகசியக் கதவின் அருகில் சென்று, அதன் உட்கதவைத் திறந்தாள். இருட்டில் ஒரு கோரமான முகம் இலேசாகத் தெரிந்தது.

"மந்திரவாதி! வந்து விட்டாயா?" என்றாள் நந்தினி.

''வந்துவிட்டேன், ராணி! வேளையும் வந்துவிட்டது!'' என்றான் ரவிதாஸன்.

(தொடரும்)







# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

## (FREE HOME FOR THE BLIND AND AGED)


**2-21A, SAPTAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI - 517503.**

**Ph: 08574-39992, 38623. E-mail:navajeevan@vsnl.com**

**Website: www.navajeevan.org**


### எங்கள் பிரார்த்தனை

ஹே பகவான், பிறவியிலேயே விழிகளை இழந்துவிட்ட எனக்கு நல்ல கல்வி அறிவையும், சங்கீதத்தையும் அளித்து ஒரு புதிய வாழ்க்கையைக் கொடு-காயத்ரீ 8 வயது நிரம்பிய ஒரு அழகான சிறுமியின் வேண்டுகோள்.

ஹே ஈச்வர், எல்லோரையும் இழந்து வாழ்க்கையின் கடைசி அத்தியாயத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் எனக்கு நல்ல உடல் ஆரோக்கியத்தை அளித்து உன் திருவடிகளை அடைய வழிகாட்டு-லக்ஷ்மிபாட்டி 72 வயது ஒரு மூதாட்டியின் மனமார்ந்த பிரார்த்தனை.

ஹே கருணாமயி ஈச்வரி, என் குடும்பத்தினராலும் சமூகத்தினராலும் புறக்கணிக்கப்பட்டு நம்பிக்கையுடன் போராடி வரும் எனக்கு ஒரு புதிய பாதையை காட்டு-விஜயலக்ஷ்மி 23 வயது ஒரு அனாதைப் பெண்ணின் நீண்ட பிரார்த்தனை.

ஹே ஏழுமலையானே, ஏழ்மை முதுமை காரணமாக பார்வை குறைந்து பரிதவிக்கும் எனக்கு மீண்டும் ஒளி கிடைக்க அருள் புரிவாய் - நாராயணன் 80 வயது நெருங்கிக் கொண்டிருக்கும் ஒரு ஏழை முதியவரின் ஈரமான வேண்டுகோள்.

இப்படியாக திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் புதிய வாழ்க்கை நவஜீவனம் பொருட்டு தொடர்ந்து பிரார்த்தனையில் குழந்தைகளும் முதியவர்களும் ஈடுபட்டு வருகிறார்கள்.

கடந்த 21 வருடங்களாக கருணை உள்ளம் கொண்ட தமிழ் வாசக அன்பர்களின் தொடர் உதவியுடன் நூற்றுக்கணக்கான பார்வையற்ற குழந்தைகள் திக்கற்ற பெண்கள் மற்றும் ஏழை முதியோர்கள் ஒரு புதிய வாழ்க்கையைப் பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

### எங்கள் வேண்டுகோள்

திருப்பதி புண்ய க்ஷேத்திரத்தில் செயல்பட்டு வரும் எமது சமூக நலத்தொண்டு என்கிற தொடர் வேள்வியில் கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்களையும் கலந்து கொள்ளும்படி வேண்டுகிறோம்.

### அன்னதானம்/நேத்திரதானம் தொண்டுகள்

1. ஒரு நாளில் ஒருவேளை 50 குழந்தைகளுக்கு அன்னதானம் வழங்க - நாராயண ஸேவை - ரூ. 500/-
2. Annadanam Endowment Scheme: பிரதிவருடம் ஒரு குறிப்பிட்ட நாள் / திதியில் தொடர்ந்து 15 வருடம் 50 ஏழை குழந்தைகள் / முதியோர்களுக்கு அன்னதானம் வழங்க - One time donation - ரூ. 5,000/-
3. நவஜீவன் இலவச கண் மருத்துவ மனையில் ஒருவருக்கு மீண்டும் பார்வை கிடைக்க IOL கண் ஆபரேஷன் செய்ய - நேத்திரதானம் - ரூ. 700/-
4. Netradan Endowment Scheme: பிரதி வருஷம் ஒரு குறிப்பிட்ட நாளில் தொடர்ந்து 10 வருடம் "காட்ராக்ட்" கண் அறுவை செய்ய - One time donation - ரூ. 7000/-
5. தீபாவளி போன்ற முக்கிய தினங்களில் விசேஷ அன்னதானம் வழங்க 100 inmatesக்கு - ரூ. 1000/-

---

மேற்படி தொண்டுகளுக்கு அனுப்பும் நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. Contributions to "Navajeevan Blind Relief Centre, Tirupati", are eligible for tax relief u/s 35AC & 80G of income Tax Act 1961. பிறந்த நாள், திருமணநாள் மற்றும் திதி போன்ற விசேஷங்களை குறிப்பிட்டால் அன்றைய தினம் நன்கொடை அனுப்பும் அன்பர்களின் சார்பாக ஸ்ரீ ஏழுமலையான் பத்மாவதி தாயாருக்கு பிரார்த்தனை பூஜை செய்வித்து பிர சாதத்துடன் விபரம் அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் தங்களின் நன்கொடைகளை By cheque/DD/MO வாயிலாக 'Navajeevan Blind Relief Centre, Tirupati' என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்பும்படி வேண்டுகிறோம்.

"யாதேவி சர்வ பூதேஷு தயா ரூபேண ஸம்ஸ்திதா"
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:

நாராயண ஸேவையில்
**கே.எஸ். ஆசார்யா**
ஸ்தாபகர்.

நவஜீவன் ஆஸ்ரமம், திருச்சானூர், திருப்பதி - 517503.



• படப்பிடிப்புக் குழுவினர்



• கெடி

# ரஜினி - ஜப்பான் ஸ்டைல்!

மாமல்லபுரம் கடற்கரை! கோவில் அருகே ஒரு கூட்டம். அதை நோக்கி உற்சாகமாய் ஓடிக் கொண்டிருந்த இரண்டு சிறுவர்களை நிறுத்தி, என்ன விஷயம் என்று வினவினோம். "ரஜினி ஷூட்டிங் நடக்குது" என்று மூச்சிரைக்கக் கூறிவிட்டு மீண்டும் ஓட்டமெடுத்தார்கள்.

படையப்பாவுக்குப் பிறகு பொருத்தமான கதை கிடைக்கவில்லை என்று சொன்னார்களே? ஒருகால் வீரப்பா - என்ற பெயரில் வீரப்பன் கதையைக் காதும் காதும் வைத்த மாதிரி எடுக்கத் தொடங்கி விட்டாரோ ரஜினி?

அப்படியே எடுத்தாலும் காட்டில் படம் பிடிக்க வேண்டிய படத்தை கடற்கரையிலா எடுப்பார்கள்? சந்தேகம் உந்தித் தள்ள, கூட்டத்திற்குள் புகுந்து, தலை நிமிர்த்தினோம்.

அங்கே கறுப்பு ஜிப்பா, கம்போர்ட



• நம்பராங்

**பி**ரதமர் நேருஜியின் இல்லத்தில் ஒரு விருந்து நடந்து கொண்டிருந்தது. ஒரு விருந்தாளி காணாததைக் கண்டது போல கோழிக் குஞ்சுக் கறியை விருந்து பரிமாறும் பெரிய பாத்திரத்திலிருந்து அள்ளி அள்ளி எடுத்துத் தமது தட்டில் வைத்துக் கொண்டார்.



நேருஜி அவரை முதுகில் தட்டி ''கோழிக் குஞ்சுகளெல்லாம் செத்துப் போனவைதான்; அவற்றால் ஓட முடியாது; மெதுவாகவே எடுத்து வைத்துக் கொள்ளலாம்'' என்றார்!

'மேதைகளின் வாழ்விலே' என்ற நூலிருந்து

– மலர் சூர்யா

ஜீன்ஸ் சகிதம், தமக்கேயுரிய தோரணையில் முதுகைக் காட்டியபடி ரஜினி நிற்கிறார். ''ஆக்ஷன்'' என்று உத்தரவு பிறக்கிறது. ரஜினி விஸ்க்... விஸ்க் என்று காற்றில் கைகளை வெட்டி ஸ்டைல் செய்தபடி திரும்புகிறார். ஆ' ரஜினி இடத்தில் ஒரு ஜப்பானியர்! ஏதாவது மேஜிக் நடந்து விட்டதோ என்று குழம்பிய நம்மைத் தெளிவு படுத்தியவர் இயக்குனர் நந்தகுமார்.

முத்து படம் ஜப்பானில் ஒரு வருடத்தைக் கடந்து ஓடி வெற்றி பெற்றது. அங்கு 'முத்து' என்ற பெயரைத் தங்கள் பெயரோடு இணைத்து வைத்துக் கொள்ளும் அளவுக்கு நமது கமர்ஷியல் சினிமா அவர்களைக் கவர்ந்து விட்டது. காரணம் கடந்த இருபது வருடத்தில் மொத்தம் அறுபது படங்கள் தான் அங்கே எடுத்திருக்கிறார்கள். அவற்றிலும் பிரசாரமும், பூடகமான காட்சிகளும்தான் அதிகம். அத்துடன் தியேட்டரில் ஒரு டிக்கெட் விலை ஐயாயிரம் ஜப்பானிய யென்கள் - நமது இந்திய மதிப்பிற்கு இரண்டாயிரம் ரூபாய்!

ஜப்பானியர்களின் தனி நபர் வருமானம் அதிகம் என்றாலும்கூட, அவர்கள் தியேட்டருக்கு வந்து படம் பார்ப்பதில்லை. தொலைக்காட்சிதான் அங்கே பெரிய சாதனம். இங்கு சன் டீ.வியைப் போல அங்கே நிப்பான் டீ.வியின் ஆட்சி நடக்கிறது. இதையும் மீறி முத்து படம் அவர்களைக் கவர்ந்து விட்டது.

முத்து படம் ஏன் பிடித்தது என்று கேட்டால் அவர்கள் கூறும் பதில் வித்தியாசமாக இருக்கிறது. "ஹீரோவும், ஹீரோயினும் புதிய புதிய அழகிய இடங்களில் பாடி ஆடுகிறார்கள். பாடல்கள் எங்களை உற்சாகம் கொள்ள வைக்கின்றன. ஹீரோவை நினைத்து உருகும் ஹீரோயினைப் பிடித்திருக்கிறது. அவர்கள் அணியும் உடை பிடித்திருக்கிறது. ஹீரோவின் அசாத்திய திறமையும் கதையில் வரும் திடீர் திடீர் திருப்பங்களும் ஆச்சர்யம் தருகிறது" என்று அடுக்குகிறார்கள்.... மொத்தத்தில் நமது கமர்ஷியல் விஷயங்கள் அவர்களைக் கவர்ந்துவிட்டன.

"இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, நிப்பான் டீ.வி 'நட்டு' என்ற படத்தின் இரண்டாவது பாகத்தை இப்போது எடுத்துக்கொண்டிருக்கிறது.

அது என்ன 'நட்டு'? என்றோம்.

முத்து என்ற பெயரின் சாயலிலேயே இருக்க வேண்டும் என விரும்பி மூன்றெழுத்தில் இப்படி பெயர் வைத்திருக்கிறார்களாம்.

படத்தில் ஹீரோவின் பெயர் நடராஜன். அதைச் சுருக்கி நட்டு என வைத்திருக்கிறார்கள்.

கடந்த ஆண்டு நட்டு படத்தின் முதல் பாகத்தை இங்கேயே எடுத்து ரிலீஸ் செய்தார்கள்... சென்னை தேவிபாலா தியேட்டரில் நான்கு தினங்கள் மட்டும் பகல் காட்சிகளைத் திரையிட்டார்கள். 'ஜப்பானியர்கள் எடுத்த தமிழ்ப் படம்' என்று விளம்பரம் செய்தும் பலன் இல்லை. ஆனால் இதே படம் ஜப்பானில் சூப்பர் ஹிட்.. கோடிகளைக் குவித்திருக்கிறது!

"அதனால்தான் இப்போது இரண்டாவது பாகத்தைப் பதினைந்தே நாட்களில் எடுத்துத் தர இரவு பகலாகப் படப்பிடிப்பு நடத்திக்கொண்டிருக்கிறோம்'' என்றார் நந்தகுமார்.

**ஒ**ரு வினோத சக்தி கொண்ட மாணிக்க கல். கம்ப்யூட்டர் முன்பு அதை வைத்து விட்டால், கம்ப்யூட்டர்கள் ஒட்டு மொத்த

# ஊரெல்லாம் தீபங்களின் ஒளியில் தகதகக்கும்.
# உடையெல்லாம் என்டைஸாக
# ஜொலிஜொலிக்கும்!

நித்தம் ஒன்றாய் அணிந்து
மகிழ புத்தம்புது ஜவுளிகள்.
தீபாவளிக் கென்றே என்டைஸ்
அள்ளித்தரும் அழகுக்
கோலங்கள். உங்கள்
குடும்பத்தில் எல்லோருக்கும்




**என்டைஸ்** ®

சிறந்த துணி ரகங்கள். சரியான விலை.

நேஷனல்
டெக்ஸ்டைல்
கார்ப்பொரேஷன்

தமிழ்நாடு மற்றும்
பாண்டிச்சேரி லிமிடெட்
ஒரு மத்திய அரசு
நிறுவனம்

• நேகா

மாகச் செயல் இழந்து விடும். டெல்லியில் வசிக்கும் ஹீரோ யின் குடும்பத்துக்குச் சொந்த மான அந்தக் கல் ஒரு சமூக விரோத கும்பலிடம் சிக்கிக் கொள்கிறது. அதைக் கொண்டு நாட்டின் பாதுகாப்புத் துறை தகவல் தொடர்பு களைச் சிதைக்கிறார்கள். இந்தியாவில் குடியேறிய ஜப்பானிய ஹீரோ இதைக் கண்டுபிடித்து வில்லன் குழுவை ஒழித் துக்கட்டி, தேசிய கொடிக்கு முன் நின்று 'ஜெய்ஹிந்த்' சொல்கிறார்.

இதற்கிடையே, காதல், தங்கை சென்டிமென்ட் என்று காரம், மணம், சுவை எல்லாமும் உண்டு. சிற்பியின் இசையில் ஏழு பாடல்களை எழுதியிருக்கிறார் பழனிபாரதி. இப்போதே நட்டு – இரண்டாம் பாகம் பற்றிய மாண்டேஜ் விளம்பரத்தை – நிப்பான் டீ.வியில் போட்டு ஜப்பானில் பெரும் எதிர் பார்ப்பை ஏற்படுத்தி யிருக்கிறார்களாம்.

''ஜப்பான் தொலைக்காட்சி யிலும், சினிமா விலும் இவர்தான் நம்பர் ஒன் ஹீரோ. பெயர் நம்பராங். இந்தியப் பணத்துக்கு ஆறு கோடி சம்பளம் வாங்குகிறார். ரஜினி ரசிகரும் கூட'' என்று ஹீரோவை அறிமுகப்படுத்தினார் மானேஜர் ராமதுரை.

மணியடிப்பதுபோல், அவர் ஜப்பானிய மொழியில் பேச, நாம் விழிக்க, ஹெரிடேஜ் அமைப்பின் மொழி பெயர்ப்பாளர் மொழி பெயர்த்துக் கூறினார்:

"தமிழ்நாட்டில் நிறைய இடம் இருக்கு. அழகாவும் இருக்கு. பெண்களும் அழகாய இருக்காங்க. உங்க இசை சூப்பர். ரஜினியின் டான்ஸ் சூப்பர். அவர்கூட நடிக்க வேண்டும். அவரைப் பார்க்க முயற்சி செய்தேன் முடிய வில்லை என்றவரிடம் நமக்காக ஒருமுறை ரஜினி ஸ்டைல் செய்ய முடியுமா என்றதும் தயங்காமல் கைகளை ஸ்டை லாக வெட்டி ஒரு இழு இழுத்தார்! அதற்குள் இயக்குனர் கௌசி ஓமோரி அழைக்க நடிக்கக் கிளம்பி விட்டார்.

தயாரிப்பு மேலாளர் ராமதுரை தொடர்ந்து நம்மிடம் பேசினார்... ''தமிழ், ஜப்பானிய மொழிகளில் இந்தப் படத்தை எடுக்கிறார்கள். ஜப்பானிய மொழியும், ஆங்கிலமும் தெரிந்த ஏழு மொழி பெயர்ப் பாளர்களை வைத்து சமாளிக்கிறார்களாம். பதினைந்து நாட்களுக்கு மட்டுமே விஸா கிடைத் ததால் முழு படத்தை யும் இரவு பகலாக எடுத்துக் கொண்டிருக் கிறோம். நமது வேகத் தைக் கண்டு அவர் களுக்கு ஆச்சர்யம்.

"இந்தப் படத்தில் தமிழ் நடிகர் நடிகை யரும் நடிக்கிறார்கள். தீபாவளிக்கு இங்கே ரிலீஸ்... அங்கே அவர் கள் அடுத்த மாதமே வெளியிட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கு இல்லை'' என்கிறார்.



• நந்தகுமார்



• ராமதுரை

நம்மூர் ராமநாராயணனையே பின்னுக் குத் தள்ளிவிட்டு படம் எடுத்துக் கொண் டிருக்கும் ஜப்பானியர்களுக்குத் தமிழ் கமர்ஷியல் சினிமா பிடித்துப்போனது பெரிய ஆச்சர்யம்தான். உலக சினிமாவுக் கென்று ஒரு மொழியை உருவாக்கிய அகிரா குரோசோவா பிறந்த அதே நாட்டில்தான் முத்து படமும், நட்டு படமும் சக்கை போடு போடுகின்றன!

**— சக்கரத்தாழ்வார்**

படங்கள்: **ராஜன்**



# இருநூறு கோடி மோசடி!

**போ**ன வாரக் கடைசியில் எனக்குத் தெரிந்த நபர் ஒருவர் மிகுந்த அதிர்ச்சியுடன் என்னிடம் ஒரு கேள்வி கேட்டார். ஏன் சார்! எம்.சி.சி. பைனான்ஸ் கம்பெனியை மூடி சீல் வைத்து விட்டார்களாமே? இது உண்மையா? என்றார். அவரிடம் நான் "ஆமாம் இதைப் பற்றி இரண்டு நாட்களாகச் செய்தித் தாள்களில் செய்தி அடிபடுகிறதே தெரியாதா? அந்த கம்பெனியின் முக்கிய நிர்வாகிகள் இருவரையும் கைது செய்து ஜெயிலில் அடைத்திருக்கிறார்களே!" என்றேன்.

"ஐயையோ! நான் என் பெண்ணின் திருமணத்திற்காக அந்த கம்பெனியில் இருபத்தி ஐந்தாயிரம் ரூபாய் டெபாஸிட் செய்திருக்கிறேனே, அந்த பணம் என்ன ஆகும்?" என்று கண்களில் நீர் மல்க கேட்டார். அவர் ஒரு கம்பெனியில் நாலாவது நிலை ஊழியராக வேலை செய்கிறார். தன் வாழ்நாளின் சேமிப்பை எல்லாம் இந்த கம்பெனியில் போட்டு விட்டு இன்று மனமுடைந்து நிற்கிறார். இது முற்றிலும் உண்மையான ஒரு சம்பவம். இது மாதிரி இன்னும் எவ்வளவு பேர் இந்த கம்பெனியில் பணத்தை டெபாஸிட் செய்துவிட்டு கண்ணீரும் கம்பலையுமாக நிற்கிறார்களோ? தெரியவில்லை.

இந்தச் சம்பவத்திற்கு பிறகு எம்.சி.சி. பைனான்ஸ் பற்றி சென்ற வாரம் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி வழங்கிய தீர்ப்பை எடுத்து மறுபடியும் படித்தேன். நீதிபதி ஜெயசிம்ம பாபு ரிசர்வ் வங்கி தன்னுடைய கடமையைச் செய்யத் தவறியதைச் சுட்டி காட்டிவிட்டு இந்த கம்பெனியின் நிர்வாகிகள் சுமார் இருநூறு கோடி ரூபாயை எப்படி மோசடி செய்திருக்கிறார்கள் என்பதையும் சொல்லியிருக்கிறார். இந்த கம்பெனியில் ஐம்பதாயிரத்துக்கும் அதிகமானோர் டெபாஸிட் செய்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது. கம்பெனியின் நிர்வாகிகள் எல்லோரையும் ஏமாற்றி அந்தப் பணத்தைத் தங்களுடைய சுயநலத்திற்காக வேறு சில கம்பெனிகளில் முதலீடு செய்திருப்பதாகவும், ஆனால் முதலீடு செய்யப்பட்டுள்ள கம்பெனிகளின் சொத்து மிகக் குறைந்த அளவே இருப்பதாகவும் தெரிகிறது. அதற்குப் பிறகு வந்த செய்தியின் படி கம்பெனியின் நிர்வாகிகள் உடனே பத்து கோடி ரூபாயைத்



''அந்த ஆளு கள்ள நோட்டு அடிக்கற வன்னு நினைக்கிறேன்...''

''உங்களுக்கு எப்படி தெரிஞ்சுது?''

''செய்யும் தொழிலே செல்வம்னு வீட்டு வாசல்ல போர்டு தொங்குதே!''

- அம்பை தேவா

---

''திருட வந்தவன்கிட்ட மூந்நாள் அமைச்சர் ஒரே கேள்விதான் கேட்டிருக்கார். அவன் ஜகா வாங்கி ஓடிட்டானாம்!''

''அப்படி என்ன கேட்டாராம்?''

''திருநெல்வேலிக்கே அல்வாவான்னு கேட்டிருக்கார்...!''

- சீர்காழி ரேவதி





''என் மாமனாருக்கு ஏதாவது ஒண்ணுன்னா நான் அப்படியே ஆடிப் போயிருவேன்!''

''அட, அவர்மேல உனக்கு அத்தனை பிரியமா?''

''பின்னே! இன்னும் வரதட்சணை பணம் பாக்கி இருக்குல்ல...!''

- ஸ்ரீதர்



திருப்பித் தர சம்மதித்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது. இது கம்பெனி பெற்றுக் கொண்ட மொத்த டெபாஸிட் தொகையில் ஐந்து சதவிகிதம்தான். இந்த கம்பெனியின் தலைமை நிர்வாகி தென் இந்திய தொழில்வர்த்தக சங்கத்தின் தலைவராக இரண்டு முறை தேர்ந்தெடுக்கப்பட்டார். கம்பெனியின் நிர்வாக இயக்குனர் சென்னையில் உள்ள பெரிய தொழிலதிபரின் மாப்பிள்ளை. இந்தத் தொழில் நிறுவனமும், அதைச் சார்ந்தவர்களும் நேர்மையானவர்கள் என்று பெயரெடுத்தவர்கள். ஆனால் இப்பொழுது நடந்திருப்பதை பார்க்கும்போது எல்லோருக்கும் அதிர்ச்சி ஏற்படுகிறது.

Mercantile Credit Corporation என்ற கம்பெனிதான் தன் பெயரை எம்.சி.சி. பைனான்ஸ் என்று சுருக்கிக் கொண்டு பல தரப்பட்ட மக்களிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு ஏப்பம் விட்டிருக்கிறது. சட்டம் தன் கடமையைச் செய்யும் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் பணம் போட்டவர்களின் கதி? எல்லா பணமும் திரும்பி வருவது மிகுந்த சிரமம்தான். சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சொல்லியிருப்பதுபோல் ரிசர்வ் வங்கியும் தன் கடமையிலிருந்து தவறிவிட்டது.

1997 மார்ச் மாதமே இந்தக் கம்பெனியின் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது என்று ரிசர்வ் வங்கிக்குத் தெரிந்திருந்தும் தகுந்த நேரத்தில் உரிய நடவடிக்கை எடுக்க ரிசர்வ் வங்கி தவறிவிட்டது என்றும் நீதிபதி கூறியிருக்கிறார்.

ரிசர்வ் வங்கியில் யார் தவறு செய்தார்கள் என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும். இந்த மாதிரி பல நிதிக் கம்பெனிகள் நிர்வாகிகள் சாதாரண மக்களின் பணத்தை ஏப்பம் விட்டுவிட்டு வெளியில் கவலையின்றி உலாவி வருகிறார்கள். இந்த நிலையைத் தொடர விடலாமா? இதற்கு யார் பொறுப்பு? பொறுப்பை நிறைவேற்றாதவர்களைத் தண்டிக்க வேண்டும். இப்போதைக்கு மக்கள் செய்யக்கூடியது ஒன்றே ஒன்றுதான். பணத்தை, குறைந்த வட்டியாக இருந்தாலும், வங்கியிலேயே டெபாஸிட் செய்யுங்கள்.

- வி. கோபாலன்

# அன்பான வேண்டுகோள்







**சி**வானந்த குருகுலத்தில் இருக்கும் சுமார் 350 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இவ் வருடம் தீபாவளி திருநாளை மனமகிழ்ச்சியுடன் கொண்டாட பொது மக்களிடம் உதவிக்கரம் நீட்டுகிறது.

பொது மக்கள் அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாகவோ அல்லது புத்தாடைகள், பட்டாசு, இனிப்பு, எண்ணெய், சீயக்காய், அரிசி, கோதுமை போன்ற தானிய வகைகளை நன்கொடை கொடுக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடைத் தொகையினை காசோலையாகவோ/டிராப்டாகவோ "சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்" என்ற பெயரில் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

அனுப்ப வேண்டிய முகவரி :

நிர்வாகி,
"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"
நெ. 20, கம்பர் தெரு,
கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண்கள் :
2369 078, 2369 444.

சென்னையில் நன்கொடை கொடுக்க வேண்டிய முகவரி :
திரு. ரத்தன் பிரகாஷ் மல்ஹோத்ரா,
பிரகாஷ் டிரேடிங் கம்பெனி,
நெ. 156, தம்பு செட்டி தெரு,
சென்னை - 600 001.
தொலைபேசி எண்கள் :
5342 428, 5342 803, 534 2587

குருகுலம் : காட்டாங்கொளத்தூர் : 04114-52345 (STD)
Local call : 915 52345

பின்குறிப்பு : காசோலையாகவோ/டிராப்டாகவோ "சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்" என்ற பெயரில்தான் அனுப்ப வேண்டும் என்பதைக் கேட்டுக் கொள்கிறோம்.

E-mail : sivanand@md2.vsnl.net.in

**FOR MORE DETAILS ABOUT OUR ASHRAM VISIT OUR WEBSITE:**

http: www.indiadirect.com/sivananda-ashram

மதிப்பெண் அட்டை தனக்கான முத்திரைகளுடன் வந்து சேர்ந்து விட்டது. பெறப்பட்ட மதிப்பெண்கள் இடப்பட்ட கையெழுத்துகளுடன் அது ஒரு சான்று. பார்த்திபன் வீழ்ச்சியை எதிர்பார்த்திருந்தான். பள்ளத்தில் விழுவோம் என்றே நினைத்திருந்தான். பள்ளத்தாக்கிலேயே விழுந்து விட்டான். வெறும் எழுநூற்று முப்பது மதிப்பெண்கள். பிரகாஷ் எண்ணூற்று ஐம்பத்தேழு.

அனிதாவின் மதிப்பெண் ஆயிரத்து முப்பதாம். குறைந்தது என்ஜினியரிங்காவது போய் விடுவாள். இந்த எழுநூற்று முப்பது



மதிப்பெண்களை வைத்துக் கொண்டு என்ன செய்வது எனப் பார்த்திபனுக்குப் புரியவேயில்லை. எவ்வளவு குறைவாக வாங்கினாலும் அதற்கு 'மதிப்பெண்' என்று பெயரிருப்பது ஆச்சரியம்தான். இந்த நாகரிகத்தை ஆங்கிலம் கடைப்பிடிப்பதில்லை. அது 'மார்க்' என்கிறது. மார்க் சரி, மார்க்கம் என்ன?

கரூர் கலைக் கல்லூரிதான் போலிருக்கிறது. பொறியியல் கல்லூரி ஏதாவதற்குச் சென்று விடலாம் என்பது இவ்வாண்டு ஆரம்பக் கனவாயிருந்தது. குறைந்தபட்சம் மேற்படிப்பை கோயமுத்தூரில் படிக்க வேண்டும்

# கானல்தெரு

15

வேலை வாய்ப்பு அலுவலகம்
EMPLOYMENT EXCHANGE

என விரும்பியிருந்தான். அவனது மார்க்கிற்குப் பல்லடத்திலேயே நிறுத்தி திருப்பி அனுப்பி விடுவார்கள். வீட்டில் சகட்டு மேனிக்குத் திட்டு விழுந்தது.

பார்த்திபனின் அப்பா, "கடைசியிலே எங்களயாட்டவே சாணிக் கூடசொம" என்றார். ஆற்றாமையிலிருந்து எழுந்த அந்தச் சாபம் போன்ற அவரது குரல் வேளாண்மையின் காலகாலத் துயரை உள்ளடக்கியிருந்தது. இனிமேலாவது ஒழுங்காகப் படிக்க வேண்டும் என உறைத்தது. இல்லாவிடில் சாணி சுமக்காவிட்டாலும் கடைசிக்குக் கேரளாவுக்குச் சேவை கந்துக் கடைக்காவது போக வேண்டி வரும்.

கடைசியில் அப்பா, "படிச்சுத் தொலை. இங்கிருந்தே கரூர் போய்க்கிட்டு வந்துக்கிட்டு இரு" என்றார். அந்தக் கல்லூரி பல காலம் 'காம்பவுண்டு இல்லாத கல்லூரி' என அழைக்கப்பட்டு தற்சமயம் அந்த அவப்பெயர் நீங்கி சுற்றுச் சுவர் பெற்றுள்ளது.

அவன் வேலைக்காகப் படிக்காமல் படிப்புக்காகப் படிக்கிறேன் என பி.ஏ.வில் வரலாறு எடுத்தான். சரித்திரம் தேர்ச்சி கொள்வதோடு 'கல்லூரி வாழ்வை என்ஜாய்' பண்ண வேண்டும் என ஆழத்தில் ஆசையிருந்தது.

பிரகாஷ் கரூர் கல்லூரியில் பி.எஸ்ஸி., கம்ப்யூட்டர் சயின்ஸ். பில்கேட்ஸ் அளவு ஆகும் எண்ணம் பிரகாஷுக்கு இல்லையென்றாலும் ஏதேனும் காற்றுப்பதன அறைக்குள் கம்ப்யூட்டர் திரைக்கு முன் அமரும் சம்பளக் கனவு அவனுக்கு இருந்தது. எல்லா மாணவ மாணவிக்கும் உண்டான கடப்பாடுதான் அது.

மாவட்ட வேலை வாய்ப்பு அலுவலகத்தில் அவனது மகா + 2 படிப்பை பதிவு செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் சீனியாரிட்டி வந்து விடுமாம். பின்னே பிறகு யூஸ் ஆகும் என்றுதான் பல காரியங்களைச் செய்து வைக்க வேண்டியுள்ளது. பத்தாம் வகுப்பிலிருந்தே இந்தப் பதிவுசெய்யும் காரியம் துவங்கி விடுகிறது. பார்த்திபனுக்குப் பதிவு அலுவலகம் ஈரோட்டில். பிரகாஷுக்கு கரூரில்.

ஏழு மணிக்குப் பள்ளபட்டியில் புறப்படும் ஈரோடு வண்டியில் பாலகுமார் நகரிலிருந்து பார்த்திபன் ஏறினான். மாவட்டத் தலைநகரும் ஈரோடுதான். பஸ் மூலனூர் வந்து வடக்குத் திரும்பி வெள்ளகோயில் வழியாக ஈரோடு அடைந்தது. மூலனூர், அனிதா படித்த ஊர். வெள்ளகோயில்

க.சீ. சிவகுமார்

சொந்த ஊர். இவற்றைத் தாண்டி ஈரோடு.

சென்னிமலைச் சாலையிலுள்ள வேலை வாய்ப்பு அலுவலகத்துக்குச் சென்ற தினத்தில் அனிதாவும் வந்து விட்டாள்.

வெய்யில் கால வேலை வாய்ப்பு அலுவலகம் நெரிசலாக இருந்தது. கல்வி ஆண்டை அனுசரித்து இவ்விதம் நிகழ்கிறது.

ஒன்பதே முக்காலுக்கு உள்ளே நுழைந்தவனை 'பத்து மணிக்கு வா' என வெளியில் விரட்டினார்கள். வெளியேயுள்ள வேப்பமரத்தடி நின்ற போதுதான் அனிதா வருவதைப் பார்த்தான்.

சிமெண்ட் கலர் சுடிதாருக்கு வெள்ளைச் சல்லாவை சல்வாராகப் போட்டிருந்தாள். இடதுகையில் சிறிய கடிகாரம். பெருவிரல் நக அளவு பரப்புள்ள அந்தச் சிறிய டயலில் எப்படித்தான் மணி பார்க்கிறாளோ? அவளால் காலமே குறுகும் போது கடிகாரம் செய்ய என்ன இருக்கிறது. வலது கையில் சிறிய தங்கச் சங்கிலி சுற்றி அதன் ஒரு இடத்தில் உறைந்த தங்கத் திவலை தொங்கி ஆடியது. முடிக்கு பட்டாம்பூச்சி கிளிப்பு போட்டிருந்தாள்.

லைட் ப்ளூ ஜீன்ஸூம் மேக வண்ணச் சட்டையும் அணிந்திருந்த பார்த்திபனைப் பார்த்து அருகில் வந்தாள். லேசான புன்னகை. அதில் பரபரப்பில்லை. தினமும் பார்க்கிற ஒருவனைப் பார்ப்பது போல அத்தனை நிதானம். பார்த்திபனும் சிரித்தான். இருதயம் நிமிடத்துக்கு ஐந்து முறை அதிகம் துடித்தது.

"பார்த்தி!"

"எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸூக்கா?"

"ஆமா."

"எத்தனை மணிக்கு வந்தே?"

"இப்போதுதான்."

"நீ மட்டுமா?"

"ஆமா."

"அன்னிக்கு மூலனூர் வந்தப்ப ஏன் அவ்வளவு இன்டீஸன்டா பிஹேவ் பண்ணினே?"

"யாரு... நானு. அன்னிக்கு இன்னும் கொஞ்சம் தூரம் முன்னாலும் பின்னாலும் நடந்திருந்தேனோ உனக்கு அடி விழுந்திருக்கும் தெரியுமா? அண்ணாநகர் தெருப் பையங்க உன்னைக் குறி வச்சுட்டாங்க."

இது பார்த்திபன் யோசித்திராத அபாயமாயிருந்தது.

"அனிதா ஒரு டீ குடிப்பமா?"

"ஓ... வா."

இருவரும் நடந்து போய் இந்தியன் ஆயில் கழக பெரிய பெரிய இடங்களைப் பார்த்தவாறு நின்று டீ குடித்தனர். இந்தச் சாலையில் அமைதியாய் நடந்து போய் ரயில்வே ஸ்டேஷனில் அமர்ந்து பேச வேண்டும் போலிருந்தது. ஆனால் அடுத்து அலுவலகத்துக்கு நடக்க வேண்டியிருந்தது.

"உன்கிட்டே தனியாப் பேசணும்."

"சாரி. எதுவும் பேச வேணாம்."

"நான் சொல்றதைக் கொஞ்சங் கேளு அனிதா."

"நீ என்ன சொல்லுவேன்னு தெரியும். அதனாலதான் பேச வேண்டாங்கறேன்."

பார்த்திபனுக்கு சுயத்தில் அடி விழுந்தது போலிருந்தது. எதுவும் பேசுவதற்கு இல்லையோ. தாழ் திறவாதப் பூங்கதவு. அனிதா,

"நாம நல்ல ஃபிரண்ட்ஸா இருப்போம்" என்றாள்.

**"உங்க அம்மாவும் மனைவியும் நாலு நாளா சண்டை போட்டுக்கிட்டிருக்காங்களே, என்ன விஷயம்?"**

**"கேட்டேன், அவங்களுக்கே மறந்து போச்சாம்!"**

**– வந்தவாசி பா. ஜெயக்குமார்**

காதலில்லை என்றான பின் நல்ல ஃபிரெண்ட்ஸா என்ன மோசமான ஃபிரெண்ட்ஸா கூட இருக்கலாம்.

"என்ன பேச மாட்டேங்கறே?"

"ஒண்ணுமில்ல அனிதா. உன்னோட பேசறதுக்கு என்ன?"

பத்து மணிக்குப் பதிவுசெய்யும் தருணம் வந்து விட்டது. உள்ளே நுழைந்தார்கள். ஒரு பாடாவதி அட்டையில் எழுத்துக்கள் மங்கி நீரில் அமிழ்ந்தன போல் இருந்தன. அதிலுள்ள கட்டங்களில்தான் பெயர், விலாசம், தகவல், மதிப்பெண்கள்(!) குறிக்க வேண்டும். ஒரு கட்டம் போட்ட சட்டைக்காரர், சத்தம் போட்டு, "இந்தக் கட்டத்தில் இது" என்று காட்டிச் சொல்ல அனைவரும் குறிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் கொடுத்த அட்டையை இந்தியாவின் எந்த மொழி மாநிலத்திற்கும் தரலாம் என்பதே அதன் விசேஷமாக இருந்தது. அடிக்கடி அனிதா பார்த்திபனைப் பார்த்துப் புன்னகைத்தவாறு இருந்தாள். அந்தப் புன்னகையை இரண்டே விதங்களில் அர்த்தப் படுத்தலாம். பிஸ்கட் போடுகிறாள் அல்லது களிம்பு தடவுகிறாள். விடை கொடுத்தபின்

சிரிப்பதெல்லாம் வேதனையே தரும் அனிதா.

ஈரோட்டிலிருந்து திரும்புகையில் பார்த்திபன் வருகிற பஸ்ஸில்தான் வெள்ளகோவில் வரை வந்தாள். வேறு வேறு சீட்டுகளில் அமர்ந்திருந்ததால் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. பஸ் இறங்கும் போது, "பாட்டி வீட்டுக்குப் போறேன் பார்த்தி. பிறகு பார்க்கலாம்" என்று இறங்கிக் கொண்டாள். அவளில்லாத பேருந்தில் 'மூலனூர்' வரை வந்தான். அங்கிருந்து பள்ளபட்டி பிரிவுக்கு பஸ் பிடித்தான். இறங்கி தோட்டத்திற்கு நடக்கும் போதே பிரகாஷை உடனடியாக பார்க்க வேண்டும் எனத் தோன்றியது.

பிரகாஷை பார்த்த போது அதிசயமான தகவல்கள் அவன் வைத்திருந்தான்.



முதல் தகவல் அதிசயம் அல்லது ஆச்சரியமானது. இரண்டாவது தகவல் அதிசயம் அல்லது அதிர்ச்சிகரமானது. வாழ்வின் நெடும் பரப்பில் அவை ஒருவேளை அதிர்ச்சி ஆச்சரியம் எதையும் தராமல் போகலாம்.

முதல் செய்தி அன்வர் அலியும் லெவன்த்-டி சாந்தா டெய்ஸி லீலாவும் காதலிக்கிறார்கள் என்பது. அன்வர் இத்தனை நாளும் இதை ரகசியமாய்ப் பேணி வந்திருக்கிறான். ஒரு திருவிழாக் கூட்டத்தில் பல ஜோடிக் கண்கள் கடைக்கண் வீச்சுக்காக அலைபாய்ந்து கொண்டேதான் இருக்கின்றன. பார்வை கண்ட அவை இறக்கைகள் அடிக்காமல் பறக்கும் விமானம் போல கடலும் மலையும் கடந்து தங்கள் காதல் தீவில் சஞ்சரித்து விடுகின்றன. அன்வர் அலியின் காதலுக்கு கலாசார கலை வடிவமுன் உதாரணங்களும் அதிக அளவில் இல்லை. ஒரு கிறுஸ்துவ பெண்ணும் முஸ்லீம் பையனும் ஏதாவது திரைப் படத்தில் காதலிக்கிறார்களா என்ன?

இன்ஷா அல்லாஹ். அவனது காதலாவது நிறைவேற வேண்டும் ஆமென்.

பிரகாஷ் அடுத்து, "டேய் உனக்கு குமாரசாமியைத் தெரியுமா?" என்றான். "யாரு?"

"டுவெல்த் சி டா. அன்னைக்கு தியேட்டர்ல கூட கலைச்செல்வன் கூடப் பாத்தமே."

"ஆமா."

"அவனொரு பொம்பளையைக் கூட்டிக்கிட்டு ஓடிட்டான்."

"பொம்பளையா?

"ஆமா, பக்கத்து வீடு. அதுக்குக் குழந்தையெல்லாம் இருக்குது. அதையும் விட்டுட்டு முந்தா நேத்து அவனோட ஓடிப் போச்சு. தேடிக்கிட்டு இருக்காங்க."

"அடக் கடவுளே" என்றான் பார்த்திபன். எல்லா வியப்புகளையும் கடவுள் மேல்தான் ஏற்ற வேண்டியிருக்கிறது. உலகில் மனிதர்கள் நிகழ்த்தும் அபத்தங்களை சந்திக்கவோ பூரணமாய்ப் புரிந்து கொள்ளவோ மனிதர்களுக்கு வல்லமை இல்லை."

"அதை விடு. காலேஜ் போக புதுசா டிரஸ் ஏதும் எடுத்தியா?"

"எடுத்தேன். கரூர் பிரீஸ்லதான் தைக்கக் குடுத்திருக்கேன். நீ?"

"இனிதான் எடுக்கணும்."

பிரகாஷுக்குத் துணி எடுத்த அன்றைக்கு கரூரில் ஆளுக்கொரு டெனிம் பவுடர் வாங்கினார்கள். டி.வி. விளம்பரங்கள் பட்டணைச் சுழற்றி மெதுவாக நெஞ்சுக்குள் புகுந்து கொள்கின்றன. சட்டைக்கு அளவு கொடுத்து விட்டு 'எல்லோரா'வில் ஒரு படம் பார்த்து விட்டு வெளிவந்தபோது பிரகாஷ்,

"டேய் இங்க வந்து சினிமா பார்த்துட்டு இருக்கக் கூடாது ஒழுங்காப் படிக்கணும்" என்றான்.

"சரி இத தியேட்டர்குள்ள போறதுக்கு முன்னாலேயே சொல்ல வேண்டியது தானே?"

"ச்சே. இப்பப் பார்த்தா என்ன தப்பு? காலேஜ் ஆரம்பிச்சப்புறம் பார்க்கக் கூடாது. கட்டடிச்சுட்டு பாக்கக் கூடாது."

"சரிங்கண்ணா."

"இந்த லொள்ளுதானே வேணாங்கிறது. சரி டெய்லி மீனாட்சி பஸ்ஸுல வந்திடலாமா?"

"ஆமா. அதுல வந்தாத்தான சரியா இருக்கும். ஏழே முக்காலுக்குப் புறப்படறதை நெனச்சாத்தான் கஷ்டமா இருக்கு."

"சரி இனிமே காலையில நேரமே எழுந்துருச்சுருவோம் ஏழு மணிக்கு."

**(அடுத்த இதழில் முடியும்)**





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel & Fax: 237 6129.
E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

# தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர்! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும், ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவங்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

★குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

★குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்தர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை, அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 750/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ. | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 9,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

# வட்டமேஜை




✉ நடிகர் ராஜ்குமாரை சந்தன வீரப்பன் கடத்தியதால் ஏற்பட்டுள்ள பல்வேறு சூழல்களைப் பட்டிய லிட்டு "உச்சநீதிமன்றம் இந்த நிலைமையைக் கருத்தில் கொள்ள வில்லை என்பது வருந்தத்தக்கது" எனக் கூறியிருப்பது 'கல்கி'யின் நெஞ்சின் உரத்தையும் நேர்மைத் திறத்தையும் பறைசாற்றுகிறது; அருமை!

சேலம், எழுஞாயிறு.

✉ தடா கைதிகள் விடுதலை விஷயத்தில் உச்சநீதிமன்றம் கர்நாடக அரசுக்கு எதிராக பிறப்பித்த அதிரடிமுடிவை சரியான முறை யில் ஆராய்ந்து தீர்ப்பளித்த தங்கள் தலை யங்கம் அருமை.

காஞ்சிபுரம், எம்.டி. ரவிகாந்த்

✉ ஏப்ரல் மாதத்தில் கொடுக்க வேண்டிய 'அல்வா'வை இப்போ கொடுத்து விட்டீரே... முதல்பக்க ஒலிம்பிக் ஹாக்கி டிக்கட் போட்டி அறிவிப்பு ஒன்டர்ஃபுல் லொள்ளு!

அயன்புரம், த. சத்தியநாராயணன்

✉ விமர்சனப் பார்வைக்குத் தப்பாத சில குறைகள் இருந்தாலும் படம் எடுத்ததின் நோக்கத்தின் உயர்வில் அவை கரைந்து போய்விட்டன என்ற தங்கள் விமர்சனம் (பாரதி) எவ்வளவு நிஜம்? ஒரு டாக்குமென்ட்ரித்தனம் வந்து விடாமல், சுவாரஸ்யமான திரைக்கதையால் பார்வை யாளர்களைக் கட்டிப் போட்டு, பல காட்சி களில் நெகிழ வைத்திருக்கும் அற்புதமான படம் 'பாரதி'. வரி விலக்கிற்கும், விருதுக்கும் ஏராளமான தகுதிகளைக் கொண்டுள்ளது!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ அவனவன் தண்ணீர் கிடைக்கவில்லை யென்று ரோடு ரோடாக அலையறான். நீர் என்னடான்னா செயற்கை அருவி வைத்து தீய சக்தியை விரட்ட வாஸ்து சாஸ்திரம் சொல்றீரே! உம்மை வீரப்பன்கிட்டதான் அனுப்பணும்.

இராயபுரம் – 13, கே. சங்கர்

## படபடக்கிறது!

✉ "வாழும் பாரதி" கட்டுரை மற்றும் பாரதி பட விமர்சனத்தைப் படித்த பிறகு எப்போது அந்தத் திரைப்படத்தைப் பார்ப் போம் என்று மனசு படபடக்கிறது.

பெங்களூர்–560 016, ஏ.சங்கர்.

✉ திருவாழத்தானின் 'மிக வெகு அன்புடையீர்' எனும் சிறுகதையைப் படித்துச் சிரித்துச் சிரித்து வயிறு புண்ணாகிப் போயிற்று! எழுத்தாளருக்கு வாழ்த்துகள்.

திண்டுக்கல், எம்.கே. மணி.

✉ தமிழ் நாட்டின் அரும்பெரும் கலையான கூத்து மறைந்து கொண்டே வருகிறதே என்ற கண்ணப்பத் தம்பிரானின் ஆதங்கத்தையும் அதே சமயம் எப்படியாவது சிரமப்பட்டு அடுத்த தலைமுறைக்கு இவ்வரிய கலையை எடுத்துச் சென்றுவிட வேண்டும் என்ற அவர் மனஉறுதியையும் ஒருங்கே எடுத்துக் காட்டியது 'சினிமாவால் கூத்துக்குப் பெரிய அடி' கட்டுரை.

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ 17.9.2000 இதழில் வெளியாகியிருக்கும் 'கிரிமினல்கள் ஜாக்கிரதை' கட்டுரையில் 'பாத்தூர் நடராஜர்' என்று வந்திருப்பது தவறு. அது 'பத்தூர்' என்று வரவேண்டும்.

சென்னை – 28, 'பத்தூர்' தர்மராஜன்.

# நலம் தானா?

**நமது முதல்வர் கருணாநிதியின் காலை வாக்கிங்கும் பேட்மின்டனும் ஊரறிந்த விஷயம். உடல் ஆரோக்கியத்தைப் பேணும் விஷயத்தில் இவர் மாதிரி மற்ற முதல்வர்கள் எப்படி?**

**சந்திரபாபு நாயுடு :** இந்தியாவின் மிக ஆரோக்கியமான முதல்வர் என்ற பட்டம் இவருக்குப் பொருந்தும். வயது ஐம்பது. தினமும் அதிகாலை நாலு மணிக்கு எழுந்து விடுகிறார். அடுத்த வேலை இரண்டரை லிட்டர் தண்ணீர் குடிப்பது. உடற்பயிற்சி உபகரணங்களில் எக்ஸர்சைஸ் முடித்தவுடன் யோகா. அடுத்து தியானம். குளியலுக்கு வேப்பிலை போட்ட வெந்நீர். உணவு? இட்லி, சாம்பார், எண்ணெய் இல்லாத சப்பாத்தி, தயிர் சாதம், பழங்கள், முந்திரி, திராட்சை, பாதாம் இன்னபிற. எப்போதாவது தான் காபி, டீ. பாபுவுக்கு ஓரகோ டெர்மா இருப்பது லண்டனில் செய்த டெஸ்ட் மூலம் ஊர்ஜிதமாகியுள்ளதாக ஒரு தகவல் உண்டு.

**திக்விஜய் சிங் :** ஐம்பத்தி மூன்று வயது. இந்த மத்திய பிரதேச முதல்வர், தினமும் அலுக்காமல் சளைக்காமல் பதினெட்டு மணி நேரம் உழைக்கிறார். தினசரி பூஜை, யோகா உண்டு. சுத்த சைவம். இதன் காரணமாக ரத்த அழுத்தமும், கொலஸ்டிராலும் கட்டுப்பாட்டிலேயே உள்ளது. யோகா மூலம் அடிக்கடி தொல்லை கொடுத்த முதுகுவலியும் போய் விட்டது. ரொம்ப களைப்பு என்றால், அரை மணி நேரம் கண்களை மூடிக் கொண்டு ரிலாக்ஸ் பண்ணுவார். அதன்பின் சோர்வு போயே போச்!

**எஸ்.எம்.கிருஷ்ணா :** வீரப்பனின் ராஜ்குமார் கடத்தல் விஷயத்துக்குப் பின் கிருஷ்ணாவுக்கு ஏகப்பட்ட டென்ஷன் என்றாலும், இந்த 68 வயது கர்நாடக முதல்வருக்கு, ரொம்பவே ஆரோக்கியம் பற்றிய விழிப்புணர்வு உண்டு. தினமும் டிரெட் மில்லில் ஓட்டப் பயிற்சி. வாரத்துக்கு மூணு நாள் டென்னிஸ், இரண்டுமாய் டயபடீஸை கட்டுப்பாட்டில் வைக்க உதவுகின்றன.

**விலாஸ்ராவ் தேஷ்முக் :** இந்த மகாராஷ்டிர முதல்வருக்கு வயது ஐம்பத்து நான்கு. "அரசியல் வட்டாரத்தில் டென்ஷன் அடையாத இவருக்குச் செல்லப் பெயர் : கூல் குக்கும்பர். புகை இவருக்குப் பகை.





மதுவைத் தொடமாட்டார். சீரியஸாய் உடற்பயிற்சி செய்வதில்லை என்றாலும் உடல் நலம் ஆரோக்கியமாகவே இருக்கிறது என்கிறார் இவரது குடும்ப டாக்டர்.

**நவீன் பட்நாயக்** : ஒரிசா முதல்வரான இவருக்கு உடல் நலம் பற்றி அதீத எச்சரிக்கை உணர்வெல்லாம் கிடையாது. எடை : வெறும் 65 கிலோ. சாப்பாடு, மது எதிலும் குறை வைப்பதில்லை. தினமும் ஐம்பது சிகரெட் பிடிக்கிறார். உடல் நலம் பற்றி யாராவது எச்சரித்தாலும் இவரது பதில் "ஐ டோன்ட் கேர்".

**ஃபரூக் அப்துல்லா** : ஹைப்பர் டென்ஷன், டயபடீஸ் உண்டு. ஆனால் கால்ஃப் விளையாட்டில் ரொம்பப் பிரியம். மூலிகை மருந்துகளையே உட்கொள்ளுபவர். சாப்பாட்டை மறந்தாலும், கால்ப் ஆடத் தவறுவதில்லை.

**ஜோதிபாசு** : வயது 86. அரசியல் ரிடையர்மென்ட் சாத்தியமோ இல்லையோ, அவசியம் என்று நினைக்கிறார். அசாத்திய நினைவாற்றல் கொண்டவர். நடையிலும் வேகம் இருக்கும். அவ்வப்போது வயிற்று உபாதைகள் வருவதுண்டு.

**பிரகாஷ்சிங் பாதல்** : பஞ்சாப் முதல்வர் அடுத்த ஆண்டு பவள விழா கொண்டாடப் போகிறார். இரண்டு ஆண்டுகளுக்கு முன் கல்லீரலில் பிரச்னை என்றும் அமெரிக்காவில் நடந்த ஆபரேஷனில் சரியாகிவிட்டதாகவும் சொல்கிறார்கள். அவ்வப்போது பல்வலித் தொல்லை தருவது உண்டு. உடற் பயிற்சி வழக்கமெல்லாம் கிடையாது. டோஸ்ட் செய்யப்பட்ட பிரட், ஜூஸ்தான் காலை உணவு.

**ஈ.கே.நாயனார்** : எண்பத்தியோரு வயதாகிறது இந்த கேரள முதல்வருக்கு. டயபடீஸ் உண்டு. 96ல் முதல்வரான பின்னர் மூன்று தடவை டயபடீஸ் பிரச்னை சீரியஸாகி ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்யும்படி ஆகிவிட்டது. எப்போதாவது பீடி பிடிப்பார். டாக்டர்கள் அறிவுரைப்படி அதையும் விட்டுவிட்டார். மது - நோ சான்ஸ்!

— **ஜூலி**

நன்றி : **சன்டே டைம்ஸ்**



# ஸ்ரீ ராமபக்த ஹனுமான்

கல்யாணபுரம் ஆராவமுதன்

**"வா**யுகுமாரா! நீ பூமி, ஆகாயம், வாயு மண்டலம், சமுத்திரம் என்று எங்கும் தங்கு தடையின்றி சஞ்சரிப்பவன். வீரர்களில் சிறந்தவன்; நவ வ்யாகரணம் கற்றவன்; பலம் பராக்கிரமம் நீதி – இவை உன்னிடம் இருப்பதுபோல் வேறு யாரிடமும் இல்லை. ஆதலால், சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கும் காரியத்தை நீதான் செய்து முடிக்கப் போகிறாய்.– இதில் எனக்குச் சந்தேகமேயில்லை...''

– இத்தனை நம்பிக்கையோடு ஹனுமானை வாழ்த்தி அனுப்பி வைத்தவன் சுக்ரீவன்!

தென்திசையில் சீதையைத் தேடிச் சென்ற வீரர்களின் தலைவனாக அங்கதனை அனுப்பினான் சுக்ரீவன். நீலன், ஜாம்பவான் போன்ற பராக்கிரமசாலிகளும் அனுபவஸ்தர்களும்கூட தென்திசை நோக்கிப் போனார்கள். ஆனால் அவர்களையெல்லாம் விட்டுவிட்டு ஆஞ்சநேயனைத்தான் அழைத்து இவ்வாறு நம்பிக்கை தெரிவித்தான் சுக்ரீவன்.

ஸ்ரீ ராமபிரானும் ஹனுமானைத்தான் தேர்ந்தெடுத்து தமது பெயர் பொறித்த மோதிரத்தைக் கொடுத்தார். முதல் சந்திப்பிலேயே அவருடைய பரிபூரணமான நம்பிக்கையைப் பெற்றவனல்லவா?

"சீதையைக் கண்டால் நீ ராமதூதன் என்பதற்குச் சான்றாக இந்த மோதிரம் இருக்கட்டும்'' என்று சொல்லிக் கொடுக்கிறார்.

கம்பராமாயணத்தில், இதே கட்டத்தில், ஸ்ரீராமன் சீதையைப் பற்றி ஹனுமானிடம் வர்ணித்துக் கூறி, சில அடையாளங்களும் சொன்னதாக அமைந்திருக்கிறது.

சீதைக்கு உரியதாக ஸ்ரீராமன் கொடுத்த அந்த மோதிரத்தைப் பெற்றுக் கொண்டு ஹனுமான் என்ன செய்கிறார்...?

அதைப் பயபக்தியோடு கண்களில் ஒற்றிக் கொள்கிறார். சிரஸிலே வைத்து எடுத்து, கண்களில் ஒற்றிக் கொள்கிறார். பிறகு ஸ்ரீராமபிரானை வணங்கிவிட்டுப் புறப்படுகிறார்.

சீதைக்கு அடையாளம் தெரிவதற்காக தரப்பட்ட அந்த மோதிரமே ஹனுமானுக்கு

### பாராயண ஹனுமான்

திருக்குடந்தை என்று அழைக்கப்படும் கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி கோயிலில் உள்ள ஸ்ரீ ராமர் சந்நிதியில் காட்சியளிக்கும் ஆஞ்சநேயரின் கோலம் வேறெங்கும் காணாத அற்புத தரிசனம். அப்படி என்ன அற்புதக் காட்சி என்கிறீர்களா?

'வைதேஹி ஸஹிதம்' என்று தொடங்கி பட்டாபிஷேகக் கோலத்தில் சீதையோடு வீற்றிருக்கும் ஸ்ரீ ராமனின் அழகை வர்ணிக்கிறது ஒரு வடமொழி சுலோகம். அந்த சுலோகம் விவரிக்கும் காட்சியில் மணிமயமான வீராஸனத்தில் தங்கமயமான மண்டபத்தில் வீற்றிருக்கின்றனர் ஸ்ரீராமனும் சீதையும். ஹனுமான், ஸ்ரீராமனின் திருவடிக் கருகில் எதிரே அமர்ந்து ராம நாமத்தைப் பாராயணம் செய்து கொண்டு, ராம காதையைச் சொல்லிக் கொண்டிருக்கிறான்!

இந்தக் காட்சிதான் அப்படியே கும்பகோணம் ராமர் சந்நிதியில் சிற்பமாகக் காணக் கிடைக்கிறது. ராமனும் சீதையும் பட்டாபிஷேகக் கோலத்தில் வீற்றிருக்க, ஹனுமான் கையில் வீணையும் புஸ்தகமுமாக அமர்ந்திருப்பதைப் பார்க்க முடிகிறது. அரிய தோற்றம் இது.

வழித்துணையாக அமைந்தது. ஸ்ரீ ராமனே கூட வருவதுபோன்ற தெம்புடனும் உற்சாகத்துடனும் போகிறானாம் ஹனுமான். காரியசித்தி ஏற்படும் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது.

**வா**ல்மீகி ராமாயணத்தில், சீதையைத் தேடி நான்கு திக்குகளிலும் சென்ற வீரர்களைப் பற்றித் தனித்தனியே சொல்லியிருக்கிறது. வானர சைன்யங்களை அனுப்பிய சுக்ரீவன், ஒரு மாதத்துக்குள் திரும்பி வந்து செய்தி சொல்ல வேண்டும் என்று அவர்களுக்கு உத்தரவிட்டதாக வருகிறது.

ஆனால் கம்பரைப் பாருங்கள்... 'தென்திசை நோக்கிச் சென்றவர்களைப் பற்றி விரிவாகச் சொன்னாலே போதுமானது' என்று சுருக்கமாக முடித்துவிடு



கிறார். ஏனெனில், தென்திசையில் தானே ஹனுமான் சென்றான்.

*வன் திசைப்படருமாறொழிய*
*வண்டமிழுடைத்*
*தென்திசைச் சென்றுளார் திறன்*
*எடுத்துரை செய்வாம்*

என்கிறார் கம்பர். 'மற்ற மூன்று திசைகளில் சென்றோரை விடுங்கள்- வளமான தமிழ்மொழியையுடைய தெற்கு திசையில் சென்றோரைப் பற்றிச் சொல்கிறேன்' என்கிறார்!

சுக்ரீவனின் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு எல்லா வீரர்களும் ஒரு மாத காலத்தில் திரும்பி வந்துவிட்டார்கள். சீதை இருப்பிடம் அவர்களுக்குத் தெரியவில்லை. தென் திசை நோக்கிச் சென்றவர்கள் மட்டும் வரவேயில்லை. விடாமுயற்சியுடன் தேடிப் போய்க் கொண்டேயிருந்தார்கள். இதற்குக் காரணம் என்ன..? தென் திசை கோஷ்டியில் ஹனுமான் இருந்து அவர்களை வழி நடத்தியதுதான் காரணம். எப்படியும் சீதையைக் கண்டுபிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையும் ஸ்ரீராமன் அளித்த மோதிரம் கொடுத்த அபார சக்தியும் ஹனுமானுக்குத் தைரியத்தைத் தந்தது. குழுவை முன்னடத்தி அவனே அழைத்துச் சென்றான்.

தென்திசை நோக்கிச் சென்றவர்கள் என்ன ஆனார்கள்?....

விந்திய மலைப்பகுதியை அடைந்த போது அவர்கள் குழு ஒரு காட்டுக்குள் நுழைந்தது.

அந்தக் காடு காடாகவே இல்லை! மரம், செடி, கொடிகளற்று, பெயருக்குக் கூட பசுமையென்பதே இல்லாமல் வறண்டு கிடந்தது. உண்பதற்குப் பழங்களும் குடிக்க தண்ணீரும் கிடைக்கும் என்று நம்பி வந்த வானர சேனைக்கு ஏமாற்றமும் தவிப்பும் உண்டாயிற்று.

கண்டு என்ற மஹரிஷி தமது பதினாறு வயது மகனை அந்த வனத்திலே பறிகொடுத்திருந்தார். அதனால் காட்டின் பேரிலேயே கோபம் கொண்டு சபித்துவிட்டார். யாருமே வசிக்க இயலாத சூன்யப் பிரதேசமாக அது மாறக் கடவது என்று சபித்துவிட்டார்.

அப்படிப்பட்ட காட்டுக்குள் நுழைந்து வானரங்கள் தவித்தபோது, ஹனுமான்தான் ஒரு விஷயத்தைக் கவனித்தார். அந்தப் பகுதியிலே ஒரு குகை இருந்தது. அந்த குகைக்குள் பறந்து போய் மீண்டும் வெளி வந்த பறவைகள் தண்ணீரில் நனைந்த இறகுகளுடன் வெளிவருவதைக் கண்டார். உடனே, குகைக்குள் நீர் நிறைந்த குளமோ கிணறோ இருக்கும் என்பது அவருக்கு உறுதியாகத் தெரிந்துபோய்விட்டது.

மற்ற வானரங்களுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு குகைக்குள் அழைத்தார் ஹனுமார். எல்லோரையும் பின்தொடர்ந்து வருமாறு கூறினார். உள்ளே ஒரே இருட்டு! ஒருவர் கையை மற்றவர் பிடித்துக் கொண்டு வரிசையாகச் சென்றனர்.

இருட்டிலே வெகு தூரம் சென்ற பிறகு திடீரென ஒரு பேரொளி தென்பட்டது. அங்கே- திறந்த வெளியில் நடுநாயகமாக ஒரு பளிங்கு மேடை.... அதன் நடுவே மான்தோல் ஆசனத்தின்மீது ஒரு பெண்மணி, தபஸ்வினி கோலத்தில் உட்கார்ந்திருந்தாள்.

சுற்றிலும் ஒரே ரமணீயம்தான்! மலர்கள் பூத்துக் குலுங்கும் மரங்கள், பழங்கள் பழுத்து கனத்தக் கிளைகளுடன் வேறு சில மரங்கள், நவரத்தின கற்கள் இழைத்த மாளிகைகள் என்று ஒரு மாபெரும் வளம் பொருந்திய நகரம் பிரமிப்பூட்டியது.

தபஸ்வினியின் அருகே சென்று வணங்கி நின்றார் ஹனுமான். அவள் பெயர் ஸ்வயம்பிரபை என்றும் அந்த குகை மயனால் நிர்மாணிக்கப்பட்டது என்றும் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

இந்தக் கட்டத்திலே ஸ்வயம்பிரபையிடம் வெகு அழகாகத் தம்மையும் தமது குழுவினரையும் அறிமுகம் செய்து கொள்கிறார் ஹனுமான்-

முதலில் ராமனது சரிதத்தைச் சொல்கிறார் ஸ்வயம்பிரபையிடம்! அதற்குப் பிறகு தாங்கள் ராமகாரியமாக வந்ததைத் தெரிவிக்கிறார். சீதையைத் தேடிப் புறப்பட்டி

---

**"நம்ம வீட்டுக்குத் தண்ணிக் குழாய் கனெக்ஷன் வேணாங்க."**

**"அட! அவ்வளவு சிக்கனமா!"**

**"பொதுக் குழாயில சண்டை போட்டுப் பிடிச்சு கொண்டு வர்ற தண்ணி ருசியே தனிங்க!"**

**– வத்திராயிருப்பு தெ. சுந்தரமகாலிங்கம்**



ருப்பதைச் சொல்கிறார்.

இந்தக் கட்டத்தை வால்மீகி எப்படி விவரிக்கிறார் பாருங்கள்– ஹனுமான் சொல்கிறான் ஸ்வயம்பிரபையிடம்: "அயோத்திக்கு அதிபதியான தசரதன் மைந்தன் ஸ்ரீ ராமன் பித்ருவாக்ய பரிபாலனத்துக்காக தண்டகாரண்யம் வந்தார். அவருடன் அவரது மனைவியும் தம்பியும் காட்டுக்கு வந்தார்கள். ராமனது மனைவியான சீதையை ராவணன் அபகரித்துக் கொண்டு போய் விட்டான். சீதையைத் தேடிவரும் வழியில் ராமனுக்கு சுக்ரீவனோடு நட்பு உண்டாயிற்று. வாலியை ஒரே அம்பினால் வீழ்த்தி, சுக்ரீவனை அரசனாக்கினார். அதன் பிறகு சீதையைக் தேடி வரும்படி சுக்ரீவன் எங்களை அனுப்பினான். அந்த காரியமாகத்தான் நாங்கள் புறப்பட்டு வந்திருக்கிறோம். ஒரு மாத காலம் முடிவதற்குள் திரும்பச் சென்று சுக்ரீவனிடம் நாங்கள் போய் செய்தி சொல்ல வேண்டும். இந்தக் குகைக்குள் வந்துவிட்டு, வெளியே போகத் தெரியாமலிருக்கிறோம்; எங்களை வெளியில் கொண்டு விடுவாயாக" என்று வேண்டிக் கேட்டுக் கொள்கிறான்.

**ஸ்**வயம்பிரபை அந்த ராம பக்தர்களைப் பார்த்தாள்... எல்லோரையும் வயிறாற பழங்கள் உண்ணவும் தண்ணீர்ப் பருகவும் அனுமதித்தாள். பிறகு அனைவரையும் கண்ணை மூடிக் கொள்ளும்படி கட்டளையிட்டாள். அப்படியே அவர்களும் மூடிக் கொள்ள, அத்தனை பேரும் குகைக்கு வெளியே கொண்டு செல்லப்பட்டார்கள்!

ஸ்வயம்பிரபையின் இந்தக் குகையாக இருந்திருக்கலாம் என்று இன்றைக்கும் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரு குகையைச் சொல்கிறார்கள். கடையநல்லூர் அருகில், கிருஷ்ணாபுரம் என்ற ஊரில் ஒரு அழகான ஆஞ்சநேயர் ஆலயமும் அதன் எதிரே பாழடைந்த குகையும் காணப்படுகின்றன. ஹனுமான் முதலானவர்கள் சென்று ஸ்வயம்பிரபையைப் பார்த்த குகை இதுதான் என்கிறார்கள்! ஹனுமானுக்கு உதவிய ஸ்வயம்பிரபைக்குப் பேரின்ப வாழ்க்கை அருளினான் ஸ்ரீராமன்.

'அப்பராமபக்தி' என்று ஆரம்பிக்கும் தியாகராஜ கீர்த்தனையைக் கேட்டிருப்பீர்கள். இதிலே ஸ்வயம்பிரபைக்கு ஸ்ரீராமனின் அருள் கிட்டியதை அழகாக விவரித்திருக்கிறார் தியாகராஜர்:

*சபரியெங்கி விச்சுதா*

# அருள்வாக்கு

**ம**னிதனாகப் பிறந்தவனுக்கு எவ்வளவோ பாக்கியங்கள் உண்டு. எல்லா பாக்கியங்களுள்ளும் மேலான பாக்கியம் பிறருக்குச் சேவை செய்வதே.



'சேவை' என்று தெரியாமலே அவரவரும் தமது குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவையைச் செய்ய வேண்டும் என்கிறேன். நமக்கு எத்தனையோ கஷ்டங்கள். உத்தியோகத்தில் தொந்தரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை– இத்யாதி இருக்கின்றன. நம் சொந்தக் கஷ்டத்துக்கு நடுவில் சமூக சேவை வேறா என்று எண்ணக் கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடுகூட 'அசலார் குழந்தைக்குப் பாலூட்டினால், தன் குழந்தை தானே வளரும்' என்றபடி நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மைச் சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால் இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமலே பிறர் கஷ்டத்தை தீர்க்க நம்மாலானதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும், அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும், நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

*சந்த்ர தருடு மெச்சுதா*
*அபல ஸ்வயம்ப்ரபுகு தைவம்*
*அசல பதவி நிச்சுதா... மா*

– அதிகம் பாடப்படாத சரணம் இது!

**ச**ரி, குகையைக் கடந்து வெளியே வந்த வானர சைன்யம் என்ன ஆயிற்று...? அடுத்த வாரம் வரை பொறுங்கள்.

(வளரும்)

● பி.எம். வள்ளி, மதுரை – 16.

? 'எம்.ஜி.ஆரைப் பிடித்த பேயை விரட்ட முயன்ற பூசாரிதான் ஆர்.எம்.வீ. ஆனால் அவர் முயற்சி வெற்றி பெற வில்லை' என முதல்வர் கூறியிருப்பது பற்றி...?

! பேய்- பூதம்- பூசாரி விரட்டல் எல்லாம் மூட நம்பிக்கைகள் என்பது உணரப்பட்டாலும் உதாரணம் காட்ட முதல்வருக்கும் இவை தேவைப்படுகின்றன!



• முழுமுதல் ஸைபம்!



• கற்பித்த தோல்வி!

● கே.வி.ராமன், சென்னை – 73.

? டென்னிஸ் ஒற்றையர் ஆட்டத்தில் பல சாதனைகள் புரிந்த சாம்ப்ராஸ், அமெரிக்க ஓபன் போட்டியில் தோல்வி அடைந்ததால் கற்கும் பாடம்..?

! சிகரத்தை அடைந்தவர்கள் ஒரு காலத்தில் இறங்கியே தீர வேண்டும்.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்–2.

? 'தீவிரவாதத்தில் ஈடுபட்டவர்களை நல்வழிப் படுத்தியது பா.ம.க என ராமதாஸ் கூறியுள்ளாரே?

! தொண்டர்களை முதலில் நல்வழிப் படுத்துகிற வழியைப் பார்க்கட்டும்! தலைவர் கார் தாக்கப்பட்டது என்பதற்காக தமிழகத்தையே பத்த வைக்கிறார்களே!

● எஸ். முருகேசன், தென்காசி.

? 'பாகிஸ்தான் வசமிருக்கும் ஏவுகணைகளால் இந்தியாவிலுள்ள எல்லா பெரிய நகரங்களையும் மூன்று முறை பூரணமாக அழித்து விடலாம்' என்று அந்நாட்டு அணு விஞ்ஞானி காதர்கான் பேசியிருப்பது அச்சமூட்டுவதாக இல்லையா?

! இந்த மாதிரியான வெறி பிடித்த அச்சுறுத்தல்களுக்கும் அவை நிஜமாகக் கூடிய அபாயங்களுக்கும் கவலைப்பட்டுத்தான் அணு ஆயுதப் பரிசோதனைக்கு உலகளாவிய தடை கோருகின்றனர் அறிஞர் பெருமக்கள். அரசியல்வாதிகளுக்கோ அது தங்கள் பராக்கிரமத்தைக் காண்பித்துக் கொள்ளும் மார்க்கமாக இருக்கிறது.

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

? மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மேற்கு வங்க அரசைக் கலைக்கக் கூடாது என்று கூறும் அதிமுகவினர் தமிழக அரசைக் கலைக்க வேண்டும் என்று கூறுவது ஏன்?

! அங்கே ஆள்வது நட்புக் கட்சி; இங்கே ஆள்வது எதிரிக் கட்சி ஆச்சே ஐயா!

## த.மா.கா.வுடன் இனி எந்த உறவும் இல்லை என்கிறாரே



• வாழ்த்தும் நேரம்!



• சோதனைப் பேச்சு!

● ஆர். ராஜாசாஹிப், சென்னை 106.

?த.மா.கா.வுடன் இனி எந்த உறவும் இல்லை என்று கலைஞர் சொல்லி விட்டாரே...?

! வருத்தத்துக்குரிய பிரகடனம். 'நல்வரவு' போர்டை நீக்கினாலும் கதவை அறைந்து சாத்தித் தாளிட வேண்டியதில்லை. மூப்பனாருடன் நட்புறவு உண்டு' என்று சொல்லி வைப்பது நல்லது.

❐ ரூ. 50 பரிசு பெறுபவர்:
பி. சிவகுமார் பிரபு,
பொன்னாபுரம்,
சிட்கோ அஞ்சல்,
திருப்பூர் 641 606.

★ ரூ. 25 பரிசு பெறுபவர்:
விஜயலட்சுமி முருகேசன்,
பிளாட் 19பி, நாலாவது தெரு,
அகத்தீஸ்வரர் நகர்,
பொழிச்சலூர், சென்னை – 74.

● எம். குணசேகரன், கரூர்.

*? 'தமிழகத்தில் திராவிட கட்சிகள் ஆட்சிக்கு வந்ததிலிருந்து லஞ்ச – லாவண்யம்தான் கோலோச்சி வருகிறது' என தமிழக காங்கிரஸ் தலைவர் இளங்கோவன் கூறியிருக்கிறாரே?*

! அகில இந்திய, அகில உலக ரீதியில் நடந்த போபர்ஸ் ஊழல், நீர்மூழ்கி ஊழல், ஏர் பஸ் ஊழல், எல்லாவற்றையும் வசதியாக மறந்துவிட்டுப் பேசுகிறார்.



• பாப்பாவை மறந்தார்!



• பற்ற வைத்த படை!

● கல்லார் ரஹ்மத், நாகை-1

*? இந்தியாவின் வறுமைக்குக் காரணமே ஜாதி அரசியல்தான் என்று உலக வங்கி குறை கூறியிருப்பது பற்றி...?*

# கலைஞர்?

! உலக வங்கி சொல்வதில் அர்த்தமிருக்கிறது– பொருளாதார முன்னேற்றத்தைத் தடை செய்த 'ஜனநாயக சோஷலிஸ'த்தின் இடத்தை இன்று ஜாதி அரசியல் கைப்பற்றியிருப்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

● ஜான் பென்னிக்குக், சென்னை – 8.

*? ரவுடிகள் அதிகம் உள்ள மாநிலம் என்று தமிழ்நாடு பெயர் வாங்கியிருக்கிறதே – அதை மாற்ற என்ன வழி?*

! தொழிற்கல்வி, வேலை வாய்ப்பு.

● விஜயலட்சுமி முருகேசன், சென்னை-47 ★

*? முதலியார் பேரவை அரசியல் கட்சியாக மாறியதில் யாருக்கு நஷ்டம்? யாருக்கு லாபம்?*

! ஏ.சி. சண்முகத்துக்கு லாபம். அவரும் வாரிசை உருவாக்கத் தொடங்கலாம்! ஜாதி அரசியல் மறைய வேண்டும் என்ற லட்சியக் கோட்பாட்டுக்கு மேலும் நஷ்டம்.

● பொன்னாபுரம் பி. சிவகுமார் பிரபு, திருப்பூர் ❐

*? சமையல் காஸ், டீசல் விலை மீண்டும் உயர்வது உறுதி என மத்திய அமைச்சர் அறிவித்துள்ளாரே?*

! உலக அளவில் பெட்ரோலிய எண்ணெய் விலை ஏறியிருப்பதால் சொல்கிறார். உலகளாவிய விலை ஏற்றத்துக்கு ஏற்ற விகிதத்தில் இந்திய விலை ஏற்றம் இருக்காது ரூபாயின் மதிப்பு மிகக் குறைவு என்பதால். ஆதலால் பாதிப்பு ரொம்ப அதிகமாயிருக்கும். இப்போதே மூச்சை இழுத்துப்பிடியுங்கள்.

● கே.ஆறுமுகம், கள்ளக்குறிச்சி.

*?அணுகுண்டு சோதனை நியாயமானதுதான் என்கிறாரே பிரதமர்?*

• அவசர தாழ்ப்பாள்!

! சோதனைமேல் சோதனை என்பது இதுதான்!



● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? பெரியார் விழாவுக்கு சோனியாவை அழைக்க வேண்டும் என்று ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் கேட்டது பற்றி...?*

! ப்ரியங்காவையும் குட்டிப் பாப்பாவையும் அழைக்க வேண்டும் என்று சொல்லாமல் விட்டதே ஆச்சர்யம்தான்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

*?த.மா.காவின் சமீபத்திய செயல்பாடுகளிலிருந்து ப. சிதம்பரம் ஒதுங்கியே இருக்கிறாரே...?*

! புத்திசாலி!

புதுவை அமைச்சர்

## கண்ணன் பேட்டி!

# "தனிக்கட்சி முடிவு மூப்பனார் கையில்!"

புதுவை காங்கிரஸ் கூட்டணி அரசில் பொதுப் பணித் துறை அமைச்சராக பதவி வகித்து வரும் கண்ணன், புதுவை மாநில த.மா.கா தலைவர் பதவியை ராஜினாமா செய்ததைத் தொடர்ந்து, அங்கு ஏற்பட்டுள்ள அரசியல் பரபரப்பிற்கு இடையே அவரைச் சந்தித்தோம்.

"தலைவர் மூப்பனார் நிறைய சுதந்தரம் கொடுக்கக் கூடியவர். அதேபோல் முடிவு மேற்கொள்ளும் முன்பாக கலந்து பேசக்கூடிய கனிவான தலைவர். ஆனால் அமைச்சர்கள் தேனி ஜெயக்குமார், கந்தசாமி விஷயத்தில் மௌனம் சாதித்துவிட்டார். அவரைச் சுற்றியிருக்கும் சிலர் தவறான வழியை அவருக்குச் சொல்லி விட்டார்கள். தேனி ஜெயக்குமார் வீட்டில், அவருக்கு வலதுகை போல் இருந்த அவரது குடும்பத்துடன் நெருங்கிப் பழகிய, ஊர்காவல் படை வீரரைக் காணவில்லை என்று, அவரது பெற்றோர் கதறுகிறார்கள். ஆனால் 'அவன் எக்கேடு கெட்டுப் போனால் எனக்கு என்ன' என்பது போல இருக்கிறார் தேனி ஜெயக்குமார். பெற்றோர் உயர்நீதிமன்றப் படியேறி, தங்கள் மகனைக் கொன்று விட்டதாகக் கதறுகிறார்கள். நீதிமன்றம் சி.பி.ஐ விசாரணைக்கு உத்தரவிடுகிறது. ஒரு அமைச்சர் மீது சட்டத்திற்கும் மக்களுக்கும் சந்தேகம் வருகிறது. இவர் ஏன் நீடிக்க வேண்டும் என்று தொண்டர்கள், பொதுமக்கள் என்னைக் கேள்வி கேட்கிறார்கள். இதுதான் த.மா.காவா? என்கிறார்கள்.



"இன்னொரு அமைச்சர் கந்தசாமி, பல தொழில் நிறுவனங்களை, தன் அடியாட்களை கொண்டு தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டு, துன்புறுத்தி வருவதாக, எனக்கும் முதல்வருக்கும் நேரடியாக புகார் வருகிறது. இதற்கு முன்பே இது பொதுமக்களை கோபம் கொள்ள வைக்கிறது. தொண்டர்களின் உணர்வுக்கு மதிப்புக் கொடுத்துத் தொடங்கப்பட்ட த.மா.கா, புதுவையில் மட்டும் ஏன் அதை நசுக்குகிறது? இனியும் நீங்கள் இந்தப் பதவியில் நீடிப்பது முறையல்ல என்று எனக்கு உந்தரவு இடுகிறார்கள். மிகக் கொந்தளிப்பான சூழ்நிலை வந்த பிறகே இனியும் நீடிப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தோம்'' என்கிறார் கண்ணன்.

ஒரு நல்ல ஆட்சிக்கு எந்த இடையூறும் ஏற்படக் கூடாது என்பதால் தொடர்ந்து ஆதரவு தருவோம். அதில் எந்த மாற்றமும் இல்லை. அதேபோல் த.மா.காவிற்கு எதிராக ஒரு தனிக்கட்சி என்பதை நாங்கள் கனவிலும் நினைத்துப் பார்க்கவில்லை. தனிக்கட்சி என்பதெல்லாம் அய்யா மூப்பனாரின் முடிவில்தான் இருக்கிறது. அப்படியொரு நிர்ப்பந்தம் எங்களுக்கு வராது என்றே நினைக்கிறேன். நானும் தொண்டர்களும் பா.ம.கவில் இணையப் போவதாக வரும் செய்தி திட்டமிட்ட வதந்தி. சத்தியமாக அப்படியொரு முடிவை ஒருபோதும் எடுக்க மாட்டோம்'' என்றார்.

சந்திப்பு: **ஜெயன்**
படம்: **ராஜன்**

# பா.ம.க.வின் பிடிவாதத்தால் பரவிய தீ!

புதுவையிலிருந்து பாகூர் வழியாகக் கடலூர் போகும் தனியார் பேருந்து அது. எல்லா கண்ணாடிகளும் உடைக்கப்பட்ட கூடாக நின்று கொண்டிருந்த பேருந்தின் உள்ளே, தேனீக்களாய் அப்பியபடி பயணிகள். இரண்டு நாட்களுக்குப் பிறகு ஓடத் தொடங்கியிருக்கும் பேருந்தில், அலை மோதும் கூட்டம் அதிசயமல்ல என்ற சமாதானத்தோடு, முண்டியடித்து உள்ளே ஏறி பெரிய காட்டுப்பாளையத்தில் இறங்கினோம். பிரதான சாலையில் இருந்த திருமண மண்டபம், முழுக்க போலீசார் முகாமிட்டிருந்தனர்.

ஸ்கூட்டரில் எதிர்ப்பட்ட ஒருவர், "பெருமாள் கொல்லப்பட்டது பெரிய காட்டுப்பாளையம் காலனிப் பகுதி, இங்கிருந்து ஒரு கிலோ மீட்டர் ஊருக்குள் நடக்க வேண்டும்" என்று சாலையைக் காட்டிவிட்டு, விரைவாகப் போய் விட்டார். நடக்கிறோம். தெருவிற்குள் நுழைந்ததும் தீய்ந்த சாம்பல் நெடி. வெறும் கவர் மட்டுமே நின்றிருக்க, வரிசையாய் எரிந்த வீடுகள். இளைஞர்களும், பெண்களும் முதியவர்களும் ஒரு நூறு பேர் நம்மைச் சூழ்ந்துகொண்டு "இந்த அநியாயத்தைப் பாருங்க ஐயா" என்று வாய் விட்டுக் கதறுகின்றனர்.



• கதறும் பெருமாளின் மூத்த மகன்

"அபிஷேகப்பாக்கத்துல நடந்த தகராறு ஆறேழு மைல் தள்ளியிருக்கிற எங்களை எப்படி எரிச்சுப்புட்டு பாருங்க..." - ஒரு இளைஞர் இரண்டு கைகளிலும் கட்டுடன் கதறுகிறார். அவர் அய்யனார். "அபிஷேகப்பாக்கத்தில நடந்த கொடியேத்துற தகராறு பத்தி எங்களுக்கு எதுவும் தெரியாது. அங்கேயிருந்து அரியாங்குப்பம், ஆண்டியார்பாளையம்னு பரவிப் போச்சு. பா.ம.க ஆளுங்க ஆண்டியார்பாளையத்திலே பூந்து தீவெச்சதும் ஜனங்க, எங்க ஊருக்கு ஓடி வந்தாங்க. ஓடி வந்தவங்க எல்லோரும் நம் ஜாதி ஜனங்க. இதுக்கு இடையிலே இங்கேயும்



• விநாயகமூர்த்தி குழந்தைகளுடன்

பெரியகாட்டுப்பாளையம் காலனி மக்களுக்குப் பக்கத்து ஊரான வில்லுப்பாளையம் ஒரு வன்னியர் கிராமம். ஆனால் எந்தக் கட்சியிலும் சேராத இந்தக் கிராமத்தினர் அரிசி கொடுத்து உதவியிருக்கிறார்கள். அங்கிருந்து நகர்ந்தோம்... "இதுதான் பெருமாள் வீடு இருந்த இடம் என்று ஒரு சாம்பல் திட்டைக் காட்டினார் இளைஞர். இடுப்பில் குழந்தையோடு நின்றிருந்த அவரின் மூன்றாவது மகள் கதறினார். "வாரத் தவணைக்குப் பணம் வாங்கி, ஒரு வாரத்துக்கு முன்னாடிதான் அப்பா வீட்டுக்குக் கீத்துப் போட்டது. வீட்டை எப்படியாவது காப்பாத்திடணும்னு தடுத்துச்சி... ஆனா என்ன புண்ணியம்? சினிமாவில் வர்றதுமாதிரி, ஒரு ஆயிரம் பேர் ஈட்டி, கம்பு, வீச்சரிவாள் சகிதமா திமுதிமுன்னு ஊருக்குள்ளே நுழைஞ்சாங்க. நாங்க ஓடினோம். பெட்ரோல் பாமையும், நாட்டு வெடிகுண்டையும் எங்க மேலேயும், வீட்டு மேலேயும் தூக்கி எரிஞ்சாங்க. என்னோட சேர்ந்து பல பேர் தடுத்தோம். எல்லோருக்கும் வெட்டு. எனக்கு இரண்டு கையிலும் வெட்டு. கிருஷ்ணமூர்த்தியை உடம்பு பூராவும் கலுக்கியால் குத்திப் போட்டாங்க. ஆஸ்பத்திரியில உயிருக்குப் போராடிக்கிட்டு இருக்கான். எரியாத வீடுகளுக்கு உள்ளே பெட்ரோல் பாமை போட்டதும் டமார் டமார்ன்னு வெடிச்சு எரியுது. உயிருக்குப் பயந்து ஓடுறோம்... விடாம துரத்தி வெட்டினாங்க. இன்னொரு பக்கம், கதிர் அடிக்க, அறுவடை செய்து போட்டு வெச்சிருந்த இரண்டு வேலி நெல் கதிரை கொளுத்திட்டாங்க. இத்தனையும் முப்பது போலீஸ்காரங்க முன்னாடி நடக்குது. அவங்க கையில துப்பாக்கியிருந்தது. ஆனா வானத்தைப் பார்த்துக் கூட சுடவில்லை" என்று குமுறிய அய்யனார் "கைகள் சரியாகும் வரை மனைவி வயல் வேலைக்குப் போனாத்தான் கஞ்சி'' என்று கலங்குகிறார்.

'அவுங்க' வரலாம்ங்கிற பயத்துல கடலூர் போலீஸுக்குத் தகவல் கொடுத்தோம்... முப்பது போலீஸ் வந்துட்டாங்க. ஆனா



• உயிருக்குப் போராடும் கிருஷ்ணமூர்த்தி

## வாஜிக் லாவண்யா

மாதுரி / அரஸ்









# அபிஷேகப்பாக்கத்தில் நடந்தது என்ன?

"இங்கு எந்தக் கட்சிக் கொடியையும் ஏற்றுவதற்கு ஆரம்பம் தொட்டே நாங்கள் அனுமதிப்பதில்லை. சுதந்தர தினத்தன்று பள்ளியில் தேசியக்கொடி ஏற்றுவதோடு சரி. வேற்று கட்சித் தலைவர்கள் வந்தால் இங்கு இருக்கும் அம்பேத்கர் சிலைக்கு மாலை அணிவித்துச் செல்லலாம். சில உள்ளூர்க்காரர்களின் பேச்சைக் கேட்டு, கொடியேற்றியே தீருவோம் என ஆயுதங்களோடும், ஒரு ஜீப் நிறைய கற்குவியலோடும் வந்ததால்தான் இத்தனை களேபரம் நடந்தது" என்கிறார்கள் புதுவை அபிஷேகப்பாக்கம் மக்கள். புதுவை சட்டப்பேரவை உறுப்பினர்கள் ராம்சிங், மஞ்சினி கொடுத்த தைரியத்தில்தால் ராமதாஸ் அங்கே கொடியேற்றலாம் என்று முடிவுக்கு வந்தார் என்கிறார்கள்.


• ராம்சிங்

ராம்சிங்கைச் சந்தித்தோம். "அபிஷேகப்பாக்கத்தில் அய்யாவைத் தாக்கவில்லை என்பது வடிகட்டின பொய். அவரது பாதுகாவலர், விக்ரமன் படுகாயமுற்று சென்னை விஜயா மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருவது பொய்யாகி விடுமா? ஒரு வாரத்திற்கு முன்பே நாங்கள் கேட்டுக் கொண்டும் அபிஷேகப்பாக்கத்தில் வெறும் இருபது போலீஸ்காரர்களை புதுவை அரசு பாதுகாப்பிற்கு அனுப்பியதால் இத்தனை பெரிய தாக்குதல் நடந்தது! நானும், மஞ்சினியும் ஒரு கடைக்குள் ஒளிந்து ஷட்டரை பூட்டிக் கொண்டு, போலீஸ் வரும்வரை காத்திருந்து தப்பித்தோம். ஆண்டியார்பாளையம், பெரிய காட்டுப்பாளையம் ஆகிய இடங்களில் நடந்த வன்முறை, தீ வைப்பு சம்பவங்கள் குறித்து எனக்கு எதுவும் தெரியாது" என்று சுருக்கமாக முடித்துக் கொண்டார்.

கண்ணு முன்னாடியே வெட்டினாங்க. நீ தப்பிச்சு ஓடுமான்னு என்னை விரட்டினாரு. நான் குழந்தையோடு ஓடிப் போய் ஒளிஞ்சுகிட்டு நின்னு பார்த்தேன். அப்பா நடக்கமுடியாதபடி, கழுத்து, கை, கால் எல்லா எடத்துலேயும் வெட்டி எரியுற எங்க வீட்டில தூக்கிப் போட்டாங்க. வயல்காட்டுக்குப் போயிருந்த அம்மாவும் தங்கச்சியும் ஓடி வந்து பைப்பில தண்ணீர் அடிச்சு, எரியுற நெருப்பிலே ஊத்தி அப்பாவைத் தூக்கினோம். உடம்பு கரிக்கட்டையாப் போச்சு... ஆஸ்பத்திரிக்குத் தூக்கிட்டுப் போகும்போது.... 'நான் பிழைக்க மாட்டேன். எம் புள்ளைகளைப் பார்த்துக்கன்னு' அழுதார். அதான் அவர் கடைசியா பேசினது" என்றபோது கூட நின்ற பெண்கள் எல்லாம் வயிற்றிலும், மார்பிலும் அடித்துக்கொண்டு, உணர்ச்சிப் பிழம்பாக கதறினர். தீயில் கருகி இறந்த பெருமாளுக்கு நான்கு பெண்கள்.

"பெரியகாட்டுப்பாளையம் புதுவை எல்லையில் உள்ள ஒரு தமிழக கிராமம். இந்த ஊரில் விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பு கிடையாது. ஒருத்தர்கூட அதில் உறுப்பினர் இல்லை. ஆனால் செத்துப் போன பெருமாள் விடுதலைச்சிறுத்தை என்று பத்திரிகையில் போடுறாங்க. போலீஸ் தான் அப்படி செய்தி கொடுத்திருக்காங்க. இப்படிச் செய்யறதுனால, இனி ஒட்டு மொத்த கிராமமும் விடுதலைச் சிறுத்தையில் சேருவதைத் தவிர வேறு வழியில்லை" என்று தீர்க்கமாகச் சொல்கிறார்கள் அந்த ஊர் இளைஞர்கள். பெரிய காட்டுப் பாளையத்திலிருந்து ஜிப்மர் மருத்துவமனைக்கு வந்தோம்.

அவசர சிகிச்சைப் பிரிவில் உயி



• எல்லாம் எரிந்து....

ருக்குப் போராடிக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்திக்கு, இரண்டு குழந்தைகள். ஆறு மாதத்திற்கு முன்பு மனைவி இறந்துபோய்விட, தமது இரண்டு குழந்தைகளை வைத்துக்கொண்டு அல்லாடியிருக்கிறார். இடதுபக்க மண்டையில் வெட்டு. முதுகு, வயிறு என எல்லா இடங்களிலும் படுகாயம் அடைந்திருக்கும் கிருஷ்ணமூர்த்தியின் உடல் நிலை 'இனி எங்கள் கையில் இல்லை' என்றார் ஜிப்மர் மருத்துவமனை டாக்டர் ஒருவர். அங்கிருந்து முத்தையால்பேட்டையை அடுத்து இருந்த சோலை நகருக்குப் புறப்பட்டோம்.

கல்லடிபட்டு இறந்துபோன மீனவப் பெண் ரேவதி வீட்டில் மனைவியைப் பறி கொடுத்த விநாயக மூர்த்தி இடிந்து போய் அமர்ந்திருந்தார். "சென்னையில என் உறவினர் வீட்டுக் கல்யாணத்திற்குப் போனோம். விசேஷம் முடிந்ததும், விழுப்புரம் வழியாக பாண்டி வரும் பஸ்சில் வந்தோம். விழுப்புரம் பக்கத்தில் கோலியனூர் கூட்டுச் சாலை பக்கத்தில் பஸ் வந்தப்போது திடுதிடுன்னு ஒரு நூறு பேர் ஓடி வந்தாங்க. வேகமாக பஸ்ஸை ஓட்டி தப்பிச்சிடலாம்ன்னு டிரைவர் முயற்சி செய்தார். ஆனால் நாலாபுறமிருந்தும் கருங்கற்கள் பறந்து வந்து பஸ்சில் விழுந்தன. டிரைவர் பஸ்சை நிறுத்தி விட்டார். அப்போதான் ஒரு பெரிய கருங்கல் முன் கண்ணாடியை உடைச்சிக்கிட்டு வந்து, என் மனைவி நெற்றியில் அடித்தது. மூணு கிலோ எடை இருக்கும். அவ்வளவு பெரிய கல். அய்யோ... அம்மான்னு விழுந்தா. அவ்வளவுதான். இடது பக்க தலை சப்பையா போயிட்டு. அங்கேயே உயிர் பிரிஞ்சிடுச்சி'' என்று அழுது கம்மிய தொண்டையால் மீண்டும் அழத் தொடங்கியவரைத் தேற்றினோம்.

ஒரு அரசியல் தலைவர் தாக்கப்பட்டார் அல்லது கைது செய்யப்பட்டார் என்ற செய்திக்காகவே, இங்கு பல கிராமங்கள் எரிந்து பல உயிர்களைப் பலி கொடுக்க வேண்டிவரும் அவலத்திற்கு எப்போது முற்றுப்புள்ளி வரும்? வன்முறை, கலவரம் இவற்றை கட்சிக் கொள்கையாகவே கடைபிடிக்கத் தொடங்கியிருக்கும் கட்சிகளின் எண்ணிக்கை அதிகரித்து வரும் போது அப்படியொரு முற்றுப்புள்ளியை எங்கு போய்த் தேடுவது?

— ஆர்.சி.ஜெ

படங்கள்: ராஜன்



• அய்யனார்



# மகிழ்வித்து மகிழுங்கள்.

ஆதரவற்ற பெண் குழந்தைகளின் புகலிடம்

## வேதாரண்யம்
## கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்
## வேண்டுகோள்



பேரன்புடையீர்,

> நாரத முனிவருக்கு எப்படியும் ஒரு காரியம் நடந்தேற வேண்டியிருந்தது. எந்த தெய்வத்தையாவது பிரார்த்தித்து அந்த காரியத்தை சாதிக்க நினைத்து தேவலோகம் செல்கிறார். அங்கே விஷ்ணு பகவான் தியானத்திலிருப்பதைப் பார்க்கிறார். விஷ்ணு தாமே இறைவனாக இருந்து கொண்டு யாரைத் தியானிக்கிறார் என்று வியந்து நாரதர் விஷ்ணுவையே அவர் யாரைத் தியானிக்கிறார் என்று வினவுகிறார். பகவான் விஷ்ணு உலகிற்கெல்லாம் சக்தி தரக்கூடிய தேவியைத் தியானிப்பதாகவும், நாரதரும் அவ்வாறு தேவியைத் துதித்து வேண்டியதைப் பெறலாம் என்று கூறினார்.
>
> – தேவி பாகவதம்.

நவராத்திரி சமயத்தில் சுவாசினிகளைத் தேவியாக நினைத்து துதிப்பது வழக்கம். தீபாவளிப் பண்டிகையும் தேவியருளால் தான் கிடைத்தது.

கல்வியிலும் ஏழை, எளிய, ஏதிலிச் சிறுமியருக்கு உதவுங்கள்.

கடை கோடி கிராமப்புறத்தில் காந்தியச் செம்மல் வேதாரண்யம் உப்பு சத்யாகிரஹ தியாகி சர்தார் வேதரத்னம் அவர்களும் அவர்தம் ஒரே மைந்தர் பத்மஸ்ரீ வே. அப்பாகுட்டி அவர்களும் இந்திய சுதந்திரத்திற்கு முன்பே (1946) காந்தி அடிகளின் ஆசியுடன் தொடங்கிய மகளிர் தொண்டு நிறுவனமான கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் என்ற எளிய சமுதாயத்தில் வாழும் சுமார் 3,000 பெண் குழந்தைகள் சார்பில் இந்த வேண்டுகோளை வைக்கிறோம்.

பெருந்தலைவர்களான, பூஜ்ய விநோபாபாவே தொடங்கி வைத்த கோசாலை, பாரத ரத்தினங்கள் ராஜாஜி தொடங்கி வைத்த அன்னபூர்ணாலயம், முதல் பார்லிமெண்ட் சபா நாயகர் ஜி. வி. மாவ்லங்கர் தொடங்கி வைத்த கலைமகள் நிலையம், சி. சுப்ரமணியம் அவர்கள் தொடங்கி வைத்த நசிகேத நிவாஸ், காமராஜ், ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் தொடங்கி வைத்த குடிநீர் திட்டம் ஆகியவற்றை பெற்று அவர்கள் நல்ஆசியுடன் காந்திய வழியில் வாழ பயிற்சி எடுக்கிறோம்.

கிராமப்புற ஏழை எளிய ஏதிலிப் பெண்குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிட வசதி, கல்வி, தொழிற்கல்வி, (ஆஃப்செட் அச்சுப்பணி, தொலைக்காட்சி கட்ட – பழுது நீக்க, கம்ப்யூட்டர் கட்ட – பழுது நீக்க, மின்னணு சாதனங்கள் செய்ய, சிவில் ட்ராப்ட்ஸ்மன், ரேடியோ டிவி, ஆடை தயாரித்தல், பசு பராமரித்தல், சித்தவைத்யம், ஊதுவத்தி, செவிலியர், அலுவலக நிர்வாகம் போன்ற பயிற்சிகள்) ஆகியன தந்து 54 ஆண்டுகளாக ஆதரிக்கும் குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவுதாருங்கள்.

ஆதரவற்ற பெண்களின் வாழ்வில் மகிழ்ச்சி, மலர்ச்சி, வாழ்க்கையில் பிடிப்பு ஆகியன ஏற்படுத்தித்தர உங்களுடைய, தங்கள் அன்பர்களுடைய அன்பளிப்புகளை, நன்கொடைகளைப் பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். ஆதரியுங்கள். மகிழுங்கள்.




நிறுவனர்
அமரர். சர்தார்.
வேதரத்னம்
தியாகி

## நவராத்திரி, தீபாவளி, நல்வாழ்த்துக்கள்

| | | |
|---|---|---|
| ராஜாஜி திறந்து வைத்த அணையா அடுப்பு நமது அன்னபூர்ணாலயத்தின் ஒரு நாள் உணவுச் செலவு (4 வேளைகள்) (600 பேர்) | ரூ. | 12,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு (உணவு, உடை, கல்வி) செலவு | ரூ. | 6,000/= |
| குருகுலத்தின் ஒருமாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 3,60,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு ஆகும் பராமரிப்பு செலவை வைப்பு நிதியாக வைத்து வட்டி மூலம் தொடர்ந்து ஏற்று ஆதரிப்பதற்கு | ரூ. | 60,000/= |
| சுமார் 50 பசுக்களை ஒருநாள் பராமரிக்க செலவு | ரூ. | 1,500/= |

**எவ்வளவு சிறிய தொகையானாலும் ஏற்றுக் கொள்கிறோம்.**

நன்கொடைகளுக்கு 80 G வருமான வரிவிலக்கு பெறலாம்.

முகவரி: கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் தேசிய விருது பெற்ற மகளிர் தொண்டு நிறுவனம்,
த.பெ.எண். 2. வேதாரண்யம் - 614 810. நாகப்பட்டினம் மாவட்டம்.
போன் : (04369) 50227, 50027, 50011 தந்தி : *GURUKULAM. VEDARANIAM - 614 810.*

அரசு சலுகை: உள்ளாட்சி, கதர், அரசு நிறுவனங்கள், திருக்கோயில்கள், கல்வி நிலையங்கள் விலைப்புள்ளி கோராமல் குருகுல அச்சகத்திற்கும், குருகுல எலக்ட்ரானிக்ஸ்க்கும் வேலை கொடுக்கலாம். விற்பனை வரி கிடையாது. Govt. of India FCRA No. 075960069

# கொடுத்தால் வரும்

# அஷ்ட ஐஸ்வர்யம் தரும் அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் மாதாமாதம் அமாவாசை அன்று மிகுந்த புண்ணிய க்ஷேத்ரமான காசியில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...



பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் எல்லா விருப்பங்களும் நிறைவேறவும் மங்கலம் உண்டாகவும் அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை அருள்புரிய வேண்டுகிறோம்.

இந்துக்களின் புண்ணிய பூமியில் 'ஸ்ரீ அன்னபூரணி' தாய் கோயில்கொண்ட திருத்தலமான காசியில் மாதாமாதம் அமாவாசை அன்று அன்னதானம் செய்யப்படுகிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். ஆன்மீக அன்பர்கள் அனைவராலும் காசியில் அன்னதானம் முடியும் என்ற இறைசிந்தனையோடு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" என்ற தனி அமைப்பை ஏற்படுத்தியுள்ளோம். இந்த அன்னதான திருப்பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடையை வழங்கி "இறையருளால் காசியில் ஏழைகட்கும், அடியார்களுக்கும் அன்னம் அளிப்பதில் நானும் ஓரளவேனும் பங்குகொண்டேன்" என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

- ★ தாங்கள் கொடுக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.2000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் இருபது ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடை அனுப்புவோர், திருமணநாள், பிறந்தநாள் மற்றும் திதி நாள் மேலும் தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதைத் தெரிவித்தால் அதன்படி தாங்கள் விரும்பும் மாதத்தில் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு கங்கை தீர்த்தத்துடன் கூடிய காசி செம்பும் காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் பிரசாதமாக புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு வருடமும் அமாவாசை அன்று காசியில் அன்னதானம் செய்து தொடர்ந்து பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்நிதியின் முகவரிக்கும் ஏற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத் கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000/- அனுப்பும்போது யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ.5000/- அனுப்பும் அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை மூன்று பித்ரு லோகத்தில் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்குப் பணம் அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதான சேவையில் ஈடுபடும் ஆன்மீக அன்பர்கள் நன்கொடையை Cheque / D.D / M.O மூலம் ( Sri. Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 ) என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு பணிவன்புடன் வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உண்டு.

*Cheque/D.D/M.O அனுப்ப வேண்டிய முகவரி :*

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)
68, Nadu Street, Mylapore, Chennai - 600 004.
Tel : 4959302 Fax: ( 044 ) 4616311 E- Mail:siva siva@vsnl.net

**பித்ருக்களுக்கு தர்ப்பண பூஜை செய்வது ஒவ்வொருவரின் இன்றியமையாத கடமையாகும்!**

# மூளை விஷயம்!

"மனிதர்கள், தங்கள் மூளையின் இடது பகுதியை மட்டும் அதுவும் பத்து சதவிகித அளவுக்கு மட்டுமே பயன்படுத்துகிறார்கள். ஆனால், வலது, இடது பக்க மூளையைப் பயன்படுத்தினால், ஏராளமான சாதனைகள் புரிய முடியும்" என்கிறார் டாக்டர் பரத் சந்திரா!

இந்தப் பெங்களூர்க்காரர், நம் நாடு மட்டுமின்றி, துபாய், குவைத், சிங்கப்பூரிலும் நடத்துகிற 'வின்னர்ஸ்' என்கிற சுய முன்னேற்றப் பயிற்சி வகுப்புகள் மிகப் பிரபலம். மாணவர்களுக் கென்று இவர் பிரத்யேகமாய் நடத்தும் 'பரீட்சைக்குத் தயாராவது எப்படி?' என்ற சொற்பொழிவு இதுவரை நானூறுக்கும் அதிகமான பள்ளிகள், கல்லூரிகளில் நடந்துள்ளது. இதுவரை இவரது பயிற்சி வகுப்புகளில் பங்கேற்று பயனடைந்தவர்கள் முப்பதாயிரத்துக்கும் அதிகம்.



டாக்டர் பரத் சந்திரா, மைசூர் பல்கலைக் கழகத்தில், மருத்துவம் படித்தவர். மருத்துவம் படித்தபின், தனியாய் பிராக்டீஸ் செய்ய ஆரம்பித்த இவரிடம் வந்த பலர், "பையன் சரியாய்ப் படிக்க மாட்டேன் என்கிறான்; படித்தது மறந்து போய் விடுகிறது" என்றார்கள். "இது போன்ற மாணவர்களை ஒன்று திரட்டி, 'ஞாபக சக்தியைப் பெருக்கிக் கொள்ளுவது எப்படி?' என்று ஒருநாள் பயிற்சி நடத்தினேன். அந்த வகுப்பை நடத்துவதற்கு என்னைத் தகுதி படைத்தவனாக ஆக்கிக் கொள்ளுவதற்கு நிறைய புத்தகங்கள் படித்தேன். கன்னட மீடியத்தில் பள்ளியில் படித்தவன் என்பதால், சரளமாய் ஆங்கிலத்தில் பேச முடியாத தடுமாற்றம் வேறு தடையாக இருந்தது. ஆனாலும் பயிற்சி முடிந்த பின் எனக்குக் கிடைத்த ரெஸ்பான்ஸ், என்னை மலைக்க வைத்தது. இதையே முழு நேரமாக மாற்றிக் கொண்டால் என்ன என்ற எண்ணம் தோன்ற, அதைச் செயல்படுத்தினேன். இன்று சுய முன்னேற்றம் குறித்த 'வின்னர்ஸ்' பயிற்சி வகுப்புகள் தவிர, வாழ்க்கையில் வெற்றி பெறுவது எப்படி? ஞாபக மறதியைப் போக்குவது எப்படி? உட்பட பல சுய முன்னேற்ற சப்ஜெக்ட்களில் சொற்பொழிவு கேஸட்களும், 'சக்ஸஸ் டைஜஸ்ட்' என்கிற பத்திரிகையும் சூப்பர்ஹிட்டாகி இருக்கிறது" என்ற பரத் சந்திரா 'மூளையில்தான் இருக்கிறது விஷயம்' என்கிறார்.

"டாக்டர் தொழிலைவிட்டு விட்டோமே என்ற வருத்தம் எப்போதாவது இவருக்கு ஏற்பட்டதுண்டா?" என்றால் சிரிக்கிறார்.

"ஒரு சின்ன கணக்கு சொல்லட்டுமா? நான் மனநல மருத்துவராக பிராக்டீஸ் பண்ணிக் கொண்டிருந்தேன். நம் ஜனத் தொகையில் மூன்று சதவீதம் பேருக்குரிய சேவை. மீதி தொண்ணூற்று ஏழு சதவீதம் பேர் நார்மல் ஆனவர்கள்தானே! இப்போது, அவர்களுக்காக சேவை செய்ய முடிகிறதே! அப்புறம் நான் ஏன் வருத்தப்பட வேண்டும். இதில் எனக்கு ஆத்ம திருப்தி கிடைக்கிறது அதற்கு ஈடு, இணை உண்டா? என்ற கேள்வியை வீசுகிறார்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**
படம்: **யோகா**

சங்குக்கடை ராஜுவின் வீடு புதுரோடு ராமகிருஷ்ணாபுரத்தில் இருந்தது. படுப்பதற்கு எப்படியும் அவன் வீடு செல்பவனாகத்தான் இருக்க வேண்டும். ஆனால், உலகம் விழித்திருக்கும் சமயத்திலெல்லாம் அவன் அக்னி தீர்த்தத்தருகே மட்டுமே காணக்கிடைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தான்.

எட்டடிக்கு ஆறடி மண்சுவர் எழுப்பிய அவனது கடையின் முகப்பில் சிறியதொரு ஓலைச்சரிவு போடப்பட்டிருக்கும். பிளாஸ்டிக் ஸ்டூல்களின்மேல் விரிந்து கலைந்து கிடக்கும் தினசரிகளில் அவன் வாழ்ந்து கொண்டிருந்தான். சங்கு விற்றதாலோ, சங்கம் வளர்த்ததாலோ, அவனாலும் எப்படியோ ஒரு புல்லட் வாங்க முடிந்திருக்கிறது. எதிர்பாராததொரு தினத்தில் சங்கரமடத்தின் பின்புறம் ஒரு குழிதோண்டி, கம்பம் நட்டுக் கட்சிக் கொடி ஏற்றி வைத்து, திடீரென்று பிரமுகராகிப் போனான்.

வெள்ளாவி வெளுத்த கட்சிக் கரை வேட்டி. சங்கத் தலைமையெனும் நெற்றிப் பட்டம். தவிரவும் அந்த புல்லட். கோயிலுக்கு நேர்ந்துவிட்ட கருங்காளை மாதிரி.

ஊரெல்லையில் சேதுபதி நெடுஞ்சாலையோரம் லைட் ஹவுஸைப் பார்த்து இருந்த லாட்ஜ் ஒன்றும் அவனுடையதுதான் என்று பரவலாகப் பேசிக் கொண்டார்கள். சங்கு விற்று லாட்ஜ் கட்ட முடியுமா என்ற சூட்சுமமான கேள்விக்கு யாரும் பதில் அறிந்திராததால் பொதுவில் யாரும் அதை அதிகம் பிரஸ்தாபிக்கவில்லை.

அப்புசாமி மட்டும் இணக்கமான தருணங்களில் ராஜுவிடம் சாங்கோபாங்கமாகப் பேச்சுக் கொடுப்பார்– "உனக்கென்னய்யா? மன்மதன் கணக்கா வளைய வரே?"

"கிண்டலடிக்காத அய்ரே. நானும் நெருக்கிப்பிடிச்சியொரு லாஞ்சி வாங்கிடணும்னுதான் பாக்கேன். வரும்படி சோத்துக்குக் காண மாட்டேங்கே?" என்பான் சலித்துக் கொண்டபடி.

"லாஞ்ச் என்ன, ஒரு எம்பது, தொண்ணூறாயிரம் ஆகுமா?"

"எம்பது தொண்ணூறா? ஆட்டோ கூட வராது. லேலண்டு சரக்குன்னா சுமாரான கட்டுமானமே நாலு ரூவா ஆவும். மரத்துக்கேத்த ரேட்டு. நம்ம சராங் முதலியாரு வாங்கி ஓட்டுறாரு பாரும் ஒரு லாஞ்சி. பதிமூணு ரூபா சொன்னை."

"ஏ யப்பா!" என்றார் அப்புசாமி.

இவனிடம் பதினைந்து லட்சமாவது இல்லாமலிருக்க முடியாது என்று அப்புசாமி நினைத்தார். மனிதர்களைச் சந்திக்குந்தோறும் அவர்தம் பொருளாதார இருப்பு குறித்த சிந்தனை எழுவதைத் தம்மால் ஏன் தவிர்க்க முடியவில்லை என்று அவர் யோசித்தார்.

சோற்றுக்கு இல்லாமல் ஒரு நாளும் திண்டாடியதில்லை என்ற போதிலும் தன் சம்பாத்தியம் மட்டும் ஏன் நிற்பதே

# அலை உறங்கும் கடல்



# 9

இல்லை என்பது அவருக்குப் புதிராக இருந்தது. கணேஷ் சாஸ்திரிகள் திட்டக் குடியில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறார். விசுவநாதன், மகனுக்கு பைக் வாங்கிக் கொடுத்திருக்கிறார், சென்ற வாரம். நீலகண்டன் ஒரு டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட் ஆரம்பிக்கலாமா என்று யோசித்துக் கொண்டிருப்பதாகப்



பேச்சு வாக்கில் சொன்னபோது உடம்பெங்கும் தீப்பற்றிக் கொண்டாற் போலிருந்தது அப்புசாமிக்கு.

மறுநாள் அதிகாலை அக்னிதீர்த்தக் கரைக்கு வரும்போது கிழக்கு கோபுர வாசலில் நின்று "துரோகி ராமநாதா! நான் மட்டும் என்ன பாவம் செஞ்சேன்? ஏன் என்கிட்ட மட்டும் காசு தங்கவிடாம அடிக்கறே? பிரமாதமான வருமானம்னு வரவும் விடறதில்லே! வரவன், நம்பி புரோகிதம் பண்ணிக்கலாம்னு உட்கார்ற மாதிரி என் மூஞ்சிக்கு ஏன் லட்சணம் குடுக்காம பண்ணிட்டே?" என்று மானசீகமாகக் கதறித் தீர்த்தார். நூறு, இருநூறுகளும் வாழைக்காய், அரிசியும் தான் தனக்கு சாச்வதமாகி விட்டதோ என்று கலங்கினார்.

ராஜுதான் சொல்லிக் கொண்டிருப்பான்: "நீ சும்மா புலம்பிட்டே இருக்காத அய்ரே! காசு வருது, நிறைய வருதுன்னு கனவு கண்டுட்டே இரும். அதும்பாட்டுக்குத் தன்னால வருதா இல்லியா பாரும்."

சொல்வதற்கில்லை. ராஜுவின் கனவேதான் லைட் ஹவுஸின் எதிர்ப்புற லாட்ஜாக எழுந்திருக்கக் கூடும்.

**அ**ன்று காலை ராஜு கடை திறக்க வரும்போதே மணி எட்டாகிவிட்டிருந்தது. வந்தவன் கடையைத் திறக்காமல், பைக்கையும் நிறுத்தாமல் 'உரும் உரும்' என அதன் வலது கைப்பிடியைத் திருகிச் சப்தமெழுப்பியபடியே யாரையோ தேடிக் கொண்டிருந்தது போல் பட்டது அப்புசாமிக்கு.

கரையின் மூன்றாம்படிக்கட்டில் குடை பிடித்தபடி அமர்ந்திருந்தவர், தலையைத் தூக்கி நிமிர்த்தி, "என்ன, ராஜு?" என்று உரக்கக் கேட்டார்.

ஒன்றுமில்லை என்பதாக பாவனை மூலம் அவன் தெரிவித்த விதமே ஏதோ இருப்பதாகச் சொன்னது அப்புசாமிக்கு. வாடிக்கையாளர்கள் யாருமில்லாமல் எத்தனை நேரந்தான் வெறுமனே மணலைக் களைந்து கொண்டிருக்க முடியும்?

சட்டென்று எழுந்து படியேறி சாலையைத் தொட்டார் அப்புசாமி.

''ஒண்ணுமில்ல சாமி. மறுபடியும் தீவுத்திட்டண்ட ஆளுங்க வர ஆரம்பிச்சிருக்காவ" என்று ராஜு அவரிடம் சொன்னான்.

"எப்போ?" என்றார் அப்புசாமி.

"நேத்து நைட்டு ஒரு போட்டு நாலாந்திட்டுக்கு வந்து இறக்கிவிட்டுப் போயிருக்கு. விடிகாலம் மூணு மணிக்குக் கதவைத் தட்டி என் சகலை வந்து சொல்லிதான், இன்னது சமாசாரமுன்னு. தனுஷ்கோடி 'ஸ்டேஷ னுக்கு சொல்லிட்டு நேரா வரேன். இந்த மக்காணிப்பய வந்தானா பார்த்தீகளா?'

"இல்லியே!" என்றார் அப்புசாமி.

"நேத்தி கடைச் சாவியை அவன்தான் எடுத்துப் போனான். விடிஞ்ச கருக்குல வாடான்னேன். களுத எங்க மேயப் போச்சோ..." என்றபடி வண்டியைக் கிளப்பினான்.

அப்புசாமி, கரையைத் திரும்பிப் பார்த்தார்.

''என்னவாம்?'' என்று மந்திரத்தினிடையே நீலகண்ட சாஸ்திரி ஆர்வமாகக் கேட்கவும், "வேறென்ன? சிலோன் போட்டு வர ஆரம்பிச்சாச்சு. இந்த விசெ அங்க சண்டை ரொம்ப சூடு பிடிச்சிருக்கறதா பேப்பர்காரனுங்கதான் ரெண்டு வாரமா எழுதித் தீக்கறானே, இன்னும் அகதிகளைக் காணுமேன்னு நினைச்சுண்டே இருந்தேன்" என்று அப்புசாமி சொன்னார்.

**ப**கல் பதினொன்றரை மணி வாக்கில் அவர் கடையைக் கட்டிக் கொண்டு கிளம்பி கிழக்கு வீதி முனையில் திரும்பும்போது ராஜு வேறு சிலருடன் ஒரு ஜீப்பில் எதிரே வரக் கண்டார்.

ஜீப்பின் முகப்பில் சிறியதொரு கட்சிக் கொடியும் பறக்கக் கண்ட அப்புசாமி, அவனை நிறுத்தி விசாரிக்கலாம் என்கிற எண்ணத்தை அடக்கிக் கொண்டார்.

ஆனால் நெருங்கிக் கடக்கும் விநாடியில் வண்டி தானாகவே வேகம் குறைய, ஜீப்பின் முன்புறம் அமர்ந்திருந்த ராஜு, தலையை வெளியே நீட்டி அவருக்குக் கை காட்டினான்.

"நாலாந்திட்டுல வந்து இறங்கியிருக்கிற வங்களுக்குச் சாப்பாடும் மருந்தும் கொண்டு போறோம் சாமி. வரிங்களா நீங்களும்?"

"நானா!" என்று அதிர்ந்தவர், "அதெல்லாம் உன்னை மாதிரி இளவட்டப்பசங்க பண்ணக் கூடிய காரியம். நான் எதுக்கு? கிண்டல் பண்ணறியா?" என்று அப்புசாமி கேட்டார்.

''இன்டர்நெட்டைப் பற்றி யாராவது நம்ம தலைவருக்கு எடுத்துச் சொன்னா தேவலை."

''ஏன்?''

''வீட்ல ஒரே கொசுத்தொல்லை; ஒரு இன்டர்நெட் வாங்கிட்டு வான்னு தொல்லை பண்றாரு."

– டேவிட் ராஜசீலன்



சட்டென்று ஜீப்பிலிருந்து இறங்கியவன், அவர் காதோரம் வந்து "ஒரு நாளைக்கு எத்தனை சங்கல்பம் போடுவீரு?" என்று கேட்டான்.

அவருக்குச் சங்கடமாக இருந்தது. வீதியில் பலர் தம்மை கவனிப்பது போலிருந்தது, மேலும் அவரைச் சிரமப்படுத்தியது. ராஜு நீண்டநாள் பழக்கமுள்ளவன்தான். ஆனால் தன் கட்சி அடையாளத்துடன் அவன் ஒரு செயலுக்குப் போகிற வேளையில் பக்கத்திலிருந்து பேசுவது தனக்கேதேனும் பாதிப்பு ஏற்படுத்துமோ என்று அவர் குழம்பினார்.

"சொல்லுங்க அய்ரே! ஒரு நாளைக்கு எத்தனை சங்கல்பம் போடுவீரு?"

"இதென்ன கணக்கா?" என்றார் இலேசான எரிச்சலுடன்.

"கணக்குதான். ஒரு நாள்ல மொத்தமா இருநூறு தேறுமா உமக்கு? இன்னிக்கு ஒரு நாள் என் கூட வாரும். சுளையா ஆயிரம் பார்க்கலாம்" என்றான் இரகசியமாக.

அதிர்ந்தவர், "என்ன சொல்றே? நீ என்னமோ உபகாரம் பண்ணப் போறேன்னா சொன்னே?"

ஜீப் ஒரு முறை ஹாரன் அடித்தது.

"இருடா, பேசிட்டிருக்கேனில்லே?" என்று திரும்பி இரைந்தவன், "உபகாரந்தான். எடுக்கவோ கோக்கவோன்னு எதிலோ சொல்லுவாங்களே, அதுமாதிரி இது கொடுக்கவோ, எடுக்கவோ" என்று கண் சிமிட்டினான்.

"வரீர்னா சொல்லும். எனக்கு டைமாச்சு" என்றான் மேலும் குறும்புடன் சிரித்தபடி.

"சேச்சே!" என்ற அப்புசாமி, சட்டென்று இறங்கி வந்து தானும் ரகசியமாக, "கெட்ட காரியம் வேணாம் கேட்டியா? இதெல்லாம் பெரிய இடத்து விவகாரம்."

"நாம எப்பதான் அய்ரே பெரிய இடமாறது பின்ன?"

"ராட்சஸா!" என்று செல்லமாகக் கோபித்தவர், "என்னை இழுக்காதே. இனிமே நீ யாருன்னே எனக்குத் தெரியாது!" என்று சிரித்துக் கொண்டே-ஆனால் சற்றே திகிலுடன்- சொன்னவர், "ஆமா, நீ எப்படி இதுல சம்பாதிப்பே?" என்றும் கேட்டார்.

"எதுவும் சொல்ல முடியாது. வந்து வேடிக்கை பார்க்கறதுன்னா வாரும். போட் ஏறுவீரில்லே?"

"பழக்கமில்லே" என்றார்.

"அதுக்கென்ன பெரிய பழக்கம் வேண்டியதா? குண்டுக்கட்டா நானே தூக்கிப் போட்டுடுதேன். வரீரா திட்டுக்கு?"

"எங்க?"

"அதாஞ் சொன்னனே, நாலாந்திட்டு? அங்க."

"அங்க எதுக்கு?"

"அகதிகளுக்கு உணவு, உடை, மருந்து தரப்போறோம்."

"கலெக்டர் வருவாரே."

"கலெக்டர் ராம்நாட்ல இல்லே. மெட்ராஸ் போயிருக்காவ. வந்து ஆர்டர் போடற மட்டும் மக்க பட்டினி கெடந்து சாவாகளா?"

"அதனால?"

"தோணி ஏறிப்போய் உதவப் போறம். வந்தீர்னா உமக்கும் உண்டு- உதவி.

கடைசிச் சொல்லைச் சற்றே அழுத்திச் சொன்னவன், "இதையெல்லாம் பெரிசா சொல்லிட்டிருக்க முடியுமா சாமி? பாவம் கஷ்டப்படுதிங்களேன்னு சொன்னேன். விசயந்தெரிஞ்சா கட்சிக்காரவனே ஒப்புத்துக்க மாட்டாவ."

"வேற ஆளப்பாரு" என்றுவிட்டு விறுவிறுவென வீட்டைப் பார்த்து நடக்க ஆரம்பித்தார் அப்புசாமி. லைட் ஹவுஸின் எதிர்ப்புற லாட்ஜ் நிச்சயம் ராஜுவுடையதாகவே இருக்கும் என்று அவருக்கு இப்போது உறுதியாகத் தோன்றியது.

**வீ**ட்டு வாசலில் நீலுப்பாட்டி கறிகாய் வண்டிக்காரனிடம் சண்டை போட்டுக் கொண்டிருந்தாள்.

"நீ விக்கறது வெண்டைக்காயா? வெள்ளாட்டுக் குட்டியா?'

அப்புசாமியைப் பார்த்ததும் சட்டென்று பேரத்தை நிறுத்திக் கொண்டு, "சரியா நிறுத்துப் போடு. கெழவிதானேன்னு ஏமாத்தப் பார்க்காதே" என்றாள்.

"ஆத்தா, உம்பாடு பெரும் பாடு. அய்ரு எப்படித்தான் சமாளிக்கிறாவளோ" என்றபடி அவன் காயை நிறுத்து நீலுவின் புடைவை மடிப்பில் போட, "காசை

நாளைக்குச் சேர்த்து வாங்கிக்கோ, போ" என்றுவிட்டுத் திரும்பி வீட்டுக்குள் போய் விட்டாள்.

உள்ளே நுழைந்த அப்புசாமி, "ரேடியோவைப் போடு?" என்று உமாவிடம் சொன்னார்.

அவள் வினாவுடன் அவரை ஏறிட, "நாலாந்திட்டுல போட் வர ஆரம்பிச்சாச்சாம். ரேஷன்ல இனிமே கிருஷ்ணாயில் போட மாட்டான்" என்றார்.

உமா டிரான்சிஸ்டரை எடுத்து வந்து அவர் கையில் தந்துவிட்டு வாசலுக்கு வந்தாள்.

அருள்தாஸ் பிடிபட்டதாகத் தெரிந்ததிலிருந்து இலங்கையில் நடைபெறும் போர் அவளை மிகவும் கவலைக்குள்ளாக்கிக் கொண்டிருந்தது. இரண்டுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என்று தனக்குத் தானே சமாதானம் செய்து கொள்ளப் பார்த்தாலும், அவன் விடுவிக்கப்படுவதோ, தப்பி வருவதோ இந்தச் சமயத்தில் இயலாத காரியம் என்பதான சிந்தனை இடைவிடாமல் அவளை உறுத்திக் கொண்டிருந்தது.



"கண் பார்வை இல்லாத இந்த செவிடனுக்கு ஏதாவது தர்மம் பண்ணுங்க எசமான்."

"கண் தெரியாதவன் குருடன் தானே... நீ என்ன செவிடன்னு சொல்றே?"

'ஞாபக மறதி வேற ஒரு பெரிய பிரச்னையா இருக்கு சாமி...!"

– சீர்காழி வி. ரேவதி

கண்ணுக்குத் தெரியாமல் ஓடி மறைந்த பன்னிரண்டு தினங்களைக் கவலை தின்று விட்டது. ஒரு தகவலுமில்லாமல் அவன் முகத்தை நினைவில் திரையிட்டுக் கண்ட போதெல்லாம் கலங்கி அழுவது தவிர வேறேதும் செய்ய முடிவதில்லை, இதுகாறும். நடவடிக்கை எடுத்துக் கொண்டிருப்பதாக நேவி ஆபீசில் சொல்கிறார்கள் என்று அவ்வப்போது அற்புதமேரிதான் தகவல் தந்து கொண்டிருந்தாள்.

நடவடிக்கை என்பது தான் என்ன? ஒரு மலையைப் புரட்டிப்போட்டுப் பாலமாகப் படுக்க வைத்து அவனை அங்கிருந்து நடந்து வரவழைப்பதா?

முற்பிறவியொன்றில் சேது எழுப்பக் கல் கட்டிக் காட்டியதாகச் சொல்லிக் கதை விடும் நீலுப் பாட்டி இப்போது ஏன் ஆருடமேதும் சொல்லாதிருக்கிறாள்? அவளது கனவுகளும் தீர்ந்து விட்டனவா?

ஒரு பற்றுக் கோல். ஒரேயொரு சொல்லில் கூட அதனை நிறுவிவிட இயலும். அருள்தாஸ் நலமாக இருக்கிறான். இந்த ஒரு தகவல் போதும். ஆனால் கடவுளே, என் தவிப்பு ஏன் முடிவற்ற பெருஞ்சுமையாக நீண்டு கொண்டே போகிறது?

மதிய உணவை முடித்து மீண்டும் அவள் வாசலுக்கு வந்து அமர்ந்து கொண்டாள். எந்தவிநாடியும் பாங்குர் தருமசாலை முனையிலிருந்து அருள்தாஸின் முகம் தென்படக் கூடுமென்ற நம்பிக்கையற்ற நம்பிக்கை, அவளை அந்தப் பக்கமே பார்த்துக் கொண்டிருக்கச் செய்தது.

மாடுகள் கடந்து சென்றன. இரண்டு குதிரை வண்டிகள் ஓடிப்போயின. பள்ளிப் பிள்ளைகள் நீலப் பூக்களாக வீடு திரும்பினார்கள்- பால் வண்டி வந்தது. வெப்பம் அபரிமிதமாக இருந்தது. திடீரெனக் குளிர்க் காற்று வீசி, வானம் இளகியது. மீண்டும் சூரியன் தென்பட்டது.

மாலை ஐந்துமணி அளவில் மேற்கு வீதிப் பக்கமிருந்தொரு இரைச்சல் கேட்டது.

வேறெதோ நோக்கமுடன் பரபரப்பாக வாசலுக்கு வந்த அப்புசாமியும் சட்டென்று நின்றார்.

"வரது யாரு? ராஜுவா? கார்த்தால பார்த்தேன். திட்டுக்குப் போறேன்னா சொன்னான்? வந்துட்டானோ என்னமோ" என்று தனக்குத் தானே கேள்வியும் பதிலுமாகச் சொல்லிக் கொண்டார்.

அந்தப் பக்கமாக விரைந்த ராஜுவின் ஜீப் இம்முறை அப்புசாமிக்காக நிற்கவில்லை. ஆனால் ஜீப்பை கவனித்த உமாவுக்குத் திடுக்கிட்டது. வேகப் பாய்ச்சலுக்கு நடுவே தான் காண முடிந்ததெனினும், ஏழெட்டு பேர் இருந்த அவ்வண்டியில் நடுவே உட்கார்ந்திருந்தது அருள்தாஸ் மாதிரி தெரிந்தது.

(தொடரும்)



# பரிதாபத்தில் சினிமா தொழிலாளர்கள்

பாலசந்தர் அவர்களே! நீதி வழங்குங்கள்; பாரதிராஜா அவர்களே! நியாயம் வழங்குங்கள்!

– வள்ளுவர் கோட்டம் அருகே இப்படியொரு கோரிக்கையுடன் ஒரு உண்ணாவிரதப் போராட்டம் நடந்தது. தமிழ் சினிமா உலகில் பெப்சி, படைப்பாளிகள் பிரச்னை ஏற்பட்டபோது, படைப்பாளிகள் பின்னால் நின்ற சுமார் ஆயிரம் தொழிலாளர்கள்தான் இந்தப் போராட்டத்தை நடத்திக் கொண்டிருந்தவர்கள்.

"படைப்பாளிகள் தனிச் சம்மேளனம் கண்டபோது, நாங்கள் அவர்கள் பின்னால் திரண்டோம். அதனால் நாங்கள் அனைவரும் சந்தித்தப் பிரச்னைகள் பல. 98ம் வருடம் ஜூலை நாலாம் தேதி, பெப்சி - படைப்பாளிகள் இரு தரப்பினரும் தமிழக முதல்வர் முன்னிலையில் இணைப்பு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

"இணைப்பு விதிகளின்படி, பாலசந்தர், பாரதிராஜாவின் அறிவுரைக்கேற்ப, படைப்பாளிகளின் சங்கங்கள் கலைக்கப்பட்டு விட்டன. இனி எல்லோரும் பெப்சி உறுப்பினர்கள்தான் என்ற சூழ்நிலை உருவானது. பிரச்னை முடிவுக்கு வந்து விட்டதாக திரையுலகமே சந்தோஷப்பட்டது. ஆனால், அதுதான் எங்கள் பிரச்னையின் ஆரம்பம்" என்றார்கள் தொழிலாளிகள்.

"படைப்பாளிகளின் தரப்பைச் சேர்ந்த பல்வேறு சங்கங்களின் உறுப்பினர்கள், பெப்சி உறுப்பினராவது அவ்வளவு சுலபமாக இல்லை. வருடாந்திர சந்தாவாக நூற்று ஐம்பது ரூபாயை எல்லாரும் கட்டி விட்டார்கள். ஆனால், ஒவ்வொரு சங்கமும் நிர்ணயித்துள்ள, உறுப்பினர்கள் நுழைவு நன்கொடைப் பணம் செலுத்த முடியவில்லை. டான்ஸர்கள் சங்கம் என்றால் ஐம்பதாயிரம், லைட்மேன்கள், மேக் அப் கலைஞர்கள் சங்கம் என்றால் முப்பதாயிரம் என்று பெருந்தொகை கேட்கிறார்கள். பெப்சியின் பழைய உறுப்பினர்கள் 'ஏ' பிரிவினராகவும், படைப்பாளிகள் சங்கங்களிலிருந்து வந்த நாங்கள் 'பி' பிரிவினராகவும் தனிமைப்படுத்தப் பட்டோம். நன்கொடைத் தொகை கட்டும் அளவுக்கு வருமானம் இல்லாததால், தவணைகளில் செலுத்தலாம் என்று கூறப்பட்டது. தவிர, பெப்சி மூலம் எங்களுக்குக் கிடைத்த வேலைக்குரிய பணத்தை எங்களுக்கு வழங்கிய போது, பெப்சி நிர்வாகிகள் நன்கொடை பாக்கிக்காக ஒரு பகுதியைப் பிடித்துக்கொண்டனர். அதையும் நாங்கள் ஆட்சேபிக்கவில்லை.

"இதற்கிடையில், நன்கொடைப் பணத்தைக் கட்டி விடுவதுதான் வேலைக்கு உத்தரவாதம் என்று நினைத்து, கடன் வாங்கி பெப்சியில் பணத்தைக் கட்டி விட்டு, வட்டி கட்டவே திணறும் தொழிலாளர்களின் பரிதாப நிலையும் ஏற்பட்டுள்ளது.

"இந்தச் சூழ்நிலையில் செப்டெம்பர் மாதம் நாலாம் தேதி வரை கெடு கொடுத்து, முழு நன்கொடையையும் கட்டிவிட பெப்சி வற்புறுத்தியது. அப்படி கட்டாதவர்களை, 'இனி பெப்சி மெம்பர் இல்லை என்று அறிவித்து விட்டது" என்று பரிதாபமாய்ச் சொல்கிறார்கள் இன்று நடுத்தெருவில் நிற்கும் இந்தத் தொழிலாளர்கள்.

"பெப்சி - படைப்பாளி ஒப்பந்த விதிகள் முழுமையாய் நிறைவேற்றப்படவில்லை என்பது வேதனை தரும் உண்மைதான். ஆனால் இன்று பெப்சி தலைவராக பாலசந்தர், டைரக்டர்கள் சங்கத் தலைவராக பாரதிராஜா, தயாரிப்பாளர் சங்கத் தலைவராக ராவுத்தர், நடிகர் சங்கத் தலைவராக விஜயகாந்த் என்று ஒரு இணக்கமான சூழ்நிலை உள்ளது. பெரியவர்கள் எல்லாம் கூடி உட்கார்ந்து பேசினால் பிரச்னையைச் சுலபமாகத் தீர்த்து விடலாம்" என்கிறார் உண்ணாவிரதத்தினருக்கு ஆதரவாக ஆறுதல் கூற வந்திருந்த டைரக்டர்கள் சங்கத்தைச் சேர்ந்த சண்முகசுந்தரம்.

— மானஸா

படம்: யோகா



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

குருபலம் ஏகத்துக்குக் கூடி இருக்கறதால செல்வாக்கு ஜில்லுனு ஏறும். வீட்ல சந்தோஷ மழை பெய்யும். விருந்து,சுற்றல்னு ஜாலியா அனுபவிக்கப் போறீங்க. இதுக்காக பர்ஸ் கொஞ்சம் எகிறும். வெளிநாட்டுலயிருந்து முகம் மலர்ற மாதிரி தகவல் வரும். எழுத்தாளர்கள், பத்திரிகைகாரங்களுக்கெல்லாம் முன்னேற்றம் தான். பெண்களுக்கு சின்ன சின்ன பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. பக்குவமா அதை சமாளிச்சுடுவீங்க. கொடுக்கல் வாங்கல் விஷயத்துல கண்ணுல எண்ணெய் ஊத்திட்டு இருங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

அலைச்சலும் உழைப்பும் இந்த வாரம் ஜாஸ்தியா இருக்கும். எந்த வேலையையும் நிறைவேத்தறதுக்குக் கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கும். எதிலயும் அவசரம் வேண்டாம். நிதானத்தைக் கடைபிடிங்க. சாப்பாட்டு விஷயத்துல கறாரா இருங்க. இல்லைனா வயிறு சம்பந்தமான பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. வெளியூர் பயணத்துக்கு இப்ப தடையுத்தரவு போட்டுருங்க. கலைததுறையைச் சேர்ந்தவங்களுக்கு அளவான முன்னேற்றம் உண்டு. சொந்தக்காரங்க, நண்பர்கள் எல்லாம் உதவ முன் வருவாங்க. கொடுக்கல் வாங்கல்ல ஜாக்கிரதையா இருங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்களோட புகழ் செல்வாக்கு எதுக்கும் பிரச்னை இல்லை. புதுசா ட்ரெஸ், நகைகள் வாங்குவீங்க. இதுவரை அமுங்கி இருந்த உங்களோடத் திறமை திடீர்னு வெளிப்படும். நீங்களே உங்களைக் கிள்ளிப் பாத்துப்பீங்க. எதிர்ப்புகள் எதுவும் இருக்காது. வழக்கு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமா இருப்பம் வரலாம். அறிமுகமில்லாதவங்ககிட்ட எச்சரிக்கையாக பழகுங்க. எப்போதும் முகத்தை உம்முனு வச்சிருக்காதீங்க. சிரிச்சுப் பேசறது நல்லது. சுப காரியச் செலவு அதிகரிக்கும். பர்ஸைப் பத்திரப்படுத்திக்குங்க...



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

குருபலம் கூடி இருப்பதால உங்களுக்கு எந்தப் பிரச்னையும் வராது. பொருளாதாரம் திருப்தியா இருக்கும். அதுக்காக ஜாலியா செலவழிக்காதீங்க. அலுவலகப் பணியாளர்களுக்கு நினைச்ச மாதிரியே பதவி உயர்வு, டிரான்ஸ்பர் கிடைக்கற வாய்ப்பிருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு நெஞ்சைத் தொடற மாதிரி நிகழ்ச்சிகள் நடக்கும். ஆடை, நகைகள், சென்ட் சமாச்சாரங்கள் உங்களைத் தேடி வரலாம். பேச்சுல நிதானம் அவசியம். பயணத்துல எச்சரிக்கையா இருங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



உங்க முக அழகு திடீர்னு கூடும். அடிக்கடி கண்ணாடி பார்ப்பீங்க. பொருளாதாரப் பிரச்னை இருக்காது. பணம் பல இடத்துலயிருந்து வரும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் இருக்கு. கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் மாலை தேடி வரும். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். கணவனால் மனைவிக்கும், மனைவியால் கணவனுக்கும் முன்னேற்ற வாய்ப்புகள் வரலாம். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து சேரும். மனசுல ஏதோ சின்ன சலனம் குழப்பம் வந்து இம்சிக்கும். அதிகமா உணர்ச்சி வசப்படாதீங்க.

# நடக்குமென்பார்,



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்க மதிப்பு வானத்துக்கு உயரப் போகுது. உடல் நலம் சிரா இருக்கும். குடும்பத்துல நல்ல காரியங்கள் நடக்கும். வியாபாரிகள் நல்ல லாபத்தைச் சம்பாதிப்பாங்க. இதுவரை வேலை இல்லாம இருந்தவங்களுக்கு வேலை வாய்ப்பு கதவை தட்டும். சிலருக்கு பதவி உயர்வு, டிரான்ஸ்பர் போன்றவை வரலாம். சினிமா, நாட்டியத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய ஒப்பந்தங்கள் வரும். பொருளாதாரம் தாராளமா

இருக்கும். வெளிநாட்டிலருந்து உங்களை மகிழ்ச்சிக்குள்ளாக்குகிற மாதிரி நல்ல தகவல் வரும். வீட்ல சின்னச் சின்னப் பிரச்னைகள் தலை தூக்கலாம். அடக்கி வாசிச்சா இதுலயிருந்து தப்பிக்க வழியிருக்கு.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

எந்தக் காரியத்தை எடுத்தாலும் இந்த வாரம் உங்களுக்கு வெற்றிதான். எதிர்ப்புகள் இருக்காது. காவல், ராணுவம், சட்டத் துறைகளைச் சேர்ந்தவங்க ஏதாவது சாதனை படைச்சு பெருமையடைவீங்க. பாராட்டு புகழ் கொடி கட்டிப் பறக்கும். புதுசா பொருட்கள் வாங்க வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு சந்தோஷமான சூழ்நிலை ஏற்படும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வாய்ப்புகள் குவியும். பண விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. சின்னச் சின்னப் பிரச்னைகள் தலை நீட்டும். பக்குவமா சமாளியுங்க.

**மிதுன ராசிக்காரரான ஏ.சி. சண்முகத்துக்கு செல்வாக்கு கிடுகிடுனு ஏறுமாம்!**



**விருச்சிகம்:** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

**நடக்கும்!**

உங்க வீட்டைத் தேடி நல்ல செய்திகள் வர இருக்கு. வேலை இல்லாம இருந்தவங்களுக்கு வேலை வாய்ப்பு இப்ப கிடைக்கலாம். வேலை பாக்கறவங்களுக்கு பதவி உயர்வு வரலாம். பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பல இடங்கள்ல இருந்து வரும். அரசியல்வாதிகளுக்குப் பாராட்டு விழா மேடை ரெடியாயிருக்கும். எல்லார்ட்டயும் சுமுகமா பேசி பழகறது நல்லது. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி ஒண்ணு வரும்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க திறமை, அறிவாற்றல் எல்லாம் இந்த வாரம் வெளிப்படும். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கெல்லாம் தங்களோட நோக்கம் நிறைவேறும். புதிய பதவி, பட்டங்கள் தேடி வரும். சிலருக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும். மதிப்பு, அந்தஸ்து உயரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இந்த வாரம் பணம் வரும் காலம். பெண்களுக்குச் சாதகமான பல விஷயங்கள் நடக்கும். ட்ரெஸ், நகைகள் வாங்கலாம். பொருளாதாரம், ரியல் எஸ்டேட் விவகாரங்கள்ல கவனமா இருங்க.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க திறமை புத்திசாலித்தனம் வெளிப்படும். மனசுக்கு சுகமான சம்பவங்கள் நடக்கும். பண நடமாட்டம் திருப்தியா இருக்கும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் இருக்கு. எதிர்ப்புகள் மறையும். வெளிநாட்டுல இருந்து நல்ல சேதி வரும். எதிர்பார்க்காத நல்ல சம்பவங்கள் உங்கள் வாழ்க்கையில் நடக்கலாம். மத போதகர்கள், சட்ட வல்லுனர்களுக்கெல்லாம் நல்ல வாய்ப்பு இருக்கு. எதிலயும் அவசரம், பதற்றம் வேண்டாம். வீண் சண்டை சச்சரவுகளைத் தவிர்த்திடறது நல்லது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க பேச்சுல வசீகரம் இருக்கும். திடீர்னு அழகா தெரிவீங்க. அடிக்கடி கண்ணாடிப் பார்ப்பீங்க. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு மகிழ்ச்சியான சம்பவங்கள் நிகழும். பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் எல்லாம் மத்தவங்க பாராட்டைப் பெறுவாங்க. எதையும் ஒரு முறைக்குப் பலமுறை யோசிச்சு செயல்படறது நல்லது. பயணத்துல எச்சரிக்கையா இருங்க. உடல் நலன்ல கவனம் வையுங்க. உஷ்ண சம்பந்தமான நோய்கள் வரலாம். எச்சரிக்கை.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

எடுத்தக் காரியத்தை எப்படியும் முடிச்சிடுவீங்க. கோர்ட் - வழக்கு விவகாரங்கள்ல சாதகமான திருப்பம் வரலாம். சட்டம், காவல், ராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு, புகழ் கிடைக்கும். அலைச்சல் கொஞ்சம் அதிகமா இருக்கும். முதலீடு செய்ய இருக்கறவங்க புதிய துறைகள்ல இப்ப முதலீடு செய்ய வேண்டாம். கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம். அரசியல்வாதிகளுக்குப் புகழ் பாராட்டு இருக்கு.



நம் மனத்தில் ஏற்படும் உணர்ச்சிகளை வெளிப்படுத்த 'feel' என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம்.

உதாரணமாக எனக்குப் பசிக்கிறது, தாகமாக இருக்கிறது, கூச்சமாக இருக்கிறது என்றெல்லாம் சொல்கிறோம்.

இவை நம்மால் உணரப்படும் விஷயங்களாகும்.

எனக்குப் பசிக்கிறது என்பதை I am hungry என்று சொல்லலாம். ஆனால் இதை விட 'I feel hungry' என்று சொல்வது மிகப் பொருத்தமாக இருக்கும்.

இதே போல எனக்குத் தாகமாக இருக்கிறது என்று சொல்ல வேண்டுமென்றால், தாகம் என்பது நம்மால் உணரப்படும் நிலை, எனவே இதை I feel thirsty என்று சொல்லலாம். 'Shy' என்றால் 'கூச்சமாக' என்று அர்த்தம். I feel shy என்றால் எனக்குக் கூச்சமாக இருக்கிறது என்று பொருள்.

இந்த 'கூச்சம்' என்பதை நாம் வெட்கம் என்றும் சொல்வதுண்டு.

ஐயோ, இந்த விஷயத்தை அவங்ககிட்ட போய் சொல்றதுக்கு எனக்கு என்னவோ ஒரு மாதிரியா இருக்கு. அதாவது கூச்சமா இருக்கு என்பதை 'I feel shy' என்றுதான் சொல்ல வேண்டும்.

'ஏண்டா நீ படிச்சவன்தானே' அவங்க இங்கிலீஷ்ல கேட்கற கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாம தலையைக் குனிஞ்சுக்கிட்டு நிக்கிறயே. உனக்கு வெட்கமா இல்லை?' என்று ஒருவரை அதாவது உங்களது சகோதரனைக் கண்டிக்கும்போது 'shy' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'ashamed' என்பதைப் பயன்படுத்த வேண்டும்.

Are you not ashamed? என்றால் உனக்கு வெட்கமாக இல்

# ஆங்கிலமே அருகில் வா

வி. ராஜகோபாலன்




லையா என்று அர்த்தம்.

இதைச் சொல்வதற்கு உனக்கு வெட்க மாக இல்லை? என்பதை Are you not ashamed of saying this? என்று கேளுங்கள். இதைப் போல பேச உனக்கு வெட்கமாக இல்லை? என்று அர்த்தம்.

ஒரு செயலைச் செய்வதற்கு அல்லது செய்ததற்காக வெட்கப் படுவதைத் தெரிவிக்க 'ashamed' என்ற வார்த்தையை use பண் ணுங்க.

I was ashamed of having lied to my mother. எனது தாயிடம் பொய் சொன் னதை நினைத்து நான் வெட்கப் படுகிறேன்.

பொய் சொல்லியிருக்கக் கூடாது என் பதை உணர்ந்து வருந்தும்போது 'ashamed' என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம்.

சரி, மீண்டும் 'feel' என்ற வார்த்தையை சூழ்நிலைக்கேற்றவாறு எப்படிப் பயன்படுத் துவது என்று பார்க்கலாம்.

என்னவோ தெரியலை. காலையிலிருந்து ரொம்ப 'dull' ஆ இருக்கு. ஜுரம் வர்ற மாதிரி இருக்கு என்பதை I feel feverish என்று சொல்லுங்கள்.

கொளுத்தற வெயிலில் வெளில போயிட்டு வந்ததால இலேசா தலை சுத்தற மாதிரியிருக்கு என்பதை I feel giddy என்று சொல்லலாம். இதையே I feel dizzy (ஐ ஃபீல் டிஸி) என்றும் சொல்வதுண்டு.

சரி, மத்த விஷயங்களை அப்புறமா பேசலாம்.

'எனக்குத் தூக்கம் வருகிறது' என்பதை I feel sleepy என்று சொல்லலாம்.




ஆங்கிலமே அருகில் வா என்ற இத் தொடரைப் படித்து வரும் உங்களுக்கு நிறைய சந்தேகம் எதுவாக இருந்தாலும் please feel free to write to me.

- மீண்டும் அடுத்த வாரம் சந்திப் போம்.

"வெவ்வேறு கலாசாரங்களை பரத நாட்டியத்தின் வழி அறிமுகப்படுத்தப் புதிய தலைமுறையினர் துடிக்கிறார்கள். அறிமுகமில்லாத புதிய புதிய தீம்களையும் தைரியமாக வெளிப்படுத்தி வருகிறார்கள். அப்படியிருக்கப் புதுக் கவிதையை ஏன் முயற்சி செய்யக் கூடாது என்று ஆலோசித்தோம். புதுக் கவிதைக்குப் பரதம் என்ற எங்களது கருத்தைத் தெரிவித்தபோது தொடக்கத்தில் கடும் எதிர்ப்பு. புதுக்கவிதை தாளத்தைத் தொலைத்தது என்றார்கள். நாங்கள் விடவில்லை. வைரமுத்துவின் 'மரங்களைப் பாடுவேன்' என்ற புதுக் கவிதைக்கு மெட்டமைத்து, தாளம் சேர்த்து, பரதம் எதையும் ஏற்கும் என்று நிரூபித்தோம்'' என்கிறார் ஸுஜாதா விஜயராகவன். நாரத கான சபாவின் நாட்டிய ரங்கம் பிரிவின் ஒருங்கிணைப்பாளர். சுதந்திரப் பொன் விழா ஆண்டின் போது, சுதந்திரம் குறித்தப் புதுக் கவிதைகளுக்கு "வந்தே மாதரம்" என்ற தலைப்பிலும் பின்னர் சமயங்களின் ஒற்றுமையை விளக்கிய 'பரதம் சமன்வயம்' என்ற தலைப்பிலும் இரு முறை புதுக்கவிதை நாட்டிய 'உத்ஸவங்கள்' நடத்தியவர்கள் இவ்வாண்டு 'திரிகாலம்' என்ற தலைப்பைத் தேர்ந்தெடுத்தார்கள்.

பரதம் திரிகாலம் - பெஸ்டிவலுக்குப் புதுக் கவிதை எழுதிக் கொடுத்த கவிஞர்கள் என்ன சொல்கிறார்கள். கவிஞர் எஸ். வைத்தீஸ்வரன்:

# வளைந்து

"புதுக் கவிதை பரதத்திற்குச் சப்பட்டு வருமா என்ற சந்தேகம் எனக்கு இருக்கவே செய்தது. காரணம்

புதுக் கவிதைக்கு இசையமைக்க முடியாதே என்ற தீர்மானம்தான். ஆனாலும் இசை அமைப்பதற்கேற்ற புதுக் கவிதைகளை எழுத முடியும் என்பதால் பிரச்னை ஓரளவு குறைந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். நான், குழந்தை என்ற தலைப்பிற்கு முக்காலத்திற்குமாக, தாலாட்டாக, ஒரு தாய் பாடுவதுபோல எழுதியிருந்தேன். தனஞ்செயனின் மாணவர்களான ராகேஷ்குமாரும், ப்ரியதர்ஷினி கோவிந்தும் அற்புதமாகப் பிரதிபலித்தார்கள். நேற்றைய குழந்தை பாட்டியின் கதை கேட்டு, கிளியோடு பேசி, குயிலின் கீதம் கேட்டு, மண்ணிலும், புல்லிலும் விளையாடியது. இது கடந்த காலம் என்பதால் மிதமான தாளத்தில் அற்புதமாக வெளிப்படுத்தினார்கள். நிகழ்காலத்திலோ மண்ணில் இறங்கி குழந்தை விளையாட முடியாது. அத்தனை மாசு. முக்கியமாக இந்தத் தலைமுறைத் தாய்க்குத் தாலாட்டு பாடி பழக்கம் இல்லை. எனவே தெரிந்தவரைப் பாடுகிறார்கள்.

நிகழ்காலத்தை வெளிப்படுத்த வேகமான தாளம் உபயோகித்து வாழ்வின் அவசரத்தை உணர்த்தினார்கள். எதிர்காலத்திலோ குழந்தைத் தன்னைத்தானே தாலாட்டிக் கொள்கிறது. இயந்திரமனிதன் வந்து தொட்டிலை ஆட்டி விடுகிறான். இதை உடல் மொழி மூலம் அற்புதமாக வெளிப்படுத்தினார்கள்! அதற்காக பாரம்பரியத் தன்மையைக் கொஞ்சம் உடைக்க வேண்டியிருந்தது உண்மை.

# கொடுத்த புதுக் கவிதை


• வைத்தீஸ்வரன்


• லஜுதா விஜயராகவன்


• ஞானக்கூத்தன்

“கவிஞர்கள், நடனக் கலைஞர்கள் இடையே விவாதமும், ஆலோசனையும், பகிர்தலும் இருந்தால்தான் இதுபோன்ற புதிய முயற்சிகள் ஓரளவேனும் வெற்றி பெறும். அந்த வகையில் நாட்டியரங்கம் கலைஞர்கள், கவிஞர்களோடு முன்னதாக விவாதித்தது வரவேற்க வேண்டிய ஒன்று. என்றாலும், தொடக்கத்தில் எனக்கு இதில் உடன்பாடு இல்லை” என்கிறார் கவிஞர் ஞானக்கூத்தன்.

“முக்காலப் பெண்களைப் பற்றி நான் எழுதியிருந்தேன்.

புதுமையான படைப்பு என்பதால்தான் புதுக் கவிதை வெற்றி பெற்றது. ஆனாலும் மரபின் தொடர்பை முழுமையாக அதனால் விட்டுவிட முடியவில்லை. அதுபோல்தான் இன்றைய பரதமும். புதுமைகளை மரபின் துணை கொண்டு எதிர்கொள்ளும் கலையாக பரதத்தை நான் பார்க்கிறேன். எனவே புதுக் கவிதைக்குப் பரதம் ஆடுவது பாராட்ட வேண்டிய முயற்சி. நாட்டியரங்கம் கலைஞர்கள் அதில் முழுமையாக வெற்றி பெற்றார்கள் என்பதுதான் எனது மதிப்பீடு.

“நான் மரபுக் கவிஞனாக இருந்து புதுக் கவிதைக்கு வந்தவன் என்ப தால், பரதத்திற்கு ஏற்ற புதுக் கவிதை எழுதுவது எனக்குக் கஷ்டமாக இருக்கவில்லை. எனது கவிதைக்கு ஆடிய கலைஞர்களுக்கு கூடத்தான்” என்கிறார்

— சக்கரத்தாழ்வார்

படங்கள்: உத்ரா



# கருவேலம் பூக்கள்

'சேவல் கூவி விடிஞ்ச கரிசக் குளத்துக்குப் புதுசா நாலு கால் சேவல் வந்துடுச்சி' என்று ஆதங்கப்படுகிறபோதும்...

'கஷ்டம்தான் நம்ம சொத்து, சீதனமா கொடுத்து அனுப்ப வேற என்ன இருக்கு' என்று கண் கலங்குகிற போதும்...

காதலனோடு ஓடத் தயாராகிவிடும் மூத்த மகளின் நடத்தையில் ஏற்படும் படிப்படியான மாற்றங்களைக் கூர்ந்து கவனித்துப் பயப்படுகிறபோதும்... ஒரு ஏழை கரிசல் தாயாகவே, தன்னை மாற்றிக் கொண்டிருக்கிறார் ராதிகா.

காட்டு வேலைக்குச் செல்வதை மறந்து மகனின் வருமானத்தில் கள்ளிக் காட்டுச் சாராயத்தில் புது வாழ்க்கையை அனுபவிக்கும் நாசர், மனைவியைப் பறிகொடுத்துவிட்டு "எனக்கு அடுப்புக்கூட பத்த வைக்கத் தெரியாதே" எனச் சிதை முன்பு அமர்ந்து கதறுகிறபோது உருக்கிவிடுகிறார்.

"ஊருக்குள் வந்த சனியன், பள்ளிக் கூடத்துக்குள்ளேயும் வந்துடுச்சா..." என்று கோபாவேசமாக தீப்பெட்டி லேபிள்களை கிழித்துப் போடும் தலைவாசல் விஜய், தீப்பெட்டி ஆபீஸ் பேருந்தைப் பார்த்து ஓர் அரக்கனைக் கண்டதுபோல பயப்படும்போது, நம் முகத்திலும் அந்த பயம் பரவுகிறது.

வீட்டு வாசல்களில், ஒரு சாக்கில் ஒட்டிய தீப்பெட்டிகளும், இன்னொரு சாக்கில் மக்காச்சோளமும் காய்ந்து கொண்டிருக்கும் காட்சி, சூழ்நிலையின் தீவிரத்தை வார்த்தைகள் இன்றியே உணர்த்துகிறது.

• பூமணி

படத்தின் சீரியஸான போக்கில் நம்மைக் இழந்து தவிக்கிறபோது பொருத்தமான பாடல்கள் இடம் பெற்று இதமாக ஒத்தடம் கொடுக்கின்றன. ஆனால் இளையராஜாவின் முழுமையைத் தேட வேண்டியிருக்கிறது. சுடுகட்டுவதுபோல, கரிசல் பூமியில் தாண்டவமாடும் வறட்சியை ஒவ்வொரு பிரேமிலும் கண்முன் நிறுத்துகிறது தங்கர்பச்சானின் கேமரா.

மருந்துக்கும் துணை நடிகர்களைப் பயன்படுத்தாமல், மேக்கப் இல்லாத முகங்களாகவே மண்ணின் மைந்தர்களையே (நடிக்க?) வாழ வைத்திருக்கும் பூமணி, ஒரு தேர்ந்த சினிமா மொழி தெரிந்தவராகவும் தன்னை வெளிக்காட்டி இருக்கிறார்.

கொஞ்சமும் பிரசாரத் தொனியின்றி சமகாலப் பிரச்னையைக் கதையாகச் சொல்லியிருப்பது படத்தின் மிகப் பெரிய பலம்.

மனமுதிர்ச்சியுடன் உருவாக்கப்பட்ட தமிழ்ப் படங்கள் வரிசையில் இடம் பெறும் கருவேலம்பூக்கள்.

— விஷுவல்தாசன்

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)**



உ

ஸ்ரீ ராம ஜெயம்

ஸ்ரீ விகநஸமஹாகுரவே நம:



ஸ்ரீ சுதர்ஸன மஹா யக்ஞ்ய கமிட்டி.

Old No.5, New No.32, கேசவபெருமாள் சன்னதிதெரு,

மைலாப்பூர், சென்னை – 600 004. போன்: 4610179

## "ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண மஹா யக்ஞ்யம்"
## (1 லக்ஷம் ஆவர்த்தி)

20.11.2000, திங்கள் கிழமை முதல் 24.11.2000 வெள்ளிக் கிழமை முடிய

யக்ஞ்யம் நடை பெறும் இடம்:

T.V.R. சுப்பு செட்டி வசந்த மண்டபம்.

No. 14, மேற்கு சித்ர குளம் தெரு, மைலாப்பூர், சென்னை – 4.

**மஹாயக்ஞ்யம் நடைபெறும் நேரம்:-**

20.11.2000 மாலை 6 மணி முதல் 9 மணி வரை. 21.11.2000 முதல் 24.11.2000 காலை 8 மணி முதல் 11.30 மணி வரை. மாலை 6 மணி முதல் 9 மணி வரை

24.11.2000 மஹாபூர்ணாஹுதி: (பகல்) 12.30

மாலை 5.00மணி: 108 மஹாலக்ஷ்மி திருவிளக்கு பூஜை.

---

| | | |
|---|---|---|
| ரூ. 100/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ மஹா லக்ஷ்மி டாலர். |
| ரூ. 250/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீ மஹாலக்ஷ்மி பெரிய காசு. |
| ரூ. 500/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரமும், ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீ மஹா லக்ஷ்மி காசு. |
| ரூ. 1000/- செலுத்துபவர்களுக்கு | : | ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு, ஸ்ரீ லக்ஷ்மி குபேரதனாகர்ஷண யந்திரம், ஸ்ரீசக்ரம் பொருந்திய ஸ்ரீமஹா லக்ஷ்மி காசு. |
| ரூ. 2000/- செலுத்துபவர்களுக்கு | : | 1 கிராம் தங்க லக்ஷ்மி காசு. ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரம், ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு. ஸ்ரீ சக்ரம் ஸ்ரீ மஹாலக்ஷ்மி காசு. |
| ரூ. 5000/- செலுத்தினால் | : | யாக சாலையில் மஹா சங்கல்பம். 2 கிராம் தங்க லக்ஷ்மி டாலர் ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண யந்திரம். ஸ்ரீ சக்ரம் பொருந்திய ஸ்ரீலக்ஷ்மி காசு. யாகம் முடிந்தவுடன் கும்பதீர்த்தம் சேர்க்கப்படும். மற்றும் ஸ்ரீ மஹா லக்ஷ்மி திருவிளக்கு வழங்கப்படும் |

---

மிக மிக முக்கியமாக M.O.,D.D அனுப்பும் பக்தர்கள் தங்கள் பெயர், விலாசம் மிக விவரமாக கேப்பிட்டல் எழுத்தில் எழுதவும். (பெயர், வீட்டு நெம்பர், தெரு, ஊர், போஸ்டு தாலுக்கா, ஜில்லா, பின்கோடு.)

M.O.,D.D அனுப்பும் அட்ரஸ்.

**"ஸ்ரீ சுதர்ஸண மஹா யக்ஞ்ய கமிட்டி"**

**S. ஸ்ரீரங்க ராஜபட்டாசாரியார்.**

Old No.5, New No.32, கேசவபெருமாள் சன்னதிதெரு, மைலாப்பூர், சென்னை – 600 004.

போன்: 4610179

---

**ஸ்ரீ லக்ஷ்மி குபேர தனாகர்ஷண மஹாயக்ஞ்யம் டிக்கட் கிடைக்கும் இடம்:**

S.ஸ்ரீரங்கராஜ பட்டாசாரியார்.

Old No.5, New No.32, கேசவபெருமாள் சன்னதிதெரு, மைலாப்பூர்,

சென்னை – 600 004. போன்: 4610179

